20.6.2003 விலை ரூ.6.00

# குங்குமம்

வேதாத்திரி மகரிஷி எழுதும்

## வாழ்க வளமுடன்!

தொடர் ஆரம்பம்

# வேதாத்திரி மகரிஷி எழுதும்

# வாழ்க வளமுடன்!

வாங்கும் கடனும் தேங்கும் பணமும் வளர வளர வாழ்வைக் கெடுக்கும். பணத்திற்கும் பண்புக்கும் நடக்கும் போட்டியில் குணத்தில் மனிதர்கள் குறைந்தோராகின்றனர், உடையில் ஒழுக்கம் உள்ளத்தில் கருணை, நடையில் கண்ணியம் நல்லோர் பண்பு. உயிர் சக்தியின் இயக்க விளைவுதான் எண்ணம்.

## குங்குமம்

20.6.2003 இதழில் ஆரம்பம்

"வாழ்க வையகம், வாழ்க வளமுடன்" வார்த்தை கேட்க இனியதாக இருக்கிறது. நாம் சொல்லிப் பார்த்தால் சொல்வதற்கும் இனியதாக இருக்கிறது. உலக மக்கள் அனைவரும் வளமுடன் வாழ வாழ்த்தும் விதமாக 'வாழ்க வையகம். வாழ்க வளமுடன்'. தனக்கு எதிர்ப்பட்ட அன்பர்களை 'வாழ்க வளமுடன்!'- என்று வாழ்த்தும் அன்பர்களை எங்குமே காண்கிறோம். 'வாழ்க வளமுடன்!'- யார் கண்டுபிடித்த வார்த்தை? இவர்கள் எந்த இயக்கத்தைச் சேர்ந்தவர்கள்?

தமிழ் மொழியில் இவ்வளவு அழகாக இரண்டு வார்த்தைகளைச் சேர்த்து இந்தத் தாரக மந்திரத்தை அமைத்தது யார்? இந்த மந்திரம் செய்யும் அற்புதம்தான் என்ன?

# எது வாழ்த்து?

வீடுகளின் முகப்புகளில் ஒட்டப் பட்டிருக்கும் வாசகம் "வாழ்க வளமுடன்." லாரிகளில், கார்களில், இரண்டு சக்கர சைக்கிளில்கூட எழுதப்பட்டுள்ள வாசகம் "வாழ்க வளமுடன்." காபி சாப்பிட ஒரு ஓட்டலுக்குச் சென்றால், ஓட்டலின் முன்னறையில் எழுதப்பட்டிருக்கிறது "வாழ்க வளமுடன்."

இந்த வாழ்த்தைப் படித்தவுடனேயே அந்த ஓட்டலில் சாப்பிடத் தோன்றுகிறது.

தனியார் மருத்துவமனைக்குச் சென்றால் அங்கேயும் 'வாழ்க வளமுடன்.' படித்தவுடனேயே நோயெல்லாம் போய்விட்டது போல் ஒரு உள்ளுணர்வு.

பாரதி சொன்னான், "எங்கெங்கு காணினும் சக்தியடா" என்று. ஆனால் இன்று எங்கெங்கு காணினும் "வாழ்க வளமுடன்"தான்!

'வாழ்க வளமுடன்' என்று சொல்பவர்களைப் பார்த்தாலே "இவர் ஒழுக்கத்தில், பண்பாட்டில், அறிவில், செயல்பாட்டில், பணிவில், நன்னெறியில் சிறந்தவர்" என்பதைக் காட்டுகிறது.

**"வாழ்த்தி வாழ்த்தி எப்பேர்ப்பட்டவர்களையும்கூட**

இந்த உலகை ஆட்டி வைக்கும் இந்த வாசகம் யாருடையது?

மந்திரத்தைச் சொன்ன மகான், தத்துவஞானி வேதாத்திரி மகரிஷி அவர்களைச் சந்திக்கச் சென்றால், இரண்டு கைகளையும் கொண்டு வாழ்த்தியபடியே "வாழ்க வளமுடன்" என்றே அவரும் நம்மை வரவேற்கிறார்.

'இந்த மந்திர வாசகம் எப்போது உதித்தது? எப்படி இந்த அளவு பல்கிப் பெருகிற்று?'

கேட்டோம்.

மனவளக் கலை மன்ற அன்பரிடமிருந்து பதில் வருகிறது.

"துல்லியமாகச் சொல்ல முடியவில்லை! 1964ல் கூடுவாஞ்சேரி அன்பொளி பதிப்பகம் வெளியிட்ட "ஞானமும் வாழ்வும்" என்று நூலின் அணிந்துரையின் முடிவில் "வாழ்க வையகம், வாழ்க வளமுடன்" என்று சுவாமிஜி எழுதியுள்ளார்.

அப்போதிருந்தே அவர் தனது நண்பர்களுக்கு எழுதிய கடிதங்களின் தொடக்கத்திலும், முடிவிலும் "வாழ்க வையகம், வாழ்க வளமுடன்" என்று எழுதிக் கையெழுத்திட்டிருக்கிறார்.

இவர் தொடங்கிய உலக சமுதாய சேவா சங்கத்தின் அன்பர்கள் (மன வளக் கலை மன்ற அன்பர்கள்) அனைவரும் ஒருவரையொருவர் சந்திக்கும்போது "வாழ்க வையகம், வாழ்க வளமுடன்" என்கிறார்கள்"- என்று தெரிவித்தார்.

இனி மகரிஷி அவர்களின் குரலைக் கேட்போமா?

"ஏது வாழ்த்து?

உடலில் உயிர் ஓடிக்கொண்டே இருக்கிறது. உயிருக்கு சுற்று வட்டம் எல்லை கிடையாது. உயிரின் சுழற்சி வேகம் பிரபஞ்சத்தையெல்லாம் தாண்டிச் செல்லக்கூடியது.

இறை நிலையே உயிராக இருக்கிறது. உயிரின் அசைவு மனமாக இருக்கிறது. உயிரில், இதுவரையில் பரிணாமத்தில் வந்த அத்தனை செயல்களும்

அடங்கியே இருக்கின்றன.

மனதின் வேகம் வரையறுக்க முடியாதது. மனதின் வேகத்தைக் குறைத்துப் பழகியவர்களே யோகிகள், மகான்கள். அவர்களுடைய மனதிற்கு வலுவும் அழுத்தமும் அதிகம். அவர்களே உணர்ச்சி வயப்பட்ட நிலைகளிலிருந்து விடுபட்டவர்கள். அவர்களால் துன்பங்கள் இல்லை.

ஆனால் சாதாரணமான மனிதர்களாகிய நாம் உணர்ச்சிவயப்பட்ட நிலையில் பல செயல்களைச் செய்கிறோம்.

ஒருவரைக் கடிந்து கொள்கிறோம். அல்லது மனம் நோகச் செய்கிறோம். அதனால் பல துன்பங்களை நாமும் கொள்கிறோம். பிறருக்கும் பல துன்பங்களை விளைவிக்கிறோம்.

ஆனால் வாழ்த்துக் கூறும்போது உணர்ச்சி வயப்பட்டு வாழ்த்துக் கூற முடியுமா? நண்பர்கள் ஒருவரோடு ஒருவர் பேசிக் கொண்டிருக்கும்போது கூட வாழ்த்துக் கூறுவதைப் பார்க்கிறோம்.

அதாவது பேசிக்கொண்டே இருக்கையில் இடையிலே யாராவது வந்து விட்டால் அந்த மூன்றாவது மனிதரிடம் ஒப்புக்காக "வாழ்க வளமுடன்" என்று கூறிவிட்டு, "சரி, நீங்கள் தொடர்ந்து சொல்லுங்கள்" என்று நண்பரிடம் கவனத்தைத் திருப்பிக் கொள்கிறார்கள். இது உண்மையிலேயே வாழ்த்தாகுமா என்றால் ஆகாது.

வாய் மட்டும் வழக்கம் போல் சொல்லிவிட்டது. அது பழக்கம்தான். அவ்வாறின்றி உள்ளத்தால் அந்த இடத்தில் நின்று அவர்கள் வாழ வேண்டும் என்று நினைத்து வாழ்த்துவது என்பதே உண்மையான வாழ்த்து.

உள்ளத்தால் வாழ்த்தும்போது மனம் நுண்ணிய அலை இயக்கத்திற்கு மாறுகிறது. அப்போது மனதுக்கு வலு, தெளிவு, அமைதி கிடைக்கிறது. அதை ஒட்டி நம்முடைய மனம் விரிந்து பலரோடு ஊடுருவி நிறைந்து

## "நண்பர்களாக மாற்றிவிட முடியும்."

உயிர்க்கலப்பு ஏற்படக் கூடிய நிலை இதெல்லாம் அதிகமாகிறது.

அந்த நிலையில் வாழ்த்துக் கூறும்போது நமக்குத் தெரியாமலேயே இரண்டு பேருடைய அடித்தளமான உயிர் நிலையில் ஒரு பரஸ்பர நெருக்கம் ஏற்படுகிறது. ஊடுருவிப் பாய்ந்து நிற்கிறது. ஒரு தடவை, இரண்டு தடவை வாழ்த்த வாழ்த்த நமக்கும் அவருக்கும் ஒரு தொடர் இயக்கம் வந்து விடுகிறது.

அதனால் எப்போதும் ஒரு அலை வீசிக் கொண்டே இருக்கும். அந்த அலை நாம் நினைத்தாலும் நினைக்காவிட்டாலும் முன்பே ஏற்படுத்திவிட்ட தொடர்புப்படி வந்து கொண்டும், போய்க் கொண்டும் இருக்கும். அந்தத் தொடர் அறுபடாது.

அதனால் அவருக்கு வேண்டியதை நாம் செய்யவேண்டும் என்று நினைப்பதும், நமக்கு வேண்டியதை அவர் செய்ய வேண்டும் என்று நினைப்பதும் சாதாரண நிகழ்ச்சியாக மாறிவிடும்.

அப்படி வாழ்த்தி வாழ்த்தி எப்பேர்ப்பட்டவர்களையும் கூட நண்பர்களாக மாற்றிவிட முடியும். அவர்களுடைய செயல்களைத் திருத்திவிட முடியும். எண்ணங்களை ஒழுங்குபடுத்திவிட முடியும். நல்லவர்களாக மாற்றிவிட முடியும்.

உலக சமுதாய சேவா சங்கத்தில் தவ முடிவில் வாழ்த்துச் சொல்கிறோம். தவத்தில் இருக்கும்போதே நாம் சாதாரணமாக நுண்ணிய மன அலைக்கு வந்து விடுகிறோம். மூளை செல்கள் நுண்ணிய இயக்கத்திற்கு வந்துவிடும். அப்போது 'வாழ்க வளமுடன்' என்று வாழ்த்தும்போது அந்த எண்ணத்திற்கு வலு அதிகம்.

உதாரணமாக, ஒரு வில் இருக்கிறது. அம்பு இருக்கிறது. அம்பு எய்வதற்கு எவ்வளவு தூரம் நாணை இழுத்து விடுகின்றோமோ அவ்வளவு தூரம் அம்பு வேகமாகச் செல்லும்.

“ ஒரு மாக்கை வாழ்த்திக்கொண்டே இருக்க மாம்

அதேபோல் நமது மனம் எந்த அளவுக்கு நுண்ணியதாக இருக்கிறதோ அந்த அளவுக்கு நாம் கொடுக்கும் வாழ்த்திற்கோ, சாபத்திற்கோ வேகம் அதிகம். அதனால் சீக்கிரமாகச் செயலுக்கு வந்துவிடும். அதனால் நமது, எண்ணம் சீக்கிரமாகச் செயலுக்கு வந்து பயன் விளைவிக்கும்.

முதலில் நாம் நம்மையே வாழ்த்திக் கொள்கிறோம், “உடல் நலம், நீளாயுள், நிறைசெல்வம், உயர் புகழ், மெய்ஞ் ஞானம் ஓங்கி வாழ்வோம்” என்று.

ஒரு அன்பர் கேட்டார், 'நாம், தெய்வத்தன்மையில் இருந்து தவம் செய்தபிறகு இவையெல்லாம் கேட்க வேண்டுமா?' என்று.

'பொதுவாக எல்லோருக்கும் இவையெல்லாம் தேவை. இவற்றில் எது எது வேண்டாமோ அதை எடுத்துவிட்டு மி எஞ்சியதை வைத்துக் கொள்ளுங்கள் என்றேன். அந்த அன்பர் சிறிது நேரம், சிந்தித்து விட்டு, 'எல்லாமே தேவை தான்' என்றார்.

நாம் வாழும்போது நம்முடைய வாழ்க்கையில் உறுதுணையாக இருக்கக் கூடிய வாழ்க்கைத் துணையுடன் உறவு சீராக இருக்க வேண்டும். அதனால் வாழ்க்கைத் துணையை வாழ்த்த வேண்டும் என்றபோது ஒரு அன்பர், “இதுவரைக்கும் மனைவி கணவனுக்காகப் பிரார்த்திக்க வேண்டும் என்பதுதான் நடைமுறைப் பழக்கத்தில் இருந்து வந்திருக்கிறது. கணவன் மனைவியை வாழ்த்துவது என்பது இதுவரையில் இல்லை. அப்படி வாழ்த்தும்போது எவ்வளவு இனிமையாக இருக்கிறது என்பதை உணர்கிறேன்'' என்றார்.

இப்படி, குழந்தைகளை வாழ்த்தும் போது குழந்தைகள் நல்லவர்களாகவும், ஒழுக்கசீலர்களாகவும், பெற்றோர்களுக்கு மரியாதையும் மதிப்பும் கொடுப்பவர்களாகவும் இருக்கிறார்கள்.

உடன்பிறந்தோர்களை, சுற்றத்தார்களை, நண்பர்களை, நம்மோடு தொழில் துறையில் கடமையாற்றுபவர்களை வாழ்த்தும்போது நமக்கும் அவர்களுக்கும் இடையே இருந்த பிணக்குகள் மாறி, நமக்கு ஒத்தவர்களாக மாறிவிடுகிறார்கள். இப்படி வாழ்த்தி வாழ்த்தி வாழ்த்தினாலேயே வளம் காணலாம்.

இந்த உலகத்தை வாழ்த்துகிறோம். இந்த உலகத்தை வாழ்த்தும்போது

அந்த அலை எங்கே போய் வீசுகிறதோ அங்கெல்லாம் போய் பிரதிபலித்து வருகிறது. அதேபோல ஒரு மரத்தை வாழ்த்திக் கொண்டே இருக்க மரம் நிறையப் பழம் கொடுக்கிறது. அதை நான் பார்த்து இருக்கிறேன். மரத்தை அலட்சியம் செய்து விட்டால் அதுவும் நம்மை அலட்சியம் செய்து விடும்.

நாம் வாழ்த்தும்போது நமது மனம் இறை உணர்வோடு ஒன்றி விடுகிறது. இவ்வாறு வாழ்த்தி வாழ்த்திப் பழகிக் கொண்டவர்களுக்கு எல்லாச் செயல்களும் அந்த இறையோடு இணைந்த செயலாக நற்செயலாக உருவாகிறது. இப்படி ஆயிரம் தடவை வாழ்த்தி விட்ட பிறகு ஆயிரத்தோராவது தடவை வாழ்த்தினால் என்ன பலனோ அந்த அளவுக்கு அழுத்தம் பயன்பெறும்.

வாழ்த்தினால் ஒரு மாதத்திலேயே குடும்பத்தில் உள்ளவர்களிடையே நல்ல படியான சூழ்நிலை உருவாவதைக் காணலாம். நாம் வாழ்த்தின் மூலம் உலகத்தையே மாற்றியமைத்து விடலாம்.

"நிறையப் பழம் கொடுக்கிறது."

உலகம் முழுவதும் உள்ள நல்லவர்களில் சிலர், வாழ்த்திக்கொண்டே இருந்தால் போர் வெறி கொண்ட உலகத் தலைவர்களின் மனதைத் தெளிய வைக்க முடியும். பிணக்கு கொண்ட இரு தலைவர்களை மட்டும் வாழ்த்தினால் போதாது. நாட்டு மக்களையும் வாழ்த்த வேண்டும். அப்போது இரண்டு நாடுகளுக்கிடையே உள்ள போரையும் நிறுத்திவிடலாம். ஆகவே, இந்த முறையில் வாழ்த்தின் மூலமாக உலகத்தில் நல்ல எண்ணங்களையே பரவச் செய்ய முடியும்.

நமக்குத் தீமை செய்தவர்களையும் ஏன் வாழ்த்த வேண்டும் என்றால் "அவர் அறியாமையினாலேதான் அவ்வாறு செய்தார். நம்முடைய கர்மச் சுழலின் விளைவு அவரைத் தீமை செய்ய இயக்கியது. எனவே அவர் செய்தார். அவருக்கு உள்ளாக இயங்கிக் கொண்டிருப்பதும் எல்லாம் வல்ல இறை நிலையே. எனவே அவரை மனதார வாழ்த்தி எனது தீய பதிவு ஒன்றை அகற்ற உதவிய அவருக்கு நன்றி செலுத்துவேன்'' என்ற தத்துவ விளக்கம் நம் செயலுக்கு வந்து இயல்பாகிவிட்டதென்



றால் அதுவே நாம் வாழ்க்கையில் வெற்றிப் பாதையில் முன்னேறிச் செல்கிறோம் என்பதற்கு அடையாளமாகும்.

நாமும் நம்மை வாழ்த்திக் கொள்வோம். பிறரையும் வாழ்த்துவோம். நாமும் நலம் பெறுவோம். பிறரையும் நலம் பெறச் செய்வோம்.

வாழ்க வையகம், வாழ்க வளமுடன்.

*(அடுத்த வாரம்)*

- எஸ்

வாசகர்களே, இந்த அத்தியாயத்தில் நாம் கவலை ஒழித்தல் என்பது பற்றி சிந்திக்கலாமா?



இன்று எல்லார் உள்ளத்திலும் கவலை இருக்கிறது!

அந்தக் கவலைகளுக்கு காரணம் என்னவென்று தெரிந்து கொண்டு, பின்பற்ற வேண்டிய முறைகளை வகுத்துக் கொண்டு, அதற்கேற்ப நாம் வாழ்க்கை நடத்தினால் மனித வாழ்வில் கவலைக்கு இடமே இல்லை!

கவலை என்பது- மனிதனுடைய தன் முனைப்புக்கும் இயற்கையினுடைய நெறியான இயக்க நிகழ்ச்சிகளுக்கும் இடையே உள்ள போராட்டம்தான்!

இயற்கையை மனிதன் உணராததினால்... இயற்கைக்கு முரணாக, இயற்கையின் நியதிக்கு அப்பாலாக... இவன் எண்ணுகிறான். அதன்படி செய்கிறான்.

எல்லாமே ஒரு நியதியோட இயங்கிக் கொண்டிருக்கிறது, இயற்கையில்!

# வாழ்க்

# வேதாத்திரி மகரிஷி

# 2 வாழ்க வளமுடன்!

இயற்கையை அறியாத போது, அதை புரிந்து கொள்ளாத போது... பொருள், புகழ், அதிகாரம், புலன் இன்பம் என்ற நான்கு வகையில்... இச்சையாக, பற்றாக... அவையே பெரிதென்று மனிதன் எண்ணுகிறான்.

எந்த வகையிலும் ஒவ்வொரு மனிதனுக்கும்... பொருள், புகழ், அதிகாரம், புலன் இன்பம் அமைஞ்சுதான் இருக்குது!

ஆனாலும், அறிவை அறியாததினால அவனுடைய திசை மாற்றம் ஒருவருக்கு மேற்சொன்ன எல்லாம் அமைந்த போதிலும் கூட 'போதும்!' என்ற எண்ணமோ, சொல்லோ வராது!

எந்த இடத்தில் இருந்தாலும் 'அதற்கு மேலும் வேணும்! இன்னம் வேண்டும்! இன்னம் வேண்டும்'

இவன் ஏன் அதற்கு மாற்றி எண்ணுகிறான் என்றால் அதைத் தான் 'தன்முனைப்பு' என்று சொல்லுவது!

இயற்கையை அறிவதற்காகவே அமைந்த அறிவின் வேகம்

என்றுதான் அவனுடைய எண்ணம் உயர்ந்து கொண்டே போகிறது.

காரணம்?

மனிதனுடைய அறிவானது அகன்றதாரமாக உள்ள இயற்கையை... அந்த இயற்கையைத் தொட்டு நடைபெறக்கூடிய நிகழ்ச்சிகளை, காலகாலமாக தொடர்ந்து இயங்கிக் கொண்டு வரக்கூடிய பிரபஞ்ச இயக்கங்களை சார்ந்துதான் நடந்து வருது.

குறுகிய எண்ணத்தினாலே, 'இது அப்படி நடக்க வேண்டும்! அது இப்படி நடக்க வேண்டும்! அவர் அப்படி இருக்க வேண்டும்' - என்று மனிதன் எண்ணுகிறான். திட்டமிடுகிறான்.

யாருக்கு?

பிறருக்கு!

**பி**றரை திருத்துவதற்காக நாம் உலகிலே வரவில்லை.

நாம் வாழ வந்திருக்கிறோம்! எல்லார் மத்தியிலும் நாம் வாழ்ந்தாக வேண்டும்.

'அவரவர்களுடைய விருப்பம் என்ன? ஆற்றல் என்ன? அந்த ஆற்றலோடு கலந்து கொண்டு நாம் பயன்பெறுவது எப்படி?' - என்று போனால்... ஒருவனின் தன் முனைப்பு அடங்கி விடும்!

இயற்கை முன் நின்று இவனை வழி நடத்தக்கூடிய அறிவாக அது மலரும்!

அப்ப கவலை என்றாலே எதிர் பார்த்தல்! ஏ...மாந்து போதல்! எதிர் பார்த்து எதிர்பார்த்து ஏமாற்றமடைவது.

இயற்கைக்கு முரணாக எதிர்பார்த்தால்??! இயற்கையாக நடைபெற வேண்டியதுதான் நடக்கும்! அப்ப ஏமாற்றந்தானே? அதை இவன் ஒத்துக் கொள்வதில்லை!

எதிர்பார்த்ததற்கும் இயற்கையாக நடந்ததற்கும் உள்ள வித்தியாசம் அங்கே கவலையாக உருவெடுக்கிறது.

இதே போல வாழ்க்கைச் சிக்கல்கள்லகூட நீங்க எதையெடுத்துப் பார்த்தாலும்... 'இப்படிதான் வரணும்'. இப்படித்தான் நடக்கணும்!' - என்று மனிதன் கற்பனையாக எண்ணிக் கொண்டிருக்கின்றான்.

**தே**வைக்கும், தன்னிடமுள்ள இருப்புக்கும் எங்கே வித்தியாசமிருக்கிறதோ அங்கேயெல்லாம் மனிதன் கவலைப் படுகிறான்.



ஒரு குடும்பத்தில எடுத்துக் கொண்டா லும்கூட, 'ஒவ்வொருவரும் மற்றவர் இவ்வாறு நடக்க வேண்டும் அதுதான் என்னுடைய ஆசை!'-யென்று இவன் நினைக் கின்றான்.

ஒவ்வொருவருக்கும் உலகிலே வாழ உரிமை இருக்கிறது. ஒவ்வொரு வருக்கும் போதிய அனுபவம் இருக்கிறது. அதற்கான அறிவும் இருக்கிறது.

'அந்தந்த உயர்விலே, சிறப்பிலே அவரவர்கள் வாழ்ந்து கொண்டிருக் கிறார்கள்!'- என்று மதிப்பளிக்க மனிதன் தயாராக இருந்தால்- அங்கே கவலையே இல்லை.

கவலை என்பது ஒருவர் கருத்துக்கும் மற்றவர் கருத்துக்கும் ஏற்படும் முரண் பாடு!

இயற்கைக்கும் தன்னுடைய எண்ணத் துக்கும் ஏற்படும் முரண்பாடு.

இந்த முரண்பாடு இல்லாமல் மனிதன் வாழ வேண்டுமானால் எதிர்ப்பார்ப்பை விட்டுடணும்.

இயற்கையினுடைய நியதி என்ன?

செயல், விளைவு!

எந்தச் செயல் செய்தாலும், அந்த இடம், காலம், தொடர்பு கொள்ளும் பொருளுக்கேற்ப- அங்கே, தக்க விளைவு உண்டாகும்.

அந்தச் செயலை செய்கிறவனுடைய நோக்கத்திற்கு ஏற்றவாறு... அது இன்பமாகவோ, துன்பமாகவோ அமைகிறது.

துன்பமாக அமைந்தால்-

தான் பண்ணியதில தான் தப்பு... தன் திறமையிலதான் குறை என்று அவன் எண்ணிக் கொள்வ தில்லை. திருத்திக் கொள்வ தில்லை!

எப்பொழுதுமே ஒவ்வொரு மனிதனும் தன் முனைப்பு என்கிற அகம்பாவத்தினால், ஈகோவினால் 'அவர் இப்படி நடக்கணும். இவர் இப்படி நடக்கணும்! என் சொல்லைத் தான் அவர் கேட்கணும்' என்று கட்டுப்படுத்த ஆரம்பித்து விடுகிறான்.

ஏனென்றால் தன்முனைப் பில் இரண்டு விதமான ஆசைகள் உள்ளடங்கி இருக்கு.

1. அதிகாரம்

2. பொருள்பற்று

பொருள்பற்று என்பது 'தனது' என்பது.

'தான்' என்பது அதிகாரம்! தன்னிடத்திலே பிறர் அடங்கி நிற்க வேண்டும் என்று ஆரம்பித்து... தான் என்பது விரிந்து கொண்டே போகும்.

ஆனால் ஒவ்வொருவருக்கும் அதே ரீதி தன் முனைப்பு இருப்பதினாலே எதிர்பார்த்ததற்கும், இயல்பாக நடந்ததற்கும் உள்ள வித்தியாசம் மனதிலே அங்கே கவலையாக உருவாகிறது.

வீட்டில் பெண்ணுக்கு இன்னும் திருமணம் நடைபெறவில்லை! பையனுக்கு கல்லூரி அட்மிஷன் இன்னும் கிடைக்கவில்லை! அலுவலகத்தில் பிரச்சினைகள். தான் இத்தனை அன்பாக, ஒத்தாசையாக இருந்தும் உழைத்தும் கணவன் தன்னை புரிந்து கொள்ளவில்லை. இத்தனை மருந்து எடுத்துக் கொண்டும் நோய் தன்னை விட்டு ஏன் விலகவில்லை?

என்று இப்படி கவலைகளிலேயே மூழ்கிக் கொண்டிருக்காமல், அதன் அடியாதாரம் பார்த்து சீர் செய்ய வேண்டும்.

கவலை என்பதை அப்படியே வைத்துக் கொண்டிருந்தால், அது, நம்முடைய ஜீவகாந்த சக்தியை வடிகட்டி விடும்.

நாட்டுப்புறங்கள்ல ஏற்றம் இறைக்க அந்தக் காலத்தில் ஒரு முறை உண்டு. அதாவது, 'கவலை'ன்னு ஒன்றை வைத்து கிணற்றிலிருந்து தண்ணீரை அள்ளி இறைக்கறதுக்குப் போட்டாங்க!

மாட்டுத் தோலில் பாத்திரத்தைப் போல ஒண்ணு செஞ்சு, கிணத்துக்குள்ள இறக்கி தண்ணீரை இறைத்து விடுவார்கள். அதுக்குக் 'கவலை'ன்னு பேர் வச்சாங்க!

சீக்கிரமாக தண்ணியை வடிகட்டி விடறதனால அதுக்குப் பேர் 'கவலை'.

எப்படி?

'கவலை' என்கிற ஏற்றம் கிணற்றிலிருந்து தண்ணீரை எப்படி இறைத்து விட்டு விடுகிறதோ... அதேபோல மனிதனின் கவலை, அவனின் ஆற்றலை ஜீவ காந்த சக்தியை வடிகட்டி விடுகிறது. ஆமாம்! கவலை, நம்ம எஸ்ஸென்ஸை, சக்தியை நம் உடலிலிருந்து வெளியேற்றி விடுகிறது.

அதுசரி, மனிதன் கவலையற்று வாழ என்னென்ன மாற்று வழிகளை பின்பற்ற வேண்டும்?

(அடுத்த வாரம்)

# ரசிக்கலாம்! சிரிக்கலாம்!

"போஸ்டர் கலாச்சாரம் ரொம்பவும் முற்றிப் போய்விட்டது."
"எப்படிச் சொல்கிறீர்கள் ?"

"சனிப்பெயர்ச்சியில் இடம் மாறும் சனி பகவானே வருக வருக'னு நோட்டீஸ் ஒட்டறாங்களே!''

எம்.

"அரசர் குறும்புக்காரரா ? எப்படி ?''

"ஏழைப் பெண்களுக்கு இலவசமாக நைட்டி வழங்கச் சொல்லி யிருக்கிறாரே!"

எஸ்.மோகன்

# வாழ்க



'வந்த கவலை அப்படியே போய் விடணும்' என்று யாரும் நினைக்கக் கூடாது.

இவனுக்கு ஒரு பொருள் வேணு மானால் கவலைப்படறான்!

அந்தப் பொருளே இல்லாம எப்படி வாழ முடியும் என்று சிந்திக்கவும், அந்தப் பொருளுக்குப் பதிலாக இன்னும் எந்தப் பொருளை வைத்து அந்த வேலையை முடிக்க லாம் என்கிற சிந்தனையையும் ஒரு மனிதன் எடுத்தானேயானால்

வளமுடன்!

வாழ்க்கைக்கு உதவும் உன்னதத் தொடர்

# நால் வகைச் சிக்கல்கள்!

வேதாத்திரி மகரிஷி

3

நிச்சயம் அதை வெற்றி கொள்ளலாம்!

அதன்றி, நா, கொஞ்சம்கூட, என்னுடைய ஆசையில நான் விரும்பிய விருப்பத்தில இருந்து இறங்கி வரமாட்டேன். 'இதே போலத்தான் நடப்பேன்! என் இந்த எண்ணத்துக்கும் செயலுக்கும்தான் எல்லோரும் கட்டுப்படணும்!' என்று ஒருவன் நினைக்கறபோது கட்டாயம் அங்கே மோதல்தான் ஏற்படும். பிணக்கு கூடும். கவலையும் ஆரம்பமாகும்!

ஆக, கவலையை ஒழிக்க வேண்டுமானால்... 'இயற்கைக்கு முரணாக எதிர்பார்த்தல்' என்பதை ஒழிச்சுடணும்!

**இ**த்தகைய ஆராய்ச்சியும், அறிவும் வேண்டுமானால் வாழ்க்கையில் நீண்ட காலம் அனுபவம் பெற்றுத் தான் நாம் வரவேண்டியதாக இருக்கிறது. அதற்குள்ளாக பல சிக்கல்கள்.

ஒவ்வொரு சிக்கலும் மனிதனுக்கு கவலையாதான் வருது. அப்ப கவலை என்பதை சிக்கல் என்று சொல்றோம். அதைத்தான் 'பிராப்ளம்' என்று சொல்வார்கள்.



நம் வாழ்க்கையில் சிக்கல் வரக் கூடாது என்று நினைப்பதே ஒரு பெரிய சிக்கல்.

உலகிலே நாம் வாழ்ந்து கொண்டிருக்கிறோம். அதற்குப் பொருள் தேவை. அந்தப் பொருளைப் பெறுவதற்கும், அனுபவிப்பதற்கும், அதை வைத்துக் கொண்டிருப்பதற் கும் மக்களுடைய உதவி தேவை.

இந்தப் பொருளுதவி, மக்களுதவி இந்த இரண்டும் பெறுவதற்கு நாம் விரும்பிய அளவிலே, முறையிலே, காலத்திலே இதெல்லாம் கிடைப்பதற்கு முடியாது.

அந்த இடத்திலே மனித மனம் பொறுமை கொள்ள வேண்டும். ஏற்றுக்கொள்ள வேண்டும்!

இவன் விரும்பறதுக்கு முன்ன பின்ன தள்ளி இருந்தாலும் அவன் பொறுமை கொள்ள வேண்டும்.

தன்னுடைய எண்ணமே தவறு என்று நினைக்கிறபோது அதை விட்டுவிட வேண்டும். பொறுமை, விட்டுக்கொடுத்தல், தியாகம் என்ற மூன்று வழிகளிலும் மனதைப் பழகிக் கொள்ள வேண்டும்.

அன்பர்களே, இவ்வாறு, பிறர் மனம் எந்த நிலையிலே இருக்கிறது? விருப்பம் எப்படி இருக்கிறது? அவர்களுடைய ஆற்றல் எப்படி இருக்கிறது? என்று அறிந்து அவர்களோடு எந்த முறையிலே நாம் இணைந்து செயல்பட வேண்டும் என்ற எண்ணத்தோடு நாம் வாழ ஆரம்பித்தால் உலகெங்கும் உள்ள எல்லாரும் நம் நண்பர்களே என்றாகும்.

எவ்வளவுக்கு எவ்வளவு நம்மைச் சுற்றி உள்ளவர்கள் நமக்கு நண்பர்களாக இருக்கின்றார்களோ, அது தான் ஒருவருடைய புதையல், இருப்பு, செல்வம் என்று சொல் றோம்.

அப்படி ஏற்படுத்திக் கொள்பவர்கள்தான் வாழ்க்கையிலே வெற்றியாக வாழ முடியும்.

**வா**ழ்க்கையில் நாம் கொண்ட எண்ணங்களினாலோ, செய்த தவறுகளினாலோ, தாமாகவோ சில சிக்கல்கள் ஏற்பட்டிருக்கலாம்.

ஒரு பேப்பர் எடுத்துக் கொண்டு, அதில் உங்கள் நினைவில் இருக்கிற

உங்களின் அத்தனை சிக்கல்களையும் எழுதிக் கொள்ளுங்கள்.

அதற்குப் பிறகு, நான்கு தாள்கள் எடுத்து கீழ்க்காணும் நான்கு தலைப்புகளை அதில் தனித்தனியாக, எழுதிக் கொள்ளுங்கள்.

என்னென்ன தலைப்புகள்?

1. அனுபவித்தே ஆக வேண்டிய சிக்கல்கள்.

2. அலட்சியம் செய்துவிட வேண்டியவைகள்.

3. காலத்தால் தீர்ந்துவிடும் சிக்கல்கள்.

4. உடனடியாகத் தீர்த்தே ஆக வேண்டியவைகள்.

முதலில் நாம் எழுதி வைத்திருக்கிற வாழ்க்கைச் சிக்கல்களில் உள்ளனவற்றை, மேற்சொன்ன தலைப்புகளின் கீழ் பிரித்து எழுதிக் கொள்ளுங்கள்.

உதாரணமாக-

ஒரு தொழிற்சாலையில் ஒருவன் பணிபுரிகிறான். பணி நேரத்தில் எதிர்பாராமல் ஒரு விபத்து ஏற்பட்டு விடுகிறது. அதில் அவன் ஒரு விரல் போய் விடுகிறது.

நடந்து விட்டது!

அவன் என்ன செய்ய வேண்டும்?

நடந்ததை ஏற்றுக்கொள்ள வேண்டும். மிச்சமுள்ள நான்கு

**தினமும் காலையிலிருந்து சாயங்காலம் வரைக்கும் நம்மைப் பார்த்து 'ஏணி, ஏணி!'—ன்னா சொல்லிட்டு இருப்பான்?**

விரல்களை வைத்து, அந்தக் கையை வைத்து எவ்வளவு தூரம் செயல்பட முடியுமோ, எந்த அளவு சிறப்பாக வாழ்க்கை நடத்த முடியுமோ அதைச் செய்ய வேண்டும்.

அதை விட்டுவிட்டு, 'விரல் போச்சே, விரல் போச்சே!' -என கவலை மட்டுமே பட்டுக் கொண்டிருந்தால் வாழ முடியுமா?

அதேபோல-

ஒரு குழந்தை மூளை வளர்ச்சி இல்லாமல் பிறந்து விட்டது. அதுக்கு செய்ய வேண்டிய எல்லா சிகிச்சையும் செய்தும் இன்னும் சரியாகவில்லை.

அதையே பார்த்து அழுது கொண்டிருந்தால்...? ஏற்றுக் கொள்ளத்தான் வேண்டும்! அதைப் பற்றி விசனம் மட்டுமே பட்டுக் கொண்டிருக்காமல்... அந்தக் குழந்தைக்கு எப்ப எப்படி என்னென்ன செய்யணுமோ... தந்தை என்ற முறையில் தாய் என்ற முறையில் அதைச் செய்துகொண்டு மற்ற வேலையைச் செய்ய வேண்டியதுதான்.

இப்படிச் சூழ்நிலைகளில் இருக்கறதை அப்படி ஒப்புக்கொண்டு தன்னால் அதை மாற்ற இயலாது

தொடர்ச்சி 85ஆம் பக்கம்



இந்தியாவிற்காக ஆஸ்திரியாவிலிருந்து வந்திருக்கும் முதல் பெண் தூதர் ஜிட்டா ஸ்டெஃபான். சென்னையில் அவரை அபூர்வமாகச் சந்திக்க நேர்ந்தது.

"ஆஸ்திரியாவின் வியன்னா விற்கு அருகிலிருக்கும் ஒரு ஊரில் தான் நான் பிறந்தேன். என் பெற்றோர் செக்கோஸ்லோவேகியாவிலிருந்து அகதிகளாக அந்த நாட்டிற்கு வந்து குடியேறியவர்கள்.

நான் பிறந்தது இரண்டாம் உலகப் போரின் இறுதிக் கட்டத்தில்! எங்களுக்கு அப்போது வாழ்க்கை சுலபமானதாக இல்லை.

ஆனாலும் நான் முயன்று சட்டம் படித்தேன். டிப்ளமஸியில் என் மேற்படிப்பைத் தொடர்ந்தேன். பிறகு நுழைவுத் தேர்வின் மூலம் வெளியுறவுத் துறையில் பணிக்குச் சேர்ந்தேன்.

அங்கே, பயிற்சி முடிந்த பிறகு, 'எந்த நாட்டுக்குச் சென்று பணி புரிய விருப்பம்?' என்று கேட்டார்கள். நான் உடனே குறிப்பிட்டது இந்தியா மற்றும் இஸ்ரேலை.

இந்தியாவிற்கு நான் வரவேண்டுமென்ற விருப்பம் ஏற்பட்டதற்கு காரணம் - இந்தியா, ஆசியாவின் ஒரு முக்

39ஆம் பக்கத் தொடர்ச்சி

என்கிறபோது அதன் வழியே வாழத் தொடங்குவதுதான் சரி!

இரண்டாவது: அலட்சியம் செய்ய வேண்டிய சிக்கல்கள்!!

நம்ப பக்கத்து வீட்டுக்காரங்க ஒரு நாய் வாங்கிட்டாங்க. அது இராத்திரியில குலைச்சுக்கிட்டே இருக்குது. பகல்ல வேற குலைக்குது. என்ன பண்றது?

அவங்க வீட்டுக் காவலுக்கு நாய் வேணும்.. வாங்கிட்டாங்க! இது குறித்து எரிச்சல் படறதைவிட, அலட்சியம் செய்யறதுதான் நல்லது. காலப்போக்குல, அதுக்கு, புது இடம் பழகி நாலு தடவைக்கு ரெண்டு தரமா அதன் குலைப்பு அடங்கலாம்.

ஒரு மனிதன் நெட்டையா இருக்கறான். பக்கத்து வீட்டுக்காரன் அவனை எப்பப் பார்த்தாலும் கேலி பண்றான்.

"அதோ ஏணி வருது பார்!"- அப்படிங்கறான். இதை எந்த சட்டத்தின் கீழ போய் அவனைத் தடுக்கறது? அதனால பிரச்சனை தீருமா? வளருமா?

இவையெல்லாம் அலட்சியம் செய்ய வேண்டிய சிக்கல்கள்!

இது விஷயத்தில், 'அவன், ஏதோ அவன் மனசில பட்டதைச் சொல்றான். நமக்கும் அதுக்கும் சம்பந்தமில்லை. அவன் சொல்றதினால நாம 'ஏணி'ங்கற பொருளா ஆகிப் போயிடுவமா? நம்ம உயரத்தை அவனால தாளமுடியவில்லை. சொல்றான். போகட்டும்!'- அப்படின்னு விட்டுடறதுதான் நல்லது.

இந்தக் கேலியை அலட்சியம் செய்யுங்கள். எவ்வளவு நாள்தான் அவன் இப்படிச் சொல்லுவான்? தினமும் காலையிலர்ந்து சாயங்காலம் வரைக்கும் நம்மைப் பார்த்து 'ஏணி, ஏணி!'-ன்னா சொல்லிட்டு இருப்பான்?

இப்படிப்பட்ட சிக்கல்களை அலட்சியம் செய்தால், அவை தானாகவே குறைந்து, மறைந்தே போய்விடும்!

**மகன் 'வரலையே, வரலையே'-ன்னு அம்மா கவலைப் பட்டுக் கொண்டிருக் கறதில என்ன பிரயோஜனம்?**

மூன்றாவது வகை சிக்கலையும், அதைத் தீர்ப்பது பற்றியும் யோசிப் போமா?

ஒரு வீட்டில் ஒரு பெண் வயதுக்கு வந்தும், காலத்தால் திருமணம் ஆகவில்லை. என்ன செய்வது? எல்லோரும் இதைப் பற்றி வருந்திக்கொண்டே இருந்தால், கவலைப்பட்டுக் கொண்டே இருந்தால்.. கல்யாணம் ஆகிடுமா?

'அந்தப் பெண்ணுக்கு இந்த விஷயத்தில் என்ன செய்வது?' என்று யோசித்துச் செயல்படவேண்டும். கூடவே ஒரு வேலையைக் கற்றுக் கொடுத்து சொந்தக்காலில் நிற்கும் சூழ்நிலையை ஏற்படுத்திக் கொடுக்க வேண்டும். இன்னும் என்னென்ன முறையில அந்தப்

பெண்ணின் வாழ்க்கைக்கு வழி வகுக்கணுமோ அந்தச் செய்யணும்.

சிக்கல் என்பதைப் புரிந்து கொள்ளாதபோது தான் அது சிக்கலாக இருக்கும்.

ஒரு குடும்பத்தில் ஒரு பிள்ளை மேல்நாட்டில் போய் படிக்கப் போறான். அது நாலு வருஷப் படிப்பு. அம்மா, அவன் நாலு வருஷத்தில் திரும்ப வந்து எப்பவும் தங்கள் கூட இருப்பான்னு நினைக்க றாங்க. ஆனா பையன் வரலை. அது தொடர்பான இன்னும் ரெண்டு வருஷ மேல்படிப்பு படிக்க அவன் விரும்பறான். பல காரணங்கள்: 'பயனுள்ளதா இருக்கும்! உயர் பதவி கிடைக்கும், சம்பளம் கூடுதலாக இருக்கும்!' - இப்படி.

வீடு எதிர்பார்த்ததைவிட அவன் படிப்பு ரெண்டு வருஷம் தள்ளிப் போயிடுச்சி.

தன்னோட மகன் 'வரலையே, வரலையே'-ன்னு அம்மா வருத்தப் பட்டுக் கொண்டு.. கவலைப்பட்டுக் கொண்டிருக்கறதில என்ன பிர யோஜனம்?

இந்த இடத்துல அவனுடைய தேவைக்குத் தகுந்தவாறு காலத்தை அனுசரித்துப் போவதுதான் சரி! 'இன்னும் ரெண்டு வருஷம் பொறுத் திருப்பேன்' என்ற அளவிலே பொறுத்திருந்தா அந்த சிக்கல், அந்தக் கவலை தீர்ந்துவிடும்.



சிக்கல்கள் கவலைகள் தீரும். அது காலம் தள்ளித் தீரும். அவ்வளவுதான்.

கடைசியா, நாம பார்க்கப் போறது: 'உடனடியா தீர்க்க வேண்டிய சிக்கல்கள் எப்படிப்பட்டது?'

அந்த மாதிரி சிக்கல்களில் காலம் தாழ்த்தினால் அதன் கனம் கூடிவிடும்.

ஒரு மனிதனுக்கு உடல்ல ஏதோ ஒரு இடத்தில கட்டி வந்திடுது. அதன் பயமோ, அதன் வலியோ அனுபவித்தே தீர வேண்டியதுதான் என்றாலும்... அலட்சியம் செய்து விடக் கூடாதது! அதை, காலத்தால் தானே தீர்ந்துவிடும் என்று விட்டு விடவும் முடியாது. உடனடியாகத் தீர்த்து வைத்தே ஆக வேண்டும்!

மருத்துவரிடம் செல்ல வேண் டும். சோதிக்க வேண்டும். காரணம் என்ன? வலி உண்டா? சிகிச்சை என்ன? பயாப்ஸிக்கு அனுப்ப வேண்டுமா? அல்லது பயப்பட வேண்டியதில்லை, கட்டி பழுத்து விடும்... சிகிச்சையில், மருந்தில் கரைந்துவிடுமா?

இது உடனடியாகத் தீர்த்தே ஆக வேண்டிய சிக்கல். இதில் காலம் தள்ளக் கூடாது.

சரி, இப்ப இப்போ குடும்பச் சிக்கலுக்கு வருவோமா?

(அடுத்த வாரம்)

# கணவன்-மனைவி யார் அதிக அறிவாளி?

உங்கள் குடும்பத்தில் அமைதி இருக்கிறதா? என ஆராயுங்கள். எல்லோர் வாழ்க்கையிலும் பிணக்குத் தான் மலிந்திருக்கிறது.

பிணக்கானது சிலர் வாழ்க்கையில் சிறியதாயிருக்கலாம். வேறு பலர் வாழ்க்கையில் பெரியதாயிருக்கலாம். பிணக்கில்லாத வாழ்க்கை அமைந்தவன்தான் ஞானி.

ஒருவர் பெற்ற ஞானத்தைப் பரிசோதிக்கக் கருவி ஒன்று இருக்குமேயானால் அது அவரது குடும்பத்தின் அமைதிதான்.

உங்கள் குடும்பத்தில் பிணக்கு இருந்தால், 'அந்தப் பிணக்கிற்குக் காரணம் மனைவிதான், அல்லது மக்கள்தாம்' என்று கூறி நீங்கள் தப்பித்துக் கொள்ளக் கூடாது. அத்தகையவர்களுக்கிடையேயும். பிணக்கில்லாத குடும்பத்தை நீங்கள்தான் நிறுவ வேண்டும்.

அமை ன திருப்தியான வாழ்க்கை நீங்களும் வகுத்துக் கொ ண்டும். அவர்களுக்கும் வகுத்து வேண்டும். இதுதான் உங்கள் த்தின் தலையாய பயன். இவ்வ ல் வெற்றி பெற்றால்தான் நீங்கள் ண்மையான ஞானியராவீர்கள்.

குடும்ப அமைதிக்குக் குடும்பத்தின் செல்வ வளம் முக்கியம். குடும்ப வளம் பெருக வேண்டுமானால், ஆண் உறுப்பினர் அனைவரும் தத்தம் கடமையை உணர்ந்து ஆற்ற வேண்டும். இந்த வகையில் உங்கள் பொறுப்பு அதிகம்.

மனைவி மற்றும் இந்தக் குடும்ப உறுப்பினர்களுடைய குறைகள்தாம் உங்கள் குடும்பத்தின் அமைதியின்மைக்குக் காரணமென்றாலும் இங்கேதான் உங்கள் பொறுப்பு அதிகமாகிறது.

எப்படி?

அவர்கள் குறையுடையவர்கள் என்று உங்களுக்குத் தெரிகிறது. அவர்களிடம் இன்னின்ன குறைகள் இருக்கிறதென்றும் உங்களுக்குத் தெரிகின்றது. அப்படியானால், உங்களிடம் நற்பண்புகள் உள்ளன என்றாகிறது.

அத்தகு தகைமையை மேலும் வளர்த்துக் கொண்டு, குறையுடைய அறிவு நிலையில் உள்ள அவர்களையும் அரவணைத்து, குடும்பத்தில் அமைதி காக்க வேண்டிய பெரும் பொறுப்பும் உங்களுடையதே.

மலைக்க வேண்டாம். உங்களிடம்தான் மனவளக் கலை

## வேதாத்திரி மகரிஷி

யிருக்கிறதே?!

குடும்பத்தினர் அனைவருக்கும் உடல் நலம் இருக்க வேண்டும். மனவளம் இருக்க வேண்டும். குடும்பத்தில் போதுமான செல்வவளம் இருக்க வேண்டும். அப்போதுதான் நீங்கள் தேடும் அமைதி கிடைக்கும், நிலைக்கும்.

ஆகவே, குடும்பத்தில் அனைவர் உடல் நலத்திலும் கண்ணாயிருக்க வேண்டும்.

**பழுதுபடாத கணவன் மனைவி உறவே குடும்ப அமைதிக்கு அஸ்திவாரம். பிணைந்து ஒன்றிய அவர்கள் நட்பே வாழ்வின் வெற்றிக்கான ஏணிப்படியாகும்.**

அவர்களின் மனவளம் உயர்ந்ததாக அமையும்படியான சூழ்நிலையை வளர்த்து வரவேண்டும். குடும்பத்தின் அளவும், குடும்பத்தின் பொருளாதார வசதியும் சமமாக இருக்கும்படி பார்த்துக்கொள்ள வேண்டும்.

நீங்கள் கற்க வேண்டிய எல்லாப் பாடங்களையும் குடும்பத்துக்குள்ளேயே கற்றுக்கொள்ளலாம். குடும்பத்திலேயே வாழ்க்கை இயல் பாடமும் கற்கலாம். மனித இயல் பாடங்களும் கற்கலாம். ஒரு பல்கலைக் கழகத்தையேகூடக் குடும்பத்துக்குள்ளேயே காணலாம்.

கடவுள் தன்மை, இயற்கைத் தத்துவம், வாழ்க்கைத் தத்துவம், ஞானம் முதலிய அனைத்துக்கும் குடும்பத்துக்குள்ளேயே பாடங்கள் பெற்றுக் கொள்ளலாம். அப்படி இருந்தும், பலர் தோல்வி அடைகிறார்கள். எங்கோ சிலர்தான் வெற்றி அடைகின்றனர். அந்தப் பாடங்களால் புரிந்து கொண்டதை மதித்து நடந்தால் வெற்றிதான்.

குடும்பத்தை நீங்கள் நிர்வாகம் பண்ணுகிறீர்கள் என்றால் அங்கே உங்கள் அறிவுதான் நிர்வாகியாக இருக்க வேண்டும். எந்தக் கட்டத்திலும் எந்தக் காரணத்திற்காகவும் உணர்ச்சிகள் நிர்வாகியாகக் கூடாது. இன்றேல் பிணக்குகள்தான் எதிர் வரும்.

மனைவிக்குத் தெரியாமல் கணவனோ கணவனுக்குத் தெரியாமல் மனைவியோ, சம்பாதிப்பதும், செலவு செய்வதும், சேர்த்து வைப்பதும் பின்னால் பிணக்குக்கு இடம் தரும். அதனால் இவர்களுக்குள் இருக்க வேண்டிய 'தெய்வீக உறவு' இருக்காது.

எவ்வகையிலும் ஒருவருக்கொருவர் தெரியாமல் வாழக்கூடாது. மனதில் ஒளிவு மறைவை வைத்துக் கொண்டால் குடும்பத்தில் அமைதி வராது. ஆன்மீகத்திலும் முன்னுக்குப் போக முடியாது.

போதுமான அளவு இருக்கும்போதே மேலும் மேலும் உடைகள், பாத்திரங்கள் வாங்குவது போன்ற செலவுகள் அமைதியைக் கெடுக்கும். கவலையை வரவழைக்கும்! முக்கியமாக நமது குடும்பங்களில், கல்யாணச் செலவைக் குறைக்க வேண்டும்.

இல்லாதவர்களைவிட இருப்பவர்

களுக்குத்தான் இந்தப் பொறுப்பு அதிகம். அவர்களைப் பின்பற்ற முயன்று இல்லாதவர்கள் கடன் வாங்குகிறார்கள். அதோடு குடும்ப அமைதியையும் இழந்து விடுகிறார்கள்.

கல்யாணத்திலும் சரி, அன்றாட வாழ்க்கையிலும் சரி, சிக்கனமும், பேராசை ஒழிந்த நிறைமனமும் சேரும்போது அமைதி நிலவும்.

பெரும்பாலோர் குடும்பத்தில் வரவிலேயும் செலவிலேயும்தான் பிணக்குகள் தோன்றுகின்றன. இங்கேதான் உஷாராக இருக்க வேண்டும். குடும்ப உறுப்பினர் அனைவரும் அல்லது பெரும்பாலோர் பொருள் ஈட்டும் திறன் பெற்றிருத்தல் மிக்க நலம்.

செலவு செய்தலிலோ, சம்பாதிப்பவர்களுக்கு மதிப்பு இருக்க வேண்டும். இன்றேல் 'எறும்பு சேர்க்க எலி இழுக்க' என்றாகி விடும்.

குடும்ப உறுப்பினர் அனைவருக்குள்ளும் உறுதியான, நெருக்கமான உண்மையான இனிய நட்பு நிலை வேண்டும். குடும்ப அமைதிக்கு இது மிக அவசியம்.

அதிலும் கணவன் மனைவிக்கிடையே எக்காரணத்தாலும் தளராத அன்புப் பிடிப்பு இருக்க வேண்டும். பழுது படாத கணவன் மனைவி உறவே குடும்ப அமைதிக்கு அஸ்திவாரம். பிணைந்து ஒன்றிய அவர்கள் நட்பே வாழ்வின் வெற்றிக்கான ஏணிப்படியாகும்.

கணவன், மனைவி ஒற்றுமைதான் வீடுபேறுக்கு ஈடான சகல சித்திகளையும் தரவல்லது. எனவே கணவன், மனைவிக்கிடையே நட்புறவையும் ஒற்றுமையையும் உயிர்போல் நம்புங்கள். அதைப் பெற எதை வேண்டுமானாலும் - கற்பு ஒன்றைத் தவிர - வேறு எதை வேண்டுமானாலும் தியாகம் செய்யலாம்.

இதற்கு அடிப்படையாக ஒருவரை மற்றவர் துல்லியமாகப் புரிந்து கொள்ள வேண்டும். ஒருவர் கருத்தை மற்றவர் மதிக்க வேண்டும். தலையெடுக்கக் கூடிய கருத்து வேறுபாடுகளை மனம் விட்டும், தைரியமாகவும், வெளிப்படையாகவும் பேசி அன்போடு தீர்த்துக் கொள்ள வேண்டும்.



தேவைப்படும் இடத்தில் விட்டுக் கொடுக்கும் மனப்பான்மை இருவருக்குமே வேண்டும்.

இருவரில் அதிக அறிவாளி யார் என அறிந்துகொள்ள ஒரு வழி உண்டென்றால் அது இதுதான்: யார் அதிகமாக விட்டுக் கொடுக்கிறார்களோ அவர்தான் இருவரில் அதிக அறிவாளி!

சிறிய காரணத்திற்காகவும் பெரிய காரணத்திற்காகவும் குடும்பத்தில் பிணக்கு எழலாம். எல்லா காரணத்தையும் இங்கே தொகுத்துக்

கொடுத்திருக்கிறேன்.

அவை-

- தேவை
- அளவு
- தன்மை
- காலம்



இவற்றில் ஒன்றையோ அல்லது இரண்டையோ அல்லது அனைத்தையுமேகூட மையமாக வைத்துதான் பிணக்குகள் எழுகின்றன.

உதாரணமாய்-

'ஒரு குக்கர் வாங்க வேண்டும்!' - என்று அம்மா சொல்கிறாள். அப்பா, 'வேண்டாம்!' -என்கிறார். 'ஒரு சைக்கிள் வாங்கலாம்!' -என்கிறான் மகன்.

'குக்கர் இருந்தால் உன்னை சீக்கிரம் காலேஜுக்கு அனுப்புவேன்' என்பது அம்மாவின் அடிஷனல் பாயிண்ட். 'சைக்கிள் இருந்தால் போதாதா? சமைக்கத் தாமதமானால்கூட சீக்கிரமாகக் காலேஜுக்குப் போய்விடலாமே?' -என்பது மகனின் எதிர்வாதம்.

இது தேவையால் எழும் பிணக்கு.

சைக்கிளும் தேவைதான். பிரஷர் குக்கரும் தேவைதான். வாங்குவது என்ற முடிவினை அப்பா ஒப்புக்கொண்டுவிட்ட பின்னரும் பிணக்குத் தொடரலாம்.

எத்தகைய பிரஷர் குக்கர் வாங்குவது? பிரஸ்டிஜ்ஜா? அல்லது வேறு மேக்கா? எத்தகைய சைக்கிள் வாங்குவது? 'பி.எஸ்.ஏ'வா? அல்லது ஹீரோவா?

அடுத்து 'எப்போது வாங்குவது?' என்ற கேள்வி. இது காலம் பற்றிய பிணக்காகும். உடனடியாக வாங்குவதா? அல்லது ஃபிக்ஸட் டெப்பாசிட் மெச்சூர் ஆனபின் வாங்குவதா?

இதெல்லாம் பெரிய விஷயங்கள் அல்லது உபயோகமான விஷயங்கள் பற்றிய பிணக்காகும். சிறிய அற்ப விஷயங்கள்கூட பிணக்கைத் தோற்றுவித்து, குடும்பத்தில் நீடித்த டென்ஷன் உண்டு பண்ணிவிடும்.

சில வீடுகளில் பார்த்திருக்கலாம். சினிமாவுக்குப் போகலாம் என முடிவெடுப்பார்கள்.

மகிழ்ச்சிகரமான யோசனை தானே? ஆனால் அதில் விதவிதமான பிணக்குகள் எழும். மோதல் வெடித்து மண்டை காய்ந்து... மகிழ்ச்சி வர வேண்டியதற்கு பதிலாக தலையணை நனையும். ஆண் முகம் திருப்பிக்கொள்வான். குழந்தைகள் வாடிப்போய்க் கிடக்கும்.

இதற்கு அடிப்படைக் காரணம் என்ன?

(அடுத்த வாரம்)

**பெரும்பாலோர் குடும்பத்தில் வரவிலேயும் செலவிலேயும்தான் பிணக்குகள் தோன்றுகின்றன. இங்கேதான் உஷாராக இருக்க வேண்டும்.**



போட்ட அந்தக் கார்டை கையில் எடுக்கிறாள். தன்னிடம் பத்திரப்படுத்திக் கொள்கிறாள்.

இதை ஒளிந்திருந்து சூர்யா பார்த்துவிட்டு விஷமமாகச் சிரிக்கிறான்.

சாருவின் குடும்பம் மொத்தமும் சூர்யா மேல் வெறுப்பாக இருக்கிறது. அப்பாவின் மரணத்துக்கு அவன் காரணம் என்பது மட்டும்தான் கோபமா?

டாக்டர் அபிஷேக்கின் அம்மா, சாரு வீட்டுக்குப் போகத் தீர்மானம். சாருவின் அம்மாவிடம் பேசி, கல்யாணத்தைத் தீர்மானிக்க முடிவு! அபிஷேக் கவலைப் படுகிறான். சாருவிடம் இதுபற்றி எதுவும் பேசாமல், அம்மா அவசரப்படு கிறாளோ என்ற கவலை.

இந்த நிலையில் ரத்னம் வீட்டுக்கு குண்டு நர்ஸ் ரம்மி வருகை! இனி சாரு வரமாட்டாள்- நான்தான் வருவேன் என ரம்மி சொல்ல, குழந்தை சாப்பாட்டை அவள் முகத்தில் துப்ப, ரம்மி கடுப்பாகி குழந்தையை அடித்து விடுகிறாள்.

குழந்தை திட்டுப் கோபப் பட்டு அங்கிருந்து ஓடி கிணற்றின் மேல் ஏறி நின்று கொள்கிறாள். நான் குதித்து விடுவேன் என்று மிரட்டு கிறாள். அனைவருக்கும் பதட்டம்!

ரத்னம் உடனடியாக சாருவுக்கு போன் போட்டு விவரத்தைச் சொல்ல, சாரு பதட்டமாகப் புறப்படுகிறாள்.

வீட்டில் உள்ளவர்கள் போகக் கூடாது என சாருவைத் தடுக்கிறார்கள். எதிரியின் குழந்தை சாகட்டும் என்ற ரீதியில் பரமு பேச, பரமுவை சாரு அடிக்கிறாள்.

இந்தப் பக்கம் சூர்யா வந்து, குழந்தையை அதட்டுகிறான். குழந்தை எதற்கும் மசிய வில்லை! பிடிவாதம் தொடர் கிறது.

அதற்குள் சாரு வந்து விடுகிறாள். இதமாகப் பேசி, குழந்தையை மீட்கிறாள். 'இனி குண்டு நர்ஸ் வரக்கூடாது! நீதான் வரவேண்டும்' என குழந்தை கேட்க, சம்மதிக் கிறாள்.

அதற்குள் குழந்தையைப் பிடித்துத் தரதரவென இழுத்து வரும் சூர்யா, 'சாரு இனிமேல் இந்த வீட்டில் காலை வைக்கக் கூடாது' எனக் கண்டபடி பேசி, சாருவைக் கழுத்தைப் பிடித்துத் தள்ளுகிறான்.

விழாத குறையாக வீதியில் வந்து நிற்கிறாள் சாரு.

(தொடரும்)

# எ.து. க.ா.த.ல்.?

■ வேதாத்திரி மகரிஷி

குடும்பத்தில் பிணக்குகள் ஒய்ந்த பின், சமாதானமே ஏற்பட்ட பிறகும் கூட டென்ஷன் நீடிக்கும்!

அதாவது, பிரஷர் குக்கர் வாங்கிவிடுவது என்று தீர்மானித்து, வாங்கிவிட்ட பிறகும் கூட 'வாங்க வேண்டாம் என்று சொன்னாரே! எப்படிச் சொல்லலாம்?!'- என்று ரொம்ப நேரம் பொருமித் தள்ளிக் கொண்டிருக்கும் மனைவிமார்களும் உண்டு.

பிணக்கு தீராமல் நின்று விட்டாலோ கேட்கவே வேண்டாம். சைக்கிள் வாங்கவில்லை என்பதற்காக ஒழுங்காகப் படிக்காத பிள்ளைகளும் காலேஜுக்கே போகாத பிள்ளைகளும் இருக்கிறார்கள்.

அந்தக் காரணத்தால் அப்பா மேல் எழுந்த வெறுப்பானது சிறிது சிறிதாக வளர்ந்து வாழ்நாளில் தகப்பன் மகன்களுக்கிடையே அது பெரும் பகையாகவே முடிவதும் உண்டு.

குடும்ப அமைதியில் தாய்மார்களுக்கும் பெரும் பங்கு இருக்கிறது. குடும்ப வருமானத்திற்கேற்ப திட்டமிட்டு கட்டுப்பாடோடு குடும்பம் நடத்துவது அவர்கள் கையில்தான் இருக்கிறது.

அவ்வகையில் பல பிணக்குகளை தோன்றாமலேயே பண்ணிவிடலாம்!

குடும்பத் தலைவர்களுக்குத் தன் முனைப்புக் கூடாது: 'ஆ! நான் தலைவன். என் பேச்சுக்கு மறுப்பு சொல்வதா?'- என்ற எண்ணம் எழுவது அகங்காரம் விலகாத தன் முனைப்பைத்தான் குறிக்கும்: 'என் பேச்சுக்கே மதிப்பில்லையே?'- என்ற கவலையும் கூடாது.

ஆக, நமது அறுகுண சீரமைப்பின் முதற் பயிற்சிக் களம் குடும்பந்தான்.

மனைவியோ, மகனோ தவறான கருத்தை வைத்துக் கொண்டு அதன் காரணமாகப் பிணக்கை ஏற்படுத்தினால்- அவர்கள் கருத்து எந்த வகையில் தவறு என்பதை அன்போடு அவர்களுக்கு விளக்கிக் காட்ட வேண்டும்.

முறையாக, உணர்ச்சி வசப்படாமல்-விளக்கினால் ஒரு நாள் இல்லாவிட்டாலும் ஒரு நாள் சம்பந்தப்பட்டவர்கள் தங்கள் பிழையை ஒத்துக்கொண்டு பிணக்கை

ஒழிப்பார்கள்.

இரு தரப்பிலும் இருக்க வேண்டியது விட்டுக் கொடுக்கும் மனப்பான்மைதான்.

இணக்கத்தை வற்புறுத்தும் போதும், பிணக்கைத் தீர்க்கும்போதும் இன்சொல்லையே உள்ளமும் உதடும் உபயோகப்படுத்த வேண்டும். இதனால் நன்மைகள் பல பெறலாம்.

குடும்ப அமைதியைப் பெற, கவனமில்லாததும் விசாலமானதுமான மனம் வேண்டும். 'எதையும் தாங்கும் இதயம்' என்பார்களே அது இங்கேதான் வேண்டும்.

பொறுமை, சகிப்புத்தன்மை இவை எல்லையின்றித் தேவையாகும்.

எவ்வளவு பெரிய குழப்பமானாலும் பொறுமை ஒன்றினாலே வெற்றி கண்டுவிடலாம். காலம் இதற்கு உதவும்.

பிறர் குற்றத்தை பெரிதுபடுத்தாமையும் பொறுத்தருளுதலும், மறத்தலும்... அமைதிக்கு வழிகளாகும்.

அதேபோல் பிறர் கூறும் கடுஞ்சொற்களையும் அவை சொல்லப்படாததுபோல் பாவித்து ஒதுக்கி விட வேண்டும் அப்போது தான் அமைதி பிழைக்கும்.

இந்தக் காலத்தில் அம்மாவுக்கும் பெண்ணுக்கிடையே கூட பிணக்குகள் தோன்றுவதையும் வளர்வதையும் பார்க்கின்றோம். அவர்களுக்கிடையேகூட அட்ஜஸ்ட்மெண்ட் இல்லையானால் வேறு யாரிடம் அதைத் தேடுவது?

அம்மாவுக்குப் பெண்ணாக இருக்கும் போதே இப்படியென்றால் பின்னால் மாமியாராகவும் மருமகளாகவும் ஆனபின் வாழ்க்கை எப்படி அமையும்? அப்புறம் யார் மேல் குற்றம் சொல்வது?

தன் கருத்து சரியேயாயினும் உயிர்போயினும், வாழ்க்கைத் துணை ஒத்துக்கொள்ளவில்லையென்றால் அது எவ்வளவு அவசியமானதென்றாலும் தள்ளி வைக்க வேண்டியது தான்.



சிறிது காலத்திற்காவது தள்ளி வைத்தால்கூட பின்னால் புரிந்து கொள்ளல் ஏற்பட்டு பிணக்குகள் தீரலாம்.

குடும்ப அமைதியை இழந்து பெறுவது-அது ஞானமேயாயினும்-அதனால் ஒரு பயனும் வராது.

என்னிடம் ஒரு அருட்செல்வி வந்தார். 'தன் கணவர் சிகரெட் பிடிப்பது தனக்குப் பிடிக்கவில்லை!'- என்றார்.

அதுவே இவர் வாழ்க்கையில் ஒரு பெரும் சிக்கலாக ஆகிவிட்டது.

"என் கருத்துதான் சிறந்தது. அதை அவர் ஏற்க மறுக்கிறாரே?!"- என்பது அந்த அருட்செல்வியின் ஆதங்கம். அதுவே அவருக்கு பெரும் மனச்சுமையாகிவிட்டது.

நான் அந்த அம்மையாருக்கு அறிவுரைகள் சொல்லி அனுப்பினேன்.

"கணவருக்கு மதிப்பளியுங்கள். அவர் அந்தப் பழக்கத்தை விட்டு விட வேண்டும் என்று உறுதியாக நீங்கள் உங்கள் மனதில் நினையுங்கள்.

சந்தர்ப்பம் வாய்க்கும்போது கனிவாகவும், பணிவாகவும் அந்தப் பழக்கத்தின் தீமையை அமைதியாகக் கூறி வாருங்கள்

இதை ஒரு சுமையாக உங்கள் மனதில் வைக்காமல் உங்கள் மனதை இலகுவாக்குங்கள். காலப்போக்கில் உங்கள் சிக்கல் தானாகவே தீர்ந்துவிடும்!' என்று அந்த அம்மையாருக்கு அறிவுரை சொல்லியனுப்பி வைத்தேன்.

அப்படியே நடந்தது.

சாதாரணமாக குடும்பத்தில் பிணக்குகள் தோன்றுவதற்குப் பால் உறவு ஒரு முக்கிய காரணம்.

பெரும்பாலான தம்பதிகளுக்கு பாலுறவு சமநிலையாக இருக்காது. அதனால் ஒருவருக்கொருவர் ஒத்துக் கொள்ளாமல் போய் டென்ஷன் தோன்றி அது வாழ்க்கையின் மற்ற மற்ற துறைகளிலும் பிரதிபலித்துப் பிணக்குகளாக மாறுகின்றன.

ஆனால் குண்டலினி யோகிகளுக்கு பால் உறவு



வேட்பில் craving இருக்காது- அதாவது வேட்பு அல்லது விழைவு இருந்தாலும் வெறி அல்லது தவிப்பு இருக்காது. அங்கே, பால் உறவே இரண்டாம் பட்சமான ஒரு சங்கதியாகிவிடும்.

தவிப்பும் ஏமாற்றமும் தலை எடுத்து விட்டதென்றால் பின் 'அது' கிடைத்தாலும் திருப்தி வராது.

உடலில் ஏற்பட்டுவிட்ட இந்தச் சலனம் மனதையும் பிடித்துப் பல விதமான கருத்து வேற்றுமைகளாக வெளிவந்து வாழ்க்கையே நரகமாகிவிடும்.

ஆனால் குண்டலினி யோகிகள் இத்தகு துரதிருஷ்டங்களுக்கு ஆளாவதில்லை. தம்பதிகளில் ஒருவர் மற்றவர் மனப்போக்குக்கும், உடல் தேவைக்கும் மதிப்புக் கொடுக்கும் வகையில் தங்கள் பால் உறவு வேட்கையை அவர்களால் மாற்றி வைத்துக் கொள்ள இயலும்.

தமது கூட்டாளியின் சக்திக் குறைவைக்கூட சகித்துக்கொண்டு அதே சமயத்தில் தாம்பத்திய உறவில் இனிமையும் குறையாமல் வாழ்க்கை நடத்தும் திறத்தைக் குண்டலினி யோகத்தால் பெற்றுக்கொள்ளலாம்.

கல்யாணம் என்பது ஒருவரை ஒருவர் சபித்துக்கொள்ளும் உரிமைச்சீட்டு என்கிற கீழ்நிலை பல இடங்களில் இருந்துவருகிறது. அது தவறு! கணவன் மனைவி நட்பு மதிப்பு மிக்கது. இருவருமே எல்லாத் துறைகளிலும் உயர்வடைய இந்த நட்பின் பாதுகாப்பு அவசியம்.

ஏதோ அப்பா அம்மா சிலகாலம் வளர்த்தார்கள். ஆனால் வாழ்நாள் முழுவதும் உதவுவது இந்த கணவன்-மனைவி நட்புதான்.

திருமணத்திற்கு முந்தைய காலகட்டம்கூட இந்த நட்புக்கான பயிற்சிக் காலம்தான். ஒருவருக் கொருவர் எல்லாத் தேவைகளையும் நிறைவு செய்து கொள்ளக் கணவன் மனைவியின் நட்பால்தான் முடியும்.

கணவன் மனைவியின் நட்பின் இனிமையைத் தான் காதல் என்று சொல்ல வேண்டும். இருவர் உள்ளம் ஒன்றுபட்டு உலகில்வாழ, எண்ணத்தால் ஒப்புக் கொண்டு செயலில் ஒருவர் மற்றவருக்கு உடல் பொருள் ஆற்றலை அர்ப்பணித்து நிற்கும் நிலையே காதல் - திருமணம்!



'பாழும் கிணற்றில் தள்ளிவிட்டு விட்டார்கள்'- என்பார்கள். 'பிடாரியைக் கட்டிவைத்துவிட் டார்களே'- என்பார்கள்.

அதெல்லாம் அறியாமை!

உங்கள் வாழ்க்கைத் துணையை உண்மையில் முழுக்க முழுக்க நீங்களேதான் தேடிக் கொண்டீர்கள்.

அது எப்படி?

*(அடுத்த வாரம்)*

வருகை! வருகை! வருகை! வருகை! வருகை!

### அடுத்தவரிடமிருந்து நாம் விரும்பியதை அடைவது எப்படி ?:

விரும்பியதை அடைய நாம் எப்படிப்பட்ட வாழ்க்கையை அமைத்துக் கொள்ளவேண்டும் என்பதை எளிய முறையில் விளக்கும் நூல் இது. இதன் ஆசிரியர் சி.எஸ். தேவநாதன்.

விலை : ரூ. 36/-, வெளியீடு : மணிமேகலைப் பிரசுரம், தி. நகர், சென்னை - 17.




### ஒரு நிமிட அபத்தம்:




சிறுகதைகள் மற்றும் சிறுசிறு நிகழ்ச்சிகள் ரசிக்கத்தக்க வகையில் சொல்லப் பட்டுள்ளன. ஆன்மீகத்தை அமைதியாகப் போதிக்கிற விதத்தில் எழுதியிருக்கிறார் அந்தோனி டி மெல்லோ. தமிழில் டாக்டர் எஸ்.ஏ.பி.

விலை : ரூ. 100/-, வெளியீடு : கண்ணதாசன் பதிப்பகம், தி நகர், சென்னை - 17.

### முதலிரவு முதல் முதல் குழந்தை வரை:

நம் நாட்டில் அடிப்படை அறிவு குறைந்த இலாகா செக்ஸ் துறைதான். அந்த அடிப்படை அறிவின்மை பிரச்சனையாக இருக்கக் கூடாது என்ற நோக்கத்தில் எழுதியிருக்கிறார் சித்ரா மணாளன்.

விலை : ரூ. 45/-, வெளியீடு : புத்தகப் பூங்கா, இராயப்பேட்டை, சென்னை - 14.



### ஆந்த்ராக்ஸ் ஆபத்துகளும் தடுப்பு முறைகளும்:

பரவும் அபாயம் உள்ள முக்கிய நோய் ஆந்த்ராக்ஸ். இது பற்றிய பல்வேறு உண்மைகளையும் மருத்துவச் செய்திகளையும் சொல்லியிருக்கிறார் டாக்டர் முத்து செல்லக்குமார்.

விலை : ரூ. 20/-, வெளியீடு : மணிமேகலைப் பிரசுரம், தி. நகர், சென்னை - 17.

### ஐயாற்று நதிக்கரையில்:




தநா. மதிவாணனின் இசை வரலாற்று நூல். தமிழன் இசையோடு பிறந்து, இசையோடு வாழ்ந்தான்; வாழ்கிறான் என்பதைப் பதிவு செய்ய வேண்டும் என்ற நல்ல முயற்சியே இந்த நூல்.

விலை : ரூ. 150/-, வெளியீடு : த.நா. அறக்கட்டளை, திரு பதிப்பகம், 18-ஏ-கபாலி நகர், மயிலாப்பூர், சென்னை -4.

அரைவல்ஸ்! அரைவல்ஸ்! அரைவல்ஸ்! அரைவ

# "பெண்ணே, எல்லோரும் உன் அன்பளிப்புத்தான்!"

## வேதாத்திரி மகரிஷி

எப்படிப்பட்ட தகப்பனுக்கும், தாய்க்கும் கருவாக அமைந்து தன் வாழ்க்கையில் எப்படிப்பட்ட இன்பத்தை அனுபோகிக்க வேண்டும் என்கிற கரு அமைப்பு இருக்கிறதோ, அத்தகு உடலைத்தான் உங்கள் தாய் வயிற்றில் உங்கள் உயிரானது அடிமன நிலையில் (Super Consciousness Stage) இருந்து கட்டிக்கொண்டது.

அதே போல,

கருவமைப்பைக் கொண்டும், பிறந்த பின்னர் இதுவரை நீங்கள் அமைத்துக் கொண்டுள்ள மனதின் தரத்தைக் கொண்டும்... உங்களுக்கு வாழ்நாளில் என்ன இன்ப துன்பம் வரவேண்டுமோ, அதனை உங்கள் வாழ்க்கையில் சரி பங்கேற்று ஒரே ஒருவரால் தான் கொடுக்க முடியும்.

அந்த ஒருவரை, உங்கள் உயிரே, அடிமனமே தெரிந்து, அது பலபேர் மனதில் பிரதிபலித்து, அவர்கள் என்னவோ முயற்சி எடுப்பது போல் சில நடவடிக்கைகள் நடந்தேறி, அரங்கேற்ற அந்த ஒரு நபர்தான் உங்கள் வாழ்க்கைத் துணைவராக வருகிறார்.

உண்மை!

எனவே உங்கள் வாழ்க்கைத் துணைவர் மீது குறைபட்டுக் கொள்ளத் தேவையில்லை. அவரிடம் உள்ள குற்றங்களுக்காக நீங்கள் யாரிடமாவது குறைபட்டுக் கொள்ள வேண்டுமானால் அது உங்கள் மீதேதான். நீங்களேதான் பட்டுக்கொள்ள வேண்டும்!

ஆகவே, இந்தத் தத்துவத்தை நீங்கள் புரிந்துகொண்டு உங்கள் வாழ்க்கைத் துணைக்குத் தகுந்த மதிப்பளித்து வாழ வேண்டும்.

அதை விடுத்து, கணவர்-மனைவியர் ஒருவரை ஒருவர் திட்டிக் கொண்டிருந்தால் அந்தச் சூழ்நிலையில் வளரும் குழந்தைகளின் குணமும் ஊனமுற்று அவர்கள் வாழ்க்கையில் பல குறைகள் தோன்ற ஏதுவாகும்.

பிறவிக்கடல் நீந்துதல் என்கிற ஒரு பெரிய காரணத்திற்காக நாம் வாழ்ந்துகொண்டிருக்கிறோம். அதற்குக் குடும்பமும் குடும்ப அமைதியும் இன்றியமையாதன.

# வாழ்க்கைக்கு உதவும் உன்னதத் தொடர் 6

ஆகவே சிறிய, சிறிய சச்சரவுகளுக் கெல்லாம் குடும்பத்தில் இடம் கொடுத்து நமது பெரு நோக்கத்திற்குத் தேவையான சக்தியை விரயமாக்கிக் கொள்ளக் கூடாது.

எனவே கணவன், மனைவி உறவை உயிராக மதியுங்கள்! பெற்றோர் மக்கள் கூட்டுறவை மேம்படுத்துங்கள்! குடும்ப அமைதியைக் காத்து வாழுங்கள்! பெற்ற மனவளக் கலையும் அக்கலை யில் பெற்ற மனோசக்தியும் அறி வாற்றலும் உங்களுக்குப் பேருதவியாக இருக்கும்.

ஆகவே, குடும்பத்தில் அமைதி யினை விரும்பி, தேடி, முயன்று பெற்று அனுபோகித்து, பலன் பெற்று, உயர்வடைந்து அந்த அமைதியையும், இனிமையையும் சுற்றி உள்ளவரிடத் தும், சமுதாய அவையிலும் பரவ விடுங்கள். பலனாய்... வாழ்வில் சுவை கூடும், வாழ்க்கையின் நோக்கமாகிய வீடு பேறும் எளிதில் கிட்டும்.

நிற்க!

பெண்களை இரண்டாம்தர பிரஜையாகத்தான் உலகம் நீண்ட காலமாகக் கருதிக் கொண்டு வருகி



றது. இது உண்மைக்கு மாறானது. தத்துவ உலகத்திற்கும் இது வேறுபட்ட கருத்துதான்.

உலகத்திலே வாழுகின்ற மக்கள் எல்லோருமே பெண்ணினத்தின் அன்பளிப்பு என்று சொன்னால் அது மிகையாகாது. அந்த முறையிலே பெருமை பெற்றவர்கள் பெண்கள். அந்தப் பெருமையைக் காக்க வேண்டியது, போற்ற வேண்டியது ஆண்களுடைய கடமை.

இன்று முன்னேறி வரக்கூடிய உலகத்திலே பெண்களுடைய உள்ளம் துடித்துக் கொண்டு இருக்கிறது - அவர்களுடைய பங்கை ஆற்றுவதற்காக!

ஒவ்வொரு இடத்திலும் அவர்களுக்கு இருக்கக் கூடிய தடைகள், அந்தத் தடைகளினால் ஏற்படக்கூடிய விளைவுகள் சமுதாயத்தையே பாதிக்கின்றன.

தாய், சேய், நலம் என்பது பெண்களுக்கோ, குழந்தைகளுக்கோ மாத்திரம் அல்ல. மனித குலத்திற்கே பொதுவான, ஒரு மதிப்புடைய இடம் அது.

அந்த மனிதகுல மேன்மைக்காகவே, தாய் சேய் நலம் என்கிற ஒரு பிரிவை எல்லோரும் மதித்து அதற்கு ஒவ்வொருவரும் ஒரு செயல் ஆற்ற வேண்டியது அவசியம்.

நோய் வராமல் தடுக்க, கருவுற்ற நாள் முதற்கொண்டு பிரசவம் ஆகிற வரையில் தாய், சேய் நலத்தைக் கவனிக்க வேண்டியது பெண்களுடைய கடமை.

ஆனால் பெண்கள் மாத்திரம் அதைக் கவனித்துக் கொள்ள முடியாது. குடும்பத்திலேயே முக்கியமாக உள்ள கணவன், இன்னும் பெரியவர்கள் எல்லோருடைய கடமையுமாக அது உள்ளது.

> **எந்த பௌர்ணமியை உடல் உறவுக்கு ஆகாது என்று முன்னோர்கள் சொன்னார்களோ... அந்தப் பௌர்ணமி இன்று உல்லாச நாள் என்று மாறிப் போய்விட்டது.**

கருவுற்ற காலத்தில் ஒரு பெண்ணுடைய மனம்... சோர்வு அடையுமானால், பிணக்கு அடையுமானால் அந்த ஒவ்வொரு வருத்தமும் அவர்களின், குழந்தையின் மனத்தைப் பாதிக்கும். எல்லோரும் இதை அவசியம் அறிந்து கொள்ள வேண்டும்.

கருவுற்ற காலத்திலேயே அந்த விதத்தில் பெண்ணை குடும்பத்தில் பார்த்துக்கொள்ள வேண்டும். அந்தக் காலத்திலே ஏற்படக்கூடிய மனநிலை குழந்தைகளைப் பாதிக்கும்.

அது மாத்திரம் அல்ல!

கருவுறு காலத்திலேயே தவறு ஏற்படாது இருக்க வேண்டும். இந்திய சமுதாயத்திலே நல்ல நல்ல பழக்கங்கள் எல்லாம் பண்பாட்டில் அமைந்துள்ளன. அது அமாவாசையாகவோ, பௌர்ணமியாகவோ அமையக்கூடாது என்பதை நம்



முன்னோர்கள் கண்டு பிடித்து இருக்கிறார்கள்.

எனென்றால், சூரியன் - சந்திரன் - பூமி இந்த மூன்றும் ஒரே நேர்க்கோட்டில் வரும்போது உடல்-உள்ளம் இரண்டையும் ஒரு முக்கியமான எல்லைக்கு உயர்த்தவோ, தாழ்த்தவோ கூடியதாக உள்ளன. அந்தக் காலத்தில் ஏற்படக்கூடிய கரு, உடலிலும், மனதிலும் குறைவு உடையதாகவே தான் அமையும்.

இன்று உலகம் முழுதும் Mentally Retarded Children என்று சொல்லப்படும் மனவளர்ச்சி குன்றிய குழந்தைகள் அதிகமாக உள்ளார்கள்.

இதற்கு என்ன காரணம்?

இப்போது, 'கருவுறு காலமே தவறாகப் போய்க் கொண்டு இருப்பதுதான் இதற்குக் காரணம்!' எனலாம்.

எந்த பௌர்ணமியை உடல் உறவுக்கு ஆகாது என்று முன்னோர்கள் சொன்னார்களோ... அந்தப் பௌர்ணமி இன்று ஒரு புனித நாள் என்ற ஒரு வாசகம் போய், ஜாலி டே அதாவது, உல்லாச நாள் என்ற வாசகமாக அது மாறிப்போய் விட்டது.

மனித உடலுக்கு உள்ளாக, மனித உடலில் இருக்கக்கூடிய Metabolic routine என்னும் இயக்கத்தை... எல்லாம் நடத்தி வைப்பதற்கும், மனதை நடத்தி வைப்பதற்கும், எண்ணம் - சொல் - செயல் இவைகளை எல்லாம் அனுபவப் பதிவுகளாகச் செய்து கொண்டு தரம், தன்மை இவற்றை உருவாக்குவதற்கும் உள்ளது ஜீவகாந்த சக்திதான்.

அந்த ஜீவகாந்த சக்தியிலிருந்து ஒரு துளி, ஒரு சிறிய அளவுதான் வித்தின் மூலமாகக் கருத்தொடராக, பல கோடி தலைமுறையாக வந்து கொண்டே இருக்கிறது.

கோள்களினுடைய ஓட்டத்தினாலேயே அந்த ஜீவகாந்த சக்தி எப்படி, எவ்வாறு மாற்றம் அடைகிறது என்பதை, இன்று கொஞ்சம் கொஞ்சமாக உணர்ந்து வருகிறார்கள்.

'பௌர்ணமி காலத்திலே, விபத்து அதிகமாக நடந்துவருகின்றது'-என்று கலிபோர்னிய ஆராய்ச்சியாளர்கள் கண்டறிந்து தெரிவித்திருக்கிறார்கள்.

ஆயுர்வேத, சித்த முறைகளிலே கூட இந்தக் கரு அமையும் காலத்திலும்... அந்தக் கரு அமைந்த பிறகும் எந்தெந்த முறைகளில் பெண் இருக்க வேண்டும் என்றெல்லாம் குறிப்பிடப்பட்டிருக்கிறது.

இப்படி நமக்கு நல்ல மாதிரியாக பல விஷயங்களை நம் முன்னோர்கள் சொல்லிக் கொடுத்திருக்கிறார்கள்.

அவை எவை?

(அடுத்த வாரம்

கரு அமையும் காலத்திலே இருந்து அது முழுமையாக உருவாகும் வரையிலே எந்தெந்த அவயவங்கள் எந்தெந்த மாதத்திலே வளர்ச்சி பெறுகின்றன என்பதையெல்லாம் நம் முன்னோர்கள் கணித்து இருக்கின்றனர்.

குழந்தைப்பேறு உண்டாவதற்கு முன்னதாகவே கணவன் மனைவி உறவு எப்படி இருக்கவேண்டும் என்பதையும் கூட அவர்கள் சொல்லிவைத்து இருக்கிறார்கள்.

பிணக்கு எழாத குடும்பத்தில்தான் குழந்தைகள் நன்றாக இருப்பார்கள். பிணக்கு இருக்குமேயானால் அதில் உள்ள போராட்டம் குழந்தைகளைப் பாதிக்கும். அவர்களின் மனநலம், உடல் நலம் கெட்டதாகத்தான் அமையும்.

இதை தம்பதிகள் உணர்ந்து கொண்டு, ஒருவருக்கொருவர் உதவிக் கொண்டு, "வாழ்வதற்காக வந்தாச்சு! வாழ்ந்துதான் ஆகணும்-இனி ஒருத்தருக்கொருத்தர் உதவித்தான் ஆகணும்"- என்கிற பக்குவத்திற்கு அவர்கள் வந்து விட வேண்டும்.

தவிர பெண்களுடைய உடலுக்கு ஒரு பயிற்சி வேண்டும். ரத்த ஓட்டம், வெப்ப ஓட்டம், காற்று ஓட்டம் இந்த மூன்றும் சரியாக இருந்தால்தான் ஒருவரின் உடல், நலமாக இருக்க முடியும்.

இந்த மூன்றில் ஏதேனும் ஒன்று தடைபட்டாலோ, குறைபட்டாலோ.. அது ஜீவகாந்த சக்தியைத் தேக்கமுறச் செய்யும்.

தேக்கமுற்ற ஜீவகாந்த சக்தி அங்கே மின்சக்தியாக மாறும்போது அங்கே மின்குறுக்கு வரும். மின்குறுக்கு வந்தால் அதுதான் வலி. அதுவே கொஞ்சம் நீடித்தால் வியாதி.

எனவே அந்த ஜீவகாந்த சக்தியைப் பாதுகாக்க வேண்டும். ரத்த ஓட்டம், வெப்ப ஓட்டம், காற்று ஓட்டம் இந்த மூன்றையும் ஒழுங்காக இருக்குமாறு காப்பாற்றிக்கொள்ள வேண்டியது நம் ஒவ்வொருவரின் கடமை.

உடல் நலமாக இருந்தால்தான் மனம் நலமாக, வளமாக இருக்கும்! அப்படி இருந்தால்தான் குடும்பம் நலமாக இருக்க முடியும்.

நல்ல குழந்தைகள் பெறுவது குடும்பம் சம்பந்தப்பட்டதோடு மட்டுமல்ல... மாத்திரம் அல்ல. இந்த சமுதாயத்தையே காக்க வல்லவர்கள் குழந்தைகள்தான்.

# வாழ்க வளமுடன்!

எனவே தாய்-சேய் நலம் என்பது ஒரு குடும்பத்தோடு போவது அல்ல. இந்த சமுதாய நலமும், வளமும் அந்தத் துறையிலேதான் இருக்கின்றன.

உடல் நலத்திற்காக சுவாசப் பைகள் நன்றாக விரிவதற்கு நாம் ஒரு பயிற்சியைக் கொடுக்கிறோம்.

இயற்கையான முறையில் நம்முடைய சுவாசப்பைகள் நன்றாக விரிவதற்கும், சுருங்குவதற்கும் எளிய முறையில் அமைந்த ஒரு ஐந்து நிமிடப் பயிற்சி

இது.

அதைத் தினந்தோறும் செய்து கொண்டே வந்தால் என்றைக்கும் நமக்குப் போதுமான பிராணவாயு கிடைக்கும். அதனால் நுரையீரல் சுருங்காது. அப்போது நமது ஆரோக்கியமும் போதுமானதாக, நன்றாய் இருக்கும்.

மேலும்-

கர்ப்பகாலத்தில், இரண்டு மாதத்தில் இருந்து கடைசி வரையில் நாம் காயகல்ப பயிற்சியில் சொல்லிக் கொடுக்கும் 'நரம் பூக்கம்' என்னும் பயிற்சியைச் செய்து கொண்டே வந்தால் குழந்தை நல்ல முறையில் வளர்கின்றது.

பிரசவம் ஆன பிறகு தாயும், சேயும் உடல் நலத்தோடு இருப்பதற்கு முடிகிறது.

காயகல்ப பயிற்சிகளின்போது பெண்களுக்கென்று ஒரு தனிப் பயிற்சி

வேதாத்திரி மகரிஷி

7

# இது தான் உயிர்!

கொடுக்கிறேன்! மாதவிலக்கு சம்பந்தப் பட்ட எந்தவித தொந்திரவும் இல்லாத படி உள்ளுறுப்புகளைப் பயன்படுத்தி, உடலைப் பாதுகாப்பதற்கான ஒரு எளிய பயிற்சி அது.

தாய்-சேய் நலம் என்பது ஒரு நாட்டைப் பொறுத்தது; மனித குலத்தையே பொறுத்தது.

நோயற்ற உடலை உடையவர்கள் தான் அமைதியாக, மகிழ்ச்சியாக வாழ முடியும். அவர்களுக்கு அறிவும் திறம் பட இயங்கும். அவர்களால்தான் ஆன்மீக உயர்வு பெற்று இயற்கை இன்பங்களையும் துய்த்து மகிழ முடியும். எனவே ஒவ்வொருவரும் நோயற்று வாழ வழிகண்டு நின்று ஒழுகி வாழ வேண்டும்.

நாம், சமுதாயத்தில் ஓர் அங்கம். சமுதாயத்தினிடமிருந்து பெற்ற பொருள்கள், வாய்ப்புகள், வசதிகள் மூலமாகத்தான் நாம் இந்த உடலையும் அறிவையும் உருவாக்கிக் கொண்டுள்ளோம். எனவே இந்த உடல் சமுதாயத்தின் சொத்து. அதனைக் கெடுப்பதற்கு நமக்கு அதிகாரம் இல்லை. அதனை நலமாக வைத்துக் கொள்ள வேண்டியது நமது கடமை.

உயிர் உய்வடைய வேண்டும். அறிவிற்கு முழுமைப்பேறு கிட்ட வேண்டும். உயிர் வீடு பேறு - விடுதலை அடைய வேண்டும். அதற்கான ஆன்மீகப் பயணத்திற்கு இந்த உடல் தான் வாகனம். ஆகவே, உடலை உயர்வாகக் கருதி, அதனைச் சீர்கேடு அடையாமல் போற்றிப் பாதுகாக்க வேண்டும். அப்போதுதான் ஆன்மீகப் பயணத்தில் வெற்றி பெற முடியும்!

> “இந்த உடல் சமுதாயத்தின் சொத்து! அதை

உடலில் எற்கனவே இருக்கிற நோய்களைப் போக்கிக் கொள்வதை சிகிச்சை (cure) என்று சொல்வார்கள். அதைவிட சிறந்தது என்னவென்றால் நோய் வராமலே தடுத்துக் கொள்வது (Prevention) ஆகும்.

அவ்வாறு நோய் வராமல் தடுத்துக் கொள்வதற்குரிய ஒரு விழிப்பு நிலை.. அதற்குரிய செயல், ஒழுங்குமுறைகள், உடல் உளப்பயிற்சிகள் இவற்றைத் தெரிந்து கொண்டால், நோய் வந்த பிறகு தீர்த்துக் கொள்வதைவிட, வருமுன் காப்பது மிகச் சுலபமானதெனத் தெரிய வரும்.

நமது உடல்... ஆகாசம், காற்று, வெப்பம், நீர், நிலம் ஆகிய பஞ்ச பூதங்களால் ஆனது.

இதில் ஆகாசம் என்கிற விண் உயிராகவும், நிலம் என்பது பரு உடலாகவும், மற்ற மூன்று பூதங்களும் இவற்றிற்கிடையே காற்று ஓட்டம், வெப்ப ஓட்டம், இரத்த ஓட்டமாகவும் உள்ளன.

உடல், நலத்துடன் இருக்க வேண்டுமானால்.. பரு உடலுக்கும், நுண்ணுடல் ஆகிய உயிருக்கும் இடையே உள்ள காற்று ஓட்டம், இரத்த ஓட்டம், வெப்ப ஓட்டம் இவற்றில் ஒழுங்கு வேண்டும்.

இந்த மூன்றின் ஓட்டத்தில் தடை,



தேக்கம், திசை மாற்றம், வேக மாற்றம் முதலியன ஏற்பட்டால் அதற்கேற்ப நம் உடல் நலம் பாதிக்கப்படும்.

கருவமைப்பினால் வரும் உடல் அமைப்பு மாற்றத்தாலும் உடல்நலம் பாதிக்கப்படும்.

அத்துடன்... உணவு, உறக்கம், உழைப்பு, உடலுறவு, எண்ணம் இந்த ஐந்தையும் அலட்சியம் செய்தாலோ, அளவுக்கு அதிகமாக ஈடுபட்டாலோ, முரண்பாடாகச் செயல் புரிந்தாலோ உடல் நலம் பாதிக்கப்படும்.

> கெடுப்பதற்கு, நமக்கு அதிகாரம் இல்லை!

தற்செயல் விபத்துகள், தட்ப வெப்ப ஏற்றத் தாழ்வுகள், சூழ்நிலையால் வரும் குழப்பம் இவற்றாலும் உடல் நலம் பாதிக்கப்படும்.

எந்த விதத்தில் உடல்நலம் பாதிக்கப்பட்டாலும், நாமே அதனைச் சரிப்படுத்தி உடலைச் சரிசெய்து கொள்வதற்குரிய ஆற்றல், ஒவ்வொருவருக்கும் இயற்கையிலேயே தேவையான அளவு உள்ளது.

பாதிப்பு ஏற்படும்போது மனிதன் தன்னுடைய முயற்சியால்- உடல்பயிற்சி, உளப் பயிற்சி, தகுந்த வரைமுறை, ஓய்வு... இவற்றில் போதிய அளவில் மாற்றம் செய்து உடல் நலத்தைக் காத்துக் கொள்ளலாம்.

நோய் கடினமாக இருந்தால் தக்க மருந்து வகைகளை உபயோகிக்கலாம்!

மனத் தூய்மை, ஒழுங்கான உணவு, அளவான உழைப்பு, ஓய்வு இவற்றுடன் கூடிய வாழ்க்கை, நோய்கள் இல்லாமல்... உடல் நலத்துடன் வாழ உதவும்.

பேராசை, சினம், கடும் பற்று, முறையற்ற காம எண்ணங்கள், கவலை, பொறாமை போன்ற உணர்ச்சி வசப்பட்ட மனநிலைகள்... உடல் காந்த சக்தியினை அளவுக்கு மீறி அழித்து விடும்.

எனவே, உடல் நலம் கெடும். தவத்தாலும், ஆராய்ச்சியாலும் இந்த வளர்ச்சி நிலையை நாம் மாற்றி விடலாம்.

நம் உடலில் அடக்கி வைக்கக் கூடாத சில சக்திகள் உள்ளன. அவை: தூக்கம், தாகம், சிறுநீர், தும்மல், இருமல், வாந்தி, பசி, கொட்டாவி, மலம், ஏப்பம், சுக்கிலம், கண்ணீர், அபான வாயு, மூச்சு ஆகியன.

மேற்கண்ட சக்திகள் எப்போது எழுச்சி பெறுகின்றனவோ அப்போதே அவற்றைச் சமம் செய்து விட வாய்ப்பு வசதி வேண்டும்.

தவிர, உடலுறவு இல்லாமல் இருப்பதும் கூடாது! அதுவே பல நோய்களுக்கு வழி வகுக்கும்! அப்படியா? எப்படி?

*(அடுத்த வாரம்)*

# வேதாத்திரி மகரிஷி 8

## மனசிலா?
## இத்தனையா?
## யப்ப்பாடி!!

வாழ்க்கைக்கு
உதவும்
உன்னதத் தொடர்

ரொம்ப முக்கியம்: உடலுறவை கணவன் மனைவிக்கு இடையில் மட்டும், அதுவும் அளவோடு வைத்துக் கொள்ள வேண்டும்.

இத்தகைய அளவான, மிகுதியை, கழிவைக் கழிப்பது என்ற நிலையிலான உடலுறவு ஆன்மீகத்திற்கு எப்போதும் தடையாகாது மாறாக உதவியாகத் தான் இருக்கும்! உடலுறவில் அதிகம் ஈடுபட்டால் அது உடல் சுகத்தையும் அறிவையும் மழுங்கச் செய்துவிடும்.

நமது உடலில் உயிர்ச்சத்து கணந்தோறும் செலவாகிக்கொண்டே இருக்கிறது. அதேபோல் வந்துகொண்டும் இருக்கிறது. உணவின் மூலமாகவும், காற்றிலிருந்தும் கோள்களின் அலை வீச்சினாலும், பூமியின் நடு மையத்திலிருந்து மேல் நோக்கி வரும் ஆற்றலிலிருந்தும் நமக்கு உயிர்ச்சக்தி கிடைக்கிறது.

மேற்கண்ட நான்கு வகை ஆற்றலும் நமக்குத் தேவை. அறிவுக்கும், உடலுக்கும் உகந்த விதத்திலே இவை ஈர்க்கப்பட வேண்டும்.

உணவை மாத்திரம் எப்போதும் நிரப்பி வைத்துவிட்டால் மற்ற மூன்று வகைகளில் வருவதைத் தடுத்து விடுகிறோம். இதனால் சில குறைபாடுகள் உண்டாகலாம். அவற்றைத் தடுக்க அடுத்த முறை உணவுக்கு ஒரு மணி நேரம் முன்னதாகவே பசி எடுக்குமாறு அளவு முறையோடு உண்ண வேண்டும்.

அளவோடு உணவு உண்டால், உடல், உணவைச் சீரணிக்கும். மல பந்தம், அஜீரணம் இவை இரண்டும் ஏற்படாமல் பாதுகாப்பது உடல் நலத்தைப் பேணும் வழிகளில் முக்கியமானது.

இன்று உள்ள சமுதாயச் சூழ்நிலையில் பலருக்கும் உடல் உழைப்பிற்கு வாய்ப்பே இல்லை. ஆனால் உடல் நலமாக இருக்க உடலின் எல்லா அவயவங்களுக்கும் இயக்கம் தேவை. இல்லாவிட்டால், அங்கே கழிவுப் பொருள் தேக்கத்தினால்- இரத்தம், காற்று, வெப்ப ஓட்டங்களில் தடை முதலியன ஏற்பட்டு நோய் ஏற்படலாம்.

எனவே, உடல் அவயவங்கள் அனைத்துக்கும் இயக்கம் அளிக்கின்ற மாதிரி

## வாழ்க வளமுடன்!

எளிமையான சில உடற்பயிற்சிகளைத் தினமும் செய்து வர வேண்டும். அதன் மூலம் நாம் நோயற்று வாழலாம்!

உடல் நலம் எந்த அளவு முக்கியமோ அந்த அளவு மனநலம், மனவளம் முக்கியம்.

காரணம்?

எல்லா உயிர்களும் வாழ நினைக்கின்றன. மனிதனும் துன்பம் இல்லாத இன்பம் நிறைந்த வாழ்க்கையையே வாழ நினைக்கின்றான்.

வாழ்க்கையையும், வாழ்க்கையின் நோக்கத்தையும், அந்த நோக்கத்திற்கேற்ப வாழும் முறை என்ன என்பதையும்

அறிந்து வாழும்போதுதான் இன்பமாக வாழ முடியும்.

பழக்கத்தின் காரணமாகவும், புலன் கவர்ச்சியினாலும் சூழ்நிலையாலும் நாம் தவறுகள் செய்கின்றோம். செய்த தவறுகளே துன்பமாக முளைக்கின்றன. பொதுவாக நாம் செய்யும் தவறுகள் நமக்குத் தெரிவதில்லை. விழிப்புணர்வுடன் இருந்து நாம், நம் தவறுகளைக் கண்டறிய வேண்டும். இனிமேல் தவறு செய்யாமல் இருக்க வேண்டும்.

**ம**னம்தான் மனித வாழ்க்கையின் விளைநிலம்.

மனத்தின் தன்மை எதுவோ அதுதான் மனிதனுடைய தன்மை. மனத்தின் மாண்புதான் மனிதனின் மாண்பு. மனத்தின் உயர்வுதான் மனிதனின் உயர்வு.

எனவே மனதை எந்த அளவில் நாம் உயர்த்திக் கொள்கிறோமோ, தூய்மை செய்து கொள்கிறோமோ, வலுப்படுத்திக் கொள்கிறோமோ, நெறிப்படுத்திக் கொள்கிறோமோ, அந்த அளவிலேதான் மனிதனுடைய வாழ்வு, மனிதனுடைய மதிப்பு, மனிதனுடைய வெற்றி, மனிதனுடைய எல்லா வளங்களும் அமையும்.

மனதை அடக்க நினைத்தால் அலையும். மனதை அறிய நினைத்தால் அடங்கும்.

தவறிழைப்பது மனம்! இனித் தவறு செய்யக் கூடாது என்று தீர்மானிப்பதும் அதே மனம்தான். தவறு செய்யாத வழியைத் தேர்ந்து ஒழுக வேண்டியதும் மனமே.

மனதைப் பழைய நிலையிலேயே வைத்துக்கொண்டு புதிய நல்ல வழியில் எப்படிச் செல்ல முடியும்?

மனதின் குறைகளைப் போக்கியாக வேண்டும். நல்ல வழியில் தீர்மானமாக நிற்கும் சுயபலத்தை மனதிற்கு ஊட்டியாக வேண்டும்.

மனதைத் தாழ்த்திக் கொள்வதும் உயர்த்திக் கொள்வதும் மனத்திடம்தான் இருக்கிறது. மனம் தன்னை உயர்த்திக் கொண்டால் இடையறா இன்ப நிலையை அடையலாம்.

இன்பமும் அமைதியும் மனதிற்குள்ளிருந்துதான் வரவேண்டும். அதற்கு மனம் தன்னையே நன்கு பூரணமாக அறிந்து கொள்ள வேண்டும். மனம் தனது மூலமான உயிரில் ஒடுங்கிப் பின்னர் உயிரின் மூலமான இறைநிலையை எய்தினால் அறிவாகிறது

அந்நிலையைப் பெற்ற மனதினைக் கொண்ட மனிதனும் தெய்வமும் தரத்தில் ஒன்றே.

மனம் -இயற்கை- சமுதாயம் என்ற முக்கோணத்துக்குள்தான் மனிதன் வாழ்ந்தாக வேண்டும். இதில் இயற்கை மாற்றப்பட முடியாதது. அதனை மனம் அறிந்து மதிக்கும் அளவுதான் மனதிற்கு உயர்வு கிட்டும்.

அதேபோல், சமுதாயம் இயற்கையை ஒட்டிய சில விதிமுறைகளுக்கு ஏற்ப அமைந்துள்ளது. எனவே சமுதாய வளத்தையும் சமுதாய ஒழுங்கையும் பாதுகாத்துப் பயனாகிய இன்பம் துய்க்கும் பக்குவத்தை நம் மனம் பெற்றாகவேண்டும்.

தினந்தோறும் சமையலறையில் பாத்திரத்தை

**நல்ல வெயில் நேரங்களில் கூட அழகான வானவில்கள் அடிக்கடி தோன்றுவது பூமியில் ஒரே ஒரு இடத்தில்தான். அந்த இடம் அமெரிக்காவின் நயாகரா நீர்வீழ்ச்சி!**

உபயோகிக்கிறோம் அதனைச் சுத்தம் செய்து வைத்தால் தானே மறுநாளைக்கு நன்றாக இருக்கும்?

அதுபோல, தினந்தோறும் நாம் நம்முடைய வாழ்க்கையிலே மனதை அலைய விட்டுக் கொண்டு அதனால் உடலையும் இன்னும் வாழ்க்கையில் உள்ள நலன்களையும் குழப்பம் செய்து கொள்வதை மாற்றி, தினந்தோறும் தவத்தின் மூலம் மனத்தைச் சுத்தப் படுத்தி, மனத்தை அதன் உண்மை நிலைக்குக் கொண்டு வந்து வைக்க வேண்டும்.



மனத்திற்கு இரண்டடுக்குப் பதிவுகள் உள்ளன.

ஒன்று கருவமைப்பினால் பெற்றோர்களை அடிப்படையாகக் கொண்டு வந்தது.

மற்றது, பிறந்தது முதல் என்னென்ன நினைத்தோமோ, என்னென்ன செய்தோமோ அவை அனைத்தும் பதிவாகியுள்ளன.

இந்த இரண்டும் சேர்ந்துதான் ஒரு மனிதனுடைய தன்மையாக உருவாகிறது!

கடந்த கால அனுபவங்களில், மனதை இயக்கிப் பதிவுகளைப் பெற்று ஒரு தன்மையை நாம் கொண்டுள்ளோம். அதை மாற்றி மனதை நம்முடைய விருப்பப்படி நடத்தி நாம் அடைய வேண்டிய எல்லா இலட்சியங்களையும் அடைய அதற்கென ஒரு பயிற்சி வேண்டும்.

பழக்கத்திற்கும் விளக்கத்திற்கும் இடையே போராடிக் கொண்டிருக்கக் கூடிய மனத்தின் பழக்கத்தை முறையாக மாற்றிக்கொண்டு விளக்கத்தை நம் விளக்கமாகப் பெற்று அதன் வழியே வாழ்க்கையை அமைத்துக் கொள்ள உள்ள முறையான பயிற்சியே மனவளக் கலை!

மனம் தன் திறமையையும், வல்லமையையும் பெருக்கிக் கொள்ளும் பயிற்சியே **தவம்!**

மனம் தன்னைத் தூய்மை செய்து கொள்ள எடுக்கும் முயற்சியே **தற்சோதனை.**

மனம் தூய்மையடைந்து மேலும் மேலும் அத்தூய்மையில் தன்னை உறுதிப் படுத்திக் கொள்வதே **குணநலப் பேறு.**

மனம் தூய்மையில் பூரணத்துவத்தை அடைந்து அமைதியாக இருப்பதே **முழுமைப்பேறு.**

மனம் ஒரு நிரந்தரமான பொருள் இல்லை. உயிரிலிருந்து தொடர்ந்து வந்துகொண்டேயிருக்கும் அலை இயக்கம்தான் மனம்.

இதுவரையில் நாம் பழக்கத்தின் வழியே வாழ்ந்து கொண்டிருக்கிறோம். இந்நிலையிலிருந்து மாற்றம் வேண்டுமானால் விளக்கம் வேண்டும்.

'நாம் எங்கிருந்து வருகிறோம்? எதற்காக வாழ்ந்து வருகிறோம்? எங்கே போகிறோம்? நமது வாழ்வின் நோக்கம் என்ன?' -என்ற கேள்விகளைக் கேட்டுக் கொள்ள வேண்டும்.

இதை, நீங்கள் ஒருமுறை தனியே அமர்ந்து உங்களுக்குள் தீவிரமாகவும், உண்மையாகவும் எழுப்பிப் பாருங்கள்.

ஒருமுறை ஒருமுறை- ஒருமுறை-

*(அடுத்த வாரம்)*

வாடகை

கொடுக்குலை!

''அந்த ஆள் ஆபீஸ்ல மானேஜர் கிட்டே ஏகப்பட்ட ஓலை வாங்கியிருக்காரு..''

''நிஜமாவா..?''

''ஆமாம்! அவரு வாங்கின ஓலையை வைச்சு ஒரு குடிசையே போடலாம்னா பாருங்களேன்..''

''எப்படி?''

''நேத்திக்கு, நா போன கல்யாணத்துனால எனக்கு ரூ.79.95 காசு லாபம்..''

''இருபது ரூபாய் மொய் எழுதினேன். ரூ.99.95 காசு செருப்பை தள்ளிக்கிட்டு வந்துட்டேன்..''

ஜோக்ஸ்

–வி.சாரதிடேச்சு

# வேதாத்திரி மகரிஷி

ஒவ்வொரு மனிதனும், தான் வாழவந்த நோக்கத்தைத் தெரிந்து கொண்டு அந்த நோக்கத்திற்கு ஏற்ப தன் வாழும் முறையை அமைத்துக் கொள்ள வேண்டும்.

வாழ்க்கையின் ஊடே அவ்வப்போது ஏற்படும் அனுபோக அனுபவங்களை அசட்டை செய்யாமல் கவனமாகக் குறித்துக் கொள்ளவும், புரிந்து கொண்டு மதிக்கவும் வேண்டும்.

வாழ்க்கையின் இடையிடையே ஏற்படும் சிக்கல்களைக் கண்டு மிரளாத அளவு அறிவை வளர்த்துக் கொள்ள வேண்டும்.

அவற்றைத் தீர்த்துக் கொள்ளும் வல்லமையையும் பெருக்கிக் கொள்ள வேண்டும்.

அறிவில் உயர்வு பெற- உடல், உயிர், மனம், மெய்ப்பொருள் என்ற நான்கைப் பற்றியும்- அவற்றிற்கிடையே உள்ள தொடர்பைப் பற்றியும் சரியாகவும் தெளிவாகவும் அறிந்துகொள்ள வேண்டும்.

மனம் என்றாலும் எண்ணம் என்றாலும் ஒன்றுதான்! மனத்தின் இயக்கத்தையும், இயக்க நிலையையும் எண்ணம் என்ற சொல் சிறப்பாகக் குறிக்கிறது.

உயிர்ச் சக்தியின் இயக்க விளைவுதான் எண்ணம். அது அறியும் திறனுடைய தாய் அறிவென்றும் கூறப் படுகிறது.

மனம் இயங்கிக் கொண்டுதான் இருக்கும். அதுதான் அதன் இயல்பு! அதன் தன்மை! அதுதான் அதன் இயற்கை!

இந்த இயற்கை விதியை உணர்ந்து விழிப்புடன் இருந்தால் உயர்வு. அறியாமல் மனத்தின் போக்கிற்கு எண்ணத்தை விட்டு விட்டால் அழிவுதான் மிஞ்சும்.

எண்ணம் எங்கும் செல்லும் வல்லமையுடையது!

விழிப்புத் தவறும்போது அது அசுத்தத்திலும் செல்லும்!

தவறான எண்ணங்களை நாம் கவனமாக இருந்து தவிர்க்க வேண்டும். அதற்கு வழி, எப்போதும் நல்ல எண்ணங்களை நாமே விரும்பி முயன்று மனத்தில் இயங்க விட்டுக் கொண்டிருக்க வேண்டும்.

## வாழ்க்கைக்கு உதவும்

எண்ணத்தை ஆராய்ச்சியிலும் தூய்மையிலும் வைத்திருப்பவன்



# வாழ்க வளமுடன்!

## உன்னதத் தொடர் 9

அறிஞன். மகான். ஞானி.

'எண்ணம் என்பது எப்படி இயங்குகிறது? அதிலிருந்து பல்வேறு அகக் காட்சிகள் எவ்வாறு தோன்றுகின்றன?' - என்று நீங்கள் அடிக்கடி

ஆராய்ந்து பார்த்துக் கொண்டிருந்தால் நீங்களும் அறிஞர்களாகத் திகழலாம்.

எண்ணத்தின் வேகமும், இயல்பும், அறிந்தோர்க்கு எண்ணமே இன்பமயம்!

எண்ணமே எதிர்காலத்திற்கான நம் வாழ்க்கையின் சிற்பி. எண்ணத்தின் சக்தி மற்றும் இயல்பு அறிந்திடில் எண்ணம் பிறக்கும் இடமும் விளங்கும்.

இயற்கையின் சிறப்பே எண்ணமாகும்.

தெளிந்த திறன் பெற்ற எண்ணத்திற்கு இயற்கை ஒத்துழைக்கின்றது. கட்டுப்படுத்துகின்றது.

ஒருமுறை ஒரு தீய எண்ணத்தை மனதில் எண்ணிவிட்டால் போதும்! அது மறுபடியும் உதிக்காமல் செய்வது

அத்தனை எளிதன்று!!

விருந்தாளி- வேண்டாத விருந்தாளி எனில் ஒருமுறை முகத்தைச் சுளித்தால் போதும்., போய் விடுவார்! வேண்டாத எண்ணமோ விரட்ட விரட்ட மீண்டும் வரும்!

வெற்றி வேண்டுவோர், எதிர் வரும் பிரச்சினையைப் பார்த்து அலசி ஆராய வேண்டும். அவருக்கு நேர்முகமான துணிவான அணுகுமுறை வேண்டும்.

அதேபோல-

கவனிக்க: ஆசையை அடியோடு ஒழிப்பது என்பது இயலாத செயல்! அதற்குத் தேவையும் இல்லை! ஆனால், தயங்காமல், நாம் நம் ஆசையைச் சீரமைக்க வேண்டும்.

தேவைகளைப் பெருக்கிக் கொண்டே செல்லக்கூடாது பெருக்கினோமானால் அனுபோகத் திலேயே மனம் சென்று கொண்டிருக்கும்.

பழிச்செயல் புரிந்து மேலும் மேலும் பிறவித் தொடர் நீளும் தேவைகளை முடிந்த வரை சுருக்க வேண்டும்.

அனுபோகப் பொருட்கள் மிக மிக உடல் நலம் கெடும். சொத்துக்களின் எண்ணிக்கை மிக மிக மன அமைதி கெடும்! பாதுகாக்கப்பட வேண்டிய குடும்ப உறுப்பினர்கள் எண்ணிக்கை மிகமிக சுதந்திரம் கெடும்!

வெறுத்து ஒதுக்குவது துறவாகாது.

அறிந்து, உணர்ந்து... தொடர்பு மற்றும் உறவினைச் சரியாகக் கணக்கிட்டு அளவு முறையுடன் அனுபோகம் கொள்ளும் மனநிலை தான் துறவு.

தூங்கும்போது தலையணை தேவைதான். அதற்காக, அதனை எந்நேரமும் தலையில் கட்டிக் கொண்டிருப்பதில்லையே?

அதுபோல-

தேவைப்படும்போது, தேவையான அளவில் மட்டும் பொருட்களின் மேல் எழும் ஆசையை ஏற்று நிறைவு செய்ய வேண்டியது தான்.

நிறைவு செய்ய முடியாத, நூறு ஆசைக் குப்பைகளை மனதில் சேர்ந்து வைத்துக் கொண்டு இருப்பதால் யாருக்கு லாபம்?

**அறிவை உணர்ச்சி வெல்வது இயல்பு. அறிவால் உணர்ச்சியை வெல்வது உயர்வு.**

நிறைவேறாத ஆசைகள் மனதில் உள்ள அளவு, மன அமைதி கெடும்! மன ஆற்றல் குறையும்! உடல் நலம் குறையும்! எரிச்சலும், கோபமும் அடிக்கடி வரும். இந்த சூழ்நிலையை புரிந்து கொண்டு ஆசையை சீரமைத்தாலே நலம் கிட்டும்.

விருப்பத்தை ஒழித்துவிட முயல வேண்டாம். வெறுப்பை ஒழித்தால் அதுவே மேன்மை நல்கும்!

அதேபோல, சினத்தை ஒழிக்க வேண்டும்!

சினம் ஒழிய மனம் அடையும் நிலைதான் பொறுமை!

எந்த சூழ்நிலையிலும் ஒருவனைச் சினம் அணுகவில்லையானால் அவன் ஞானம் பெற்றுவிட்டான் என்று கொள்ளலாம்.

தன்னையும் கெடுத்துப் பிறரையும் கெடுத்துத் தற்காலத்திலும் துன்பம் உண்டாக்கிப் பின்னரும் துன்பத்தை நீடிக்கச் செய்யும் ஒரு உணர்ச்சி வயப்பட்ட பகை உணர்வே சினம் ஆகும்.

நெருங்கிய நண்பர்களிடத்திலே, சுற்றத்தார்களிடத்திலே நம்மோடு அன்பு கொண்டு நமது நலனுக்காக வாழ்ந்து கொண்டிருப்பவர்களிடம் தான் அடிக்கடி சினம் வருவதைப் பார்க்கிறோம்.

கவனிக்க-

சினம், அச்சம் இரண்டும் ஒரு மனிதனின் வாழ்வை சீர்குலையச் செய்யும் உட்தீயாகும்!

சினம் எழும்போது நமது ஜீவகாந்த சக்தியானது அதிகமாக வெளியேறுகிறது. அதனால் உடலும் மனமும் பாதிக்கப்படும்.

பிறர்மீது சினம் கொள்ளும் போது அந்தக் குறைக்கு உங்களிடம் தவறு உள்ளதா என்று முதலில் பாருங்கள்.

நம் சினத்தால் எப்போதும் பிறர் திருந்துவதில்லை. ஒருவேளை



அவர்கள் நமக்கு பயந்து அடங்கிப் போயிருக்கலாம். ஆனால் திருந்தியிருக்க மாட்டார்கள்.

அதேபோல, தவறு செய்யப்பட்ட கையோடு புத்தி சொல்லக் கூடாது. குத்திக் காட்டுவதுபோல அறிவுரையும் இருக்கக்கூடாது.

தேவையான இடத்தில் சினம் கொண்டதுபோல நடிக்கலாம். யார் மீது நாம் சினத்தை செலுத்துகிறோமோ அவர்களுக்கு மட்டும் தான் அது சினமாகத் தோன்ற வேண்டும்.

அறிவை உணர்ச்சி வெல்வது இயல்பு. அறிவால் உணர்ச்சியை வெல்வது உயர்வு.

அறிவின் குறைபாட்டினால் இயற்கை நியதி தெரிவதில்லை. அறியாமையால் நாம் தவறு செய்துவிட்டு பின் கவலைப்படுகிறோம். கவலையென்பது உள்ளத்தின் கொடிய நோயாகும்.

திறமையின்மை, அச்சம் இவை இரண்டும் கவலையினைப் பெருக்கும் மன நிலையாகும். வாழ்க்கை என்பதே சிக்கல் நிறைந்த மனப் போராட்டமாகும். உடலும் உயிரும் சேர்ந்ததே ஒரு சிக்கல்தானே?

அதுசரி, உண்மையில் பார்பனன், பிராமணன் என்பவர் யார்?

*(அடுத்த வாரம்)*



# ஆறாவது அறிவை அறியலாமா?

தீர்க்க முடியாத துன்பம் என்று ஏதொன்றும் கிடையாது!

தீர்க்கும் வழியை தீர்க்கமாக அறியாதவர்களே உண்டு. திறக்க முடியாத பூட்டே கிடையாது. சரியான சாவியைக் கண்டு பிடிக்காதவர்கள்தான் உண்டு.

அறிவாற்றல், கவலையினால் வீணாய் போகும்! அதையடுத்து உடல் நலமும் குன்றிப்போகும்.

வந்த துன்பம் ஏற்றுச் சகித்து அவற்றைப் போக்க வழிகண்டு முறை யோடு போக்கி இன்பம் காத்து எந்தத்

# வாழ்க வளமுடன்!

துன்பம் வரினும் எதிர்நோக்கி நிற்போமானால் இன்பமே மிகுதி படும். துன்பங்கள் தோல்வியுறும். இன்பத்தை முறையோடு, அளவுடன் அனுபவிக்கத் துன்பமே பெரும்பாலும் தோன்றாது. உண்மை! முனையுங்கள்! உணர்வீர்கள்!!

நான் யார் என்பதற்கு விடை கிடைத்தால் தெய்வநிலை அறியலாம். மெய்ப்பொருளை உணரலாம். அறிவு என்பதும் உணரப்படும்.

விண் என்ற பரமாணுவின் நுண்ணிய இயக்கத்தை அறிந்த அறிவே விஞ்ஞானம்.

அலை நின்று போனால் அந்த அலைக்குப் பெயர் கடல்! கடலினுடைய சிதைவு அல்லது பிரிவு- அலை!

அதுபோல நிலையாக இருக்கக் கூடியது பிரம்மம்.

அதிலிருந்து தோன்றி இயங்கிக் கொண்டிருக்கக் கூடிய அசைவு, கடலிலே அலை போன்றது விண்!

சக்தி என்ற இயக்கத்தை நிறுத்திவிட்டால் சிவம். சிவம் என்பது இயங்கும்போது சக்தி!

மெய்ப்பொருளாக இருப்பது சிவம்- அதனுடைய அசைவாக இருப்பது பரமாணு. அதனுடைய கூட்டமாக இருப்பது தோற்றம்.

எந்தப் பொருளைப் பார்த்தாலும் தோற்றம், அணுக்கூட்டு, பரமாணு, அதனுள் மெய்ப்பொருள் என்று பார்க்கப் பழகிக் கொள்ளுங்கள்.

இறைவனே 'நான்' ஆக இருக்கிறான் என்ற உண்மையைத் தெளிவாக உணர்ந்த நிலையிலே தன் முனைப்பு எழவே எழாது. அந்நிலையில் சிறிய 'நான்' அற்றுப்போகும்.

இதுவரையில் எல்லாவற்றையும் பார்த்து, ரசித்து, வாழ்ந்தவன் தனது மூலம் என்ன என்று தன்னையே திரும்பிப் பார்க்கிற நிலையே அறிவின் உயர்ந்த நிலை.

அறிவையே அறிந்துகொள்ளக்கூடிய அறிவின் உயர்ந்த நிலையே ஆறாவது அறிவு!

சாதாரண மனிதன் புலனளவிலே அஞ்ஞானியாக இருக்கிறான்- தன்னை நன்றாக நோக்கி அறிந்தவன் மேலும் உள்நோக்கி இரண்டாவது பாதையைப் பார்க்கும்போது பார்ப்பனன் எனப்படுகிறான். அதற்கும் மேலாக அறியும் எல்லோரும் பிராமணர் எனப்படுகிறார்கள்.

எல்லா உயிர்களிடத்தும் இறை நிலையைக் காண வேண்டும். அப்படிக் காணக் கூடிய அளவு நாம் அறிவிலே உயர்வு பெற வேண்டும்.

அறிந்தது சிவம் மலர்ந்தது அன்பு! சிவமாகிய இறை நிலையை உணர்ந்தால் அது அன்பாக மலரும் என்று பொருள்.

அன்பு வேறு, இறைநிலை வேறு அல்ல. உண்மையில் மெய்ப்பொருளை உணரும் போது தான் கருணை பிறக்கும்.

**வேதாத்திரி மகரிஷி**

**வாழ்க்கைக்கு உதவும் உன்னதத் தொடர்**

எல்லாம் இறை நிலை தான்!

நானும் இறை நிலை தான் என்று சொல்லிக் கொண்டு அதை வாழ்க்கையில் பயன் படுத்தாவிட்டால் அதை வறட்டு வேதாந் தம் என்று கூறுவார்கள்.

பிற உயிர்க்குத் துன்பம் இழைக்காமல் இருக்கும் அணுகுமுறை ஒன்று. துன் பத்தைப் போக்கி உதவுவது மற்றொன்று.

தன்னை உணர்வதற்குத் தவம் வேண்டும். உயிர்களுக் குக் கடமை செய்ய அறம் வேண்டும்.

அறிவை அறிய ஆர் வம் எழுந்துவிட்டால் அது தன்னை அறிந்து முடிக் கும் வரையில் அமைதி பெறாது.

**வாழ்த்தி வாழ்த்தி எப்படிப்பட்டவர்களையும் நண்பர்களாக மாற்றிவிட முடியும். அவர்களுடைய செயல்களைத் திருத்திவிட முடியும்.**



கடல் நீர் ஆவியாகி, மழையாகி, குளமாகி, குட்டையாகி, ஆறாகி மீண்டும் கடலை அடையும்போதுதான் அமைதி பெறுவது போல.. இறை நிலையிலிருந்து பரிமாணத்தால் மனிதனா னவன், மீண்டும் இறைநிலையை அடையும்போதுதான் அமைதியடைய முடியும்.

எல்லாப் பேறுகளையும் உங் களுடைய வாழ்க்கையிலே பெற்று சிறப்பாக வாழவேண்டும் என பிறரை 'வாழ்க வளமுடன்'- என்று வாழ்த்துவது மிக உயர்ந்த பலனை அளிக்கும்.

வாழ்த்தும் பழக்கத்தினால் சினம் அடிக்கடி வருவதைத் தவிர்க்கலாம். பகைமையைத் தவிர்க்கலாம்!

வாழ்த்தி வாழ்த்தி எப்படிப்பட்டவர் களையும் நண்பர்களாக மாற்றிவிட முடியும். அவர்களுடைய செயல்களைத் திருத்திவிட முடியும் எண்ணங் களை ஒழுங்கு படுத்தி நல்லவர் களாக மாற்றிவிட முடியும்.

முதல் மனிதன் வந்தது எவ்வாறு?'- என்று பார்ப்போமா?

தசாவதாரத்திலே, இதை, நம் முன்னோர்கள் சுருக்கமாகச் சொல்லி வைத்துள்ளார்கள்.

பல நூற்றாண்டுகள் கடந்த பின்னர் 'டார்வின்'- என்பார் தசாவதாரத்தை விஞ்ஞான வழியிலே எடுத்துக் காட்ட முயற்சித்தார்.

முதன் முதலில் தண்ணீர் தோன்றியது.

அதன் ஆரம்ப தசையிலே என்ன ஜீவராசி தோன்றி யிருக்க முடியும்?

'மீன்'தான் தோன்றியிருக்க முடியும்! அதைத்தான் 'மச்சாவதாரம்'- என்றார்கள்.

மண் விரிந்தது. அடுத்த கட்டத் தில் மண்-தண்ணீர் இரண்டுக்கும் இடையே உயிர் வாழக்கூடியது ஆமை! எனவே 'கூர்மம்' இரண் டாவதாக வந்தது.

முடிவாக மனித இனத்தின் தோற்றம், வளர்ச்சி ஏற்பட, மண்ணிலே வேரூன்றிய புல் பூண்டு இவற்றைத் தோண்டித்தான் ஜீவராசிகள் வாழ வேண்டும் என்கிற நிலை. அதற்கு 'வராக அவதாரம்' என்றார்கள்.

எந்த உயிரினம் மனித உயிரினத் திற்கு ஏற்றதாக இருக்கிறது என்று யோசித்து அவர்கள் அறிவுக்கு சிம்மத்தினுடைய முகம்தான் ஒத் திருக்கிறது என்று கண்டார்கள்.

அதனால், அடுத்ததை 'நரசிம்ம அவதாரம்'- என்றார்கள்.

இதை வைத்து உயிரினத்தின் பரிணாமம், உடலமைப்புப் பரிணாமம் (Evolution of living being, Bodily evolution) கொண்டு வந்தார்கள்!

அதைத் தொடர்ந்து வாயும் மனமும் பெற்ற 'வாமனனாகவும்,' பின்னர் பூமியைக் கிளறி பயிரிட்டு வாழ்ந்த கலப்பையை அடிப்படையாகக் கொடுத்து பலராமனையும், கடைசியாக எல்லாம் உணர்ந்த செழிப்பான அறிவு நிலையைக் காட்டுவதற்கு 'கிருஷ்ணனாகவும்' - உருவகப்படுத்தினார்கள்.

மேலும் வரப்போகும் அவதாரத்தையும் சொல்லி வைத்தார்கள், அந்தச் சிந்தனாசக்தி மிக்க பெரியோர்கள்: கலியுகத்தில் 'கல்கி' அவதாரம் என்பதாக... உடல் வளர்ச்சி அறிவின் வளர்ச்சி (Evolution of Knowledge cultural Evolution) இது எல்லாம் அந்தக் காலத்திலேயே எண்ணிப் பார்த்து விவரித்து வைத்துள்ளார்கள்!

'மனிதன், தான் எங்கிருந்து வந்தோம்?'- என்று சிந்தித்துப் பார்த்தால்... அவனது தாய்-தந்தையர், பிறகு அவர்களின் பெற்றோர் என்று பின்னோக்கிச் சென்றால், வருவது: முதல் மனிதன்!

அதற்குமுன் விலங்கினங்கள், நீர்வாழ் உயிரினங்கள், ஓரறிவு ஜீவராசிகள் என்று இவற்றிலிருந்து பரிணாம மாற்றத்தில் மனிதன் வந்துள்ளான் என்று தெரிய வரும்.

இந்த ஓரறிவுப் பொருளோ அணுக் கூட்டத்தால் ஏற்பட்டது. அணுவோ பல ஆகாசத் துகள்கள் (energy particles) சேர்ந்து உருப்பெற்ற ஒரு தொகுப்பு. துகள்கள் பொருள் அல்ல! தானே சுழன்றுகொண்டு இருக்கக் கூடிய ஒரு அலையே தவிர வேறு ஒன்றும் இல்லை (What we refer to as the energy particle is only a whirling wave) அந்த அலைதான் எல்லாம் வல்ல இறையாக, இருப்பாக (Static State) சுத்தவெளியாக இருப்பதாகும்.

எல்லாம் வல்ல இறை நிலையிலே இருந்துகொண்டு அணுவாகி, அணுக்கள் கூடிப் பலவாகி...

அதிலே இருந்து ஜீவராசிகளாக, அதில் இருந்து பல பரிமாணங்களாகி இன்றுவரையில் இடைவெளி விடாமல்... நாம் தொடர்ந்து வந்திருக்கிறோம்.

லாஸ் ஏஞ்சல்ஸ் என்ற இடத்தில் இதுபற்றி என்னிடம் ஒரு கேள்வி கேட்டார்கள். பதிலளித்தேன்: 'மனமே கடவுள்!'- என்றேன்.

எப்படி?

(அடுத்த வாரம்)


வாழ்க வளமுடன்...

வாழ்க வையகம்...

RAMRAJ

ராம்ராஜ்

காட்டன்

• வேஷ்டிகள் • பனியன்கள்

• சார்ட்டுகள் • டிராயர்கள்

அனைத்து முன்னணி ஜவுளி நிறுவனங்களிலும் கிடைக்கும்.

# வாழ்க வளமுடன் — ஏ! உயர்ந்த சமுதாயமே!

அமெரிக்காவின் லாஸ் ஏஞ்சல்ஸில் என்னிடம் இந்தக் கேள்வியைக் கேட்டார்கள்: "எல்லா மதங்களுடைய கருத்தும் ஒன்றே என்று நீங்கள் எப்படிச் சொல்ல முடியும்?''

நான் பதில் சொன்னேன்_

"யார் கடவுளை வணங்கினாலும் தன்னுடைய எண்ணத்தைத் தான், மனத்தைத்தான் வணங்குகின்றார்களே தவிர வேறு எதையும் இல்லை!' -என்று பதில் அளித்தேன்.

**"கடவுளை வணங்கும்போது கருத்தினை உற்றுப்பார் நீ**
**கடவுளாய் கருத்தே நிற்கும் காட்சியைக் காண்பாய்**
**அங்கே''– என்றேன்.**

யார் எந்த வகையில் கடவுளை வணங்கினாலும் சரி, சிறிது நேரம், பொறுத்து எது நிற்கிறது என்று பார்த்தால் நம் மனம்தான் அந்த வடிவம் எடுக்கிறது என்று புரியும்!

சக்தியையோ, விக்கிரகத்தையோ, அகண்டாகாரமாக நிற்கும் வேறு எதையுமோ கடவுள் என்று வணங்கினாலும் அந்த வடிவம் எடுப்பது நீங்கள்தான்_ உங்கள் மனம்தான்.

எனவே, மனத்தைப் பக்குவப் படுத்திக் கொள்வதற்காகச் சிறுசிறு நல்ல பழக்கவழக்கங்களை ஏற்படுத்திக் கொள்வதற்காகவும், மனோதிடம், மனவலிவு கொள்வதற்காகவும், ஏதோ ஒரு வழியில் உருவகப்படுத்திக் கொண்டு உங்கள் மனத்தைத் தான் நீங்கள் வணங்குகிறீர்கள்!

ஆகவே, உலகத்திலே உள்ள எந்த மதத்திலேயும் கடவுளைப் பற்றிச் சொல்லியிருந்த போதிலும்கூட அவர்களும் அந்த மனத்தைத் தான் வணங்குகிறார்களே யொழிய வேறு எதையும் இல்லை.

ஆமாம்! எல்லாம் வல்ல இறை சக்தியே- ஊடுருவி இயங்கிக்கொண்டு இருக்கின்ற முறையிலே- மனிதனிடத்திலே மனமாக இருக்கிறது.

எல்லாம் வல்ல முழுமுதற் பொருளாக உள்ள பிரம்மம், வெட்டவெளி, சுத்தவெளி என்றெல்லாம் பெயரிடப்பட்டுள்ள மெய்ப் பொருளாக இருப்பது ஒன்றுதான்.

கர்மயோகம் என்ற நல்ல நெறியை உலக மதமாகக் கொள்ளும்போது... உலகம் முழுவதும் (விஞ்ஞான பூர்வமாகக்) கடவுளைச் செயல் விளைவாகக் காணலாம்!

அவ்வாறு காணும் அறிவு வந்து விட்டால் பிறகு அறநெறி செழிக்கும்! உலகம் உய்யும்!

ஒருவரிடமிருந்து ஏதேனும் எதிர்பார்க்கும் வரையிலே_ உணர்ச்சி வசப்பட்ட நிலைதான், உலகத்தில் இருக்கும்.

அந்த உணர்ச்சி வசப்பட்ட நிலையிலிருந்து செயல்களைச் செய்யச் செய்ய... பதிவுகள் ஏற்பட ஏற்பட... மீண்டும் அதையே செய்ய, உலகமெங்கும் சிக்கல்களும், துன்பங்களும் மலிந்துதான் வரும்.

இவற்றையெல்லாம் போக்கி, உலகத்திலே அமைதி நிலவ வேண்டுமென்றால்... ஒவ்வொருவரும் தன் கர்மத்தை சிரத்தையாகச் செய்ய வேண்டும்!

தன் கடமையை உணர்ந்து செய்யவேண்டும்!

சிறு குழந்தை முதற்கொண்டு முதியோர் வரையிலே வழிவகுத்துத் தரத்தக்க தகைமை கொண்டது கடமை அறம் என்கின்ற 'கர்ம யோகம்!'

மனிதன் எடுத்த நாற்பிறவியின் நோக்கமே– நல்ல முறையிலே அறிவு வளர்ச்சி பெற்று எல்லா வகையிலும் மகிழ்ச்சியோடு வாழ்ந்து... முடிவு காண வேண்டும் என்பதுதான்! அதற்கு மனநிறைவு வேண்டும்!

# வ ள மு ட ன்!

## வேதாத்திரி மகரிஷி

### வாழ்க்கைக்கு உதவும் உன்னதத் தொடர்

எதிர்பார்ப்பு தொடரும் வரையிலே மனநிறைவு என்பது ஏற்படவே ஏற்படாது.

நாம் எதையும் எதிர்பார்த்து நிற்க வேண்டிய நிலையிலே இயற்கை நம்மைப் படைக்கவில்லை.

இயற்கையினுடைய பரிணாமத்திலே ஒவ்வொரு ஜீவனும் உற்பத்தியாகும்போதே அதற்குத் தேவையான அனைத்தும் சேர்ந்து இணைந்தே வந்துள்ளது.

அதுதான் இயற்கையின் நியதி!

'ஒருவர் பிச்சை எடுத்து வாழ்கிறார்'- என்றால்... அவரை 'பிச்சை எடுப்பதற்காக' இயற்கை உண்டு பண்ணவில்லை.

இயற்கையிலிருந்து பிச்சை எடுப்பவராக அவர் வந்தாரில்லை.

எல்லா ஆற்றலையும் அடக்கமாகக் கொண்டுதான் நாம் வந்திருக்கிறோம்.

அந்த ஆற்றலையெல்லாம் நாம் நல்ல முறையிலே பயன்படுத்த வேண்டும் என்று எண்ணும்போதுதான் நன்மை செய்ய முடியும்.

'பிறருக்கு நாம் ஏன் நன்மை செய்ய வேண்டும்?' -என்ற ஒரு கேள்வி உங்களுக்கு எழலாம்!

நாம் பிறந்தோம். பதினைந்து,

பதினாறு வருடங்கள் வரையில் எப்படி வாழ்ந்தோம்?

சமுதாயத்திலிருந்து பெருமளவு பொருளாதாரத்தை, இன்னும் பலவற்றைப் பெற்றுக் கொண்டுதான் நாம் வளர்ந்து வந்துள்ளோம்.



அவ்வாறு பெற்றுக்கொண்டதால், சமுதாயத்திற்குக் கடன் பட்டவர்கள் தானே நாம்?

இத்தனையும் அனுபவித்து அனுபோகித்தபின் நாம், அதற்கு ஏதேனும் திருப்பித் தந்தோமா?

இல்லையே?!

ஆகவே சமுதாயம் தந்ததுதான் எல்லாம்! இந்த உடல் உட்பட! The significance of the body in that you are indebted to the society... எனவே சமுதாயத்திடம் நாம் பட்ட கடனைத் தீர்க்கத்தானே வேண்டும்?

எப்படி?

அதற்கான வழியென்ன?

'உடல் வளர்ச்சி, அறிவு வளர்ச்சி பெற்றபின் அதைக்கொண்டு, அந்த வலுவைக் கொண்டு நம் சமுதாயத்திற்கு என்னென்ன நன்மை செய்ய முடியுமோ அதைச் செய்வதே சரியான ஒரு 'கடமை உணர்வு' - எனலாம்.

ஒரு அம்மையாருக்கு மூன்று பிள்ளைகள்.

"இந்த சம்சார பந்தத்திலிருந்து நான எப்போது விடுபடப் போகிறேனோ?

சமுதாயத்திற்குச் சேவை செய்து அதன்மூலம் ஆண்டவன் அருளைப் பெற முடியவில்லையே?

இந்தப் பிள்ளைகளைக் கட்டிக்கொண்டு காலையிலிருந்து மாலை வரை அழவேண்டியிருக்கிறதே?'' - என்றார்கள்.

"உங்கள் ஒவ்வொரு பிள்ளையும் என்ன செய்துகொண்டிருக்கிறார்கள்?'' -கேட்டேன்.

அதற்கு அவர்கள், "ஒரு பிள்ளை 'இன்ஜினியரிங்' படிக்கிறான். அடுத்தவன் 'பி.எஸ்ஸி'! மூன்றாமவன் 'பத்தாவது' படிக்கிறான்''- என்று பதில் சொன்னார்கள்.

"இவ்வளவு ஆற்றலைக் குடும்பத்திலே வைத்துக் கொண்டு- ஒவ்வொரு பிள்ளையையும் சமுதாயத் திற்கு நலம் தரத்தக்க செயல்வீரர்களாக உருவாக்கிக் கொடுக்கிறீர்களே..?! இதுவே சமுதாயத்திற்கான உங்களின் ஒரு சிறந்த சேவை என்று தெரிந்து கொள்ளக் கூடாதா?'' என்று கேட்டேன்.

"அட! இதுவரையில் நான் இப்படி நினைத்துப் பார்க்கவில்லையே?!

இந்தப் பிள்ளைகள் படித்த படிப்பைக் கொண்டு, செய்யப் போகின்ற நல்ல காரியங்களையெல்லாம் எண்ணிப் பார்க்கின்றபோது.. சமுதாயத்திற்கு நல்ல பயன்கள் கிட்டும் என்பது உண்மைதான்!

தாங்கள் சொல்வது போல், நான், அவர்

●●

'ஒருவர் பிச்சை எடுத்து வாழ்கிறார்' — என்றால்... அவரை 'பிச்சை எடுப்பதற்காக' இயற்கை உண்டு பண்ணவில்லை..

●●

களையெல்லாம் நல்ல முறையிலே வளர்த்துப் படிக்க வைத்திருக் கிறேன்!

தங்களின் இந்த விளக்கம் எனக்கு தற்போது, அதுவும் நான் மன நிம்மதியில்லாமல் தவித்துக் கொண் டிருந்தபோது கிடைத்ததால்.. சமாதானமாகிறது. மனம் மிக்க மகிழ்ச்சி அடைகிறது!'' -என்று அந்த அம்மையார் தெரிவித்தார்கள்.

நான் தொடர்ந்து விளக்கினேன்.

"இதைவிட நீங்கள் எந்த ஆஸ்ர மத்திற்குப் போய் என்ன கண்டுவிடப் போகிறீர்கள்?

அதாவது, நீங்கள் உணவு சமைத்துப் போட்டு... நீங்களும் ஆனந்தமாக உண்டு. நல்ல கடமையைச் செய்கிறோம் என்கிற சிறப்பையெல்லாம் விட்டுவிட்டு... இன்னொரு இடத்திலே போய் பிச்சை வாங்கி வாழ்க்கை நடத்துவதிலே என்ன பெருமை இருக்கிறது?'' -என்று கேட்டேன்.

அந்த முறையிலே ஒவ்வொரு வரும் தான் தனக்குச் செய்ய வேண்டிய கடமையினைச் சரியாகச் செய்வதும் சமுதாயக் கடமை தானே?!

அப்படி இல்லாமல், 'நான் சமுதாயத்திற்குக் கடமை செய்கி றேன்!' -என்று உடலைக் கெடுத்துக் கொண்டால் உங்களுக்கும் தொல்லை.. சமுதாயத்திற்கும் பாரம்..

அதேபோல-

'குடும்பத்திற்காக உழைக் கிறேன்' -என்று இரவு பகலாகப் பணியாற்றி.. படுத்த படுக்கையாகி- ஒருவன் காலமானான் என்றால் அவனும் இல்லை என்றாகிவிடும்! குடும்பமும் சீரழியும்!

எனவே, இப்படி நேராமல், சூழ்நிலை புரிந்து, ஒன்றினால் ஒன்று கெடாமல், விளைவறிந்து, விழிப்போடு செயலாற்றுவதே கர்மயோகத்தின் கடமை. அறத்தில் உள்ள நல்ல உயர்வாகும்!

அதுசரி, பாவப்பதிவுகள் என்று ஒன்று உண்டா? என்றால் அதைப் போக்கும் வழிகள் என்னென்ன?

நீங்கள் கேட்கலாம்.

பதில் உண்டு!

அது-

(அடுத்த வாரம்)



வாழ்க வளமுடன்...
வாழ்க வையகம்...
RAMRAJ
ராம்ராஜ்
காட்டன்
• வேஷ்டிகள் • பனியன்கள்
• சார்ட்டுகள் • டிராயர்கள்
அனைத்து முன்னணி ஜவுளி நிறுவனங்களிலும் கிடைக்கும்.


# வாழ்க வளமுடன்!

# தாலி எப்படித் தோன்றியது?

**வா**ழ்க்கையானது ஆண், பெண் என்ற இருவரும் இணைந்து தான் நடைபெறுகின்றது. இந்த இரண்டு பேர் கூட்டுறவில்தான் பிறவி தோன்றுகிறது.

என்றாலும்கூட-

ஒருசில காரணங்களால் உலகெங்குமே ஆண்கள் மேலோங்கவும் பெண்கள் கீழாக மதிக்கப் பெறும் ஒரு நிலைமை ஏற்பட்டுள்ளது. தொடக்க காலத்தில் அதற்குரிய காரணம் இருந்தது.

காலத்தால் அந்த நிலைமை போனபிறகும்கூட பழக்க வழக்கத்தை ஒட்டி ஆண்களுக்கு அதே ஆதிக்க மனப்பான்மை ஏற்பட்டு, தொடர்ந்து வந்துகொண்டு இருக்கிறது.



**வேதாத்திரி மகரிஷி**

ஒரு சமுதாயம் திருந்த வேண்டுமானால் இந்தக் குறைபாடுகள் நீங்கத்தான் வேண்டும்.

இந்தக் குறைபாடுகளை நீக்கிக் கொள்வதற்கு ஒரு சாரார் மட்டும் - ஆண்கள் மட்டுமோ, அல்லது பெண்கள் மட்டுமோ- முயன்றால் போதாது.

இரண்டு பேர்களுமே தங்கள் குறைபாடுகளை உணரவேண்டும்; அவற்றை முறையாகப் போக்கிக் கொள்கின்ற அக்கறை அவர்களுக்கு வரவேண்டும்.

ஒரு குடும்பம் என்று எடுத்துக் கொண்டீர்களானால்...

அந்தக் குடும்பம் நலம்பெற வேண்டும். அந்தக் குடும்பத்தில் நல்ல குழந்தை பிறக்க வேண்டும், அந்தக் குழந்தை அறிவுடையவனாக, சமுதாயத்தில் பொறுப்புள்ள பிரஜையாக வாழவேண்டும், குடும்பத்திற்கு நல்ல உறுதுணையாக இருக்கவேண்டும் என்றுதான் எல்லோரும் விரும்புகிறோம்.

அப்படியானால் அந்தக் குழந்தைப்பேறுக்கு உரிய ஆண், பெண் இருவருமே சம உரிமை, அறிவிலே திறமை, நுட்பம் இவை நிறைந்தவர்களாகத்தான் இருக்க வேண்டும்.

ஆண்களுக்கு மாத்திரம் கல்வி வசதி, செல்வ வசதி இன்னும் அதிகார வசதி எல்லாமே வைத்துக் கொண்டு பெண்களுக்கு அவை மறுக்கப்பட்டால் என்ன ஆகும்?

ஒருபுறம் அறிவிலே, செல்வத்திலே, மற்றும் எல்லாவற்றிலுமே எழுச்சி, மற்றொரு புறத்திலே எல்லாவற்றிலும் தாழ்ச்சி. அங்கே பிறக்கக்


"நாட்டில் பஞ்சம் தலை விரித்து ஆடுகிறது மன்னா..."
"இனிமேல் ஒழுங்காக ஆடச்சொல்கிறேன் போ......"
-எஸ். மோகன்

வேதாத்திரி மகரிஷி

# எது இன்பம்? எது பேரின்பம்?

வாழ்க்கைக்கு உதவும் உன்னதத் தொடர் 12

பாவம் என்ற சொல்லுக்கு தமிழில் பழிச் செயல் என்று பொருள்!

இந்த பழிச் செயல்கள் எப்படி பதிவாகின்றன என்பதை நாம் விஞ்ஞானபூர்வமாக உணர்ந்துகொண்டு அதற்கு ஏற்றவாறு நமது எண்ணங்களை, செயல்களைச் சீரமைத்துக் கொள்ள வேண்டும்.

எண்ணம், சொல், செயல் இந்த மூன்று வகையிலே நாம் செயலாற்றி வருகின்றோம்; வாழ்கின்றோம்!

ஒவ்வொரு செயலுக்கும் ஒரு விளைவு உண்டு.

அந்த விளைவு தனக்கோ, பிறருக்கோ, தற்காலத்திலோ, பிற்காலத்திலோ, அறிவுக்கோ, உடல் உணர்ச்சிக்கோ, துன்பம் தருமானால் அதுதான் 'பாவம்' என்று சொல்லப்படுகிறது.

இந்த பாவம் வருத்தத்தைத் தரக்கூடியது.

ஆகையினாலே ஒரு செயல் செய்யும்பொழுது அது நம்மிடம் பதிவாகிறது. செய்தபிறகு ஏற்படக் கூடிய துன்பமும் பதிவாகிறது. அந்தப் பதிவு பழக்கமாகி அதன் வழியே மீண்டும் செய்ய.... பிரதிபலிப்பு, செயலாற்றல், இன்ப துன்ப விளைவுகள் உண்டாகின்றன.

ஆறாவது அறிவினைப் பெற்ற மனிதன் பிறருடைய உள்ளம் உணர்ந்து இன்ப துன்ப உணர்வுகளைத் தெரிந்து கொண்டு அதற்குத் தக்கவாறு தன் எண்ணம், சொல், செயல்களைப் பயன்படுத்தக்கூடிய விவேகத்தை வளர்த்துக் கொள்ள வேண்டும்.

ஒவ்வொரு மனிதனுக்கும் 'மனம்' என்பது ஒன்று உண்டு. அந்த மனத்தை அறியத்தக்க அறிவுதான் ஆறாவது அறிவு.

ஆனால், மனத்தை எடுத்துக் காட்டவும், இப்படித் தான் உள்ளது என்று விவரிக்க முடியாத ஒரு மறைபொருளாகவும் அது இருக்கிறது.

இப்படி மறைபொருளாக உள்ள மனத்தின் தோற்றம், இயக்கம், விளைவுகள் இவைகளை எல்லாம் தெரிந்து நல்ல முறையிலே பயன்படுத்தக்கூடிய ஆற்றல்தான் ஆறாவது அறிவின் சிறப்பாகும்.

அத்தகைய அறிவைப் பெற்ற மனிதன் பாவச் செயல்கள் செய்யாமல்... தன் உடலைத் தூய்மையாகவும், மனத்தைத் தூய்மையாகவும் வைத்துக்கொள்ள, அறிவுக்கு மூலப்பொருளாக உள்ள எல்லாம் வல்ல

இறை நிலையோடு கலந்து உறவாகி எப்பொழுதும் இன்பமாக இருக்கக் கூடிய வாழ்க்கையை அமைத்துக் கொள்ள வேண்டும் என்பது முக்கியம்!

மெய், வாய், கண், மூக்கு, செவி என்ற பஞ்சப் புலன்களின் மூலமாக அனுபவிக்கக் கூடிய இன்பம் அவ்வப் பொழுது மாறிவிடும்.

இன்பம் கொஞ்சம் அதிகரிக்கின்றபொழுது அதுவே துன்பமாக உணரப் பெறுகிறது.

அப்படியின்றி இயற்கையை உணர்வது, இறை நிலையை உணர்வது, அறிவை உணர்வது, இந்த உலகிலே உள்ள பரு உருவத் தன்மைகளையும் குணா குணங்களையும் அதற்குரிய காரண காரியங்களையெல்லாம் விளங்கிக் கொள்வது என்ற நிலையில் சிந்தித்துச் செயல்படுத்தி வாழும்போது வாழ்க்கை சலிப்பில்லாத இன்பமாக இருக்கிறது.

அந்த சலிப்பில்லாத இன்பத்தைத்தான் பேரின்பம் என்று சொல்லுகிறோம்!

இந்தப் பேரின்பத்தை அனுபவிக்க, இந்தப் பேரண்டத்தின் உற்பத்திக்குக் காரணமான மெய்ப்பொருளோடு- அறிவானது, கலந்து ஒன்றி 'அவனே நானாக இருக்கிறேன்; அவனேதான் என்னிடம் அறிவாக இருக்கிறான்' என்ற தெளிவு பெற்ற நிலையில்... உயிர்கள் எல்லாமே இறைவனுடைய திருவுருவங்கள்தான் என்ற ஒரு தெளிவில் வாழும்பொழுது... ஒருவருக்குத் துன்பம் ஏற்படுத்தக்கூடிய பழிச் செயல்களைச் செய்ய முடியுமா?

அதுபோல ஒருவர் துன்பம் அடையும் பொழுது அதைப் பார்த்து விட்டு அலட்சியமாக

# வாழ்க வளமுடன்

இருக்க முடியுமா?

முடியாது!

ஆகவே இறை நிலையை அறிவினால் உணர்ந்து... அன்பும், கருணையுமாக மாறி, பிற உயிர்களுக்குத் துன்பம் செய்யக் கூடாது என்பதும், துன்பப் படும் உயிர்களுக்கு நன்மையே செய்யவேண்டும், உதவவேண்டும் என்ற தெளிவும் உண்டாகும்.

இதுதான் மனித இனத்துக்குத் தேவையான அறிவு, தேவையான

வாழ்க்கைப் பாதை!

இந்தப் பாதைதான் அறநெறி வாழ்வுப் பாதையாகும்.

நாம் எல்லோரும் ஒரே நோக்கத்தோடுதான் செயல்படுகிறோம். பழிச்செயல் பதிவுகளிலிருந்து



**உயிர்கள் எல்லாமே இறைவனுடைய திருவுருவங்கள்தான் என்ற ஒரு தெளிவில் வாழும்பொழுது- ஒருவருக்குத் துன்பம் ஏற்படுத்தக்கூடிய பழிச் செயல்களைச் செய்ய முடியுமா?**

விடுபட்டுத் தூய்மை பெற்று இறைநிலையை அடைய வேண்டும் என்ற நோக்கத்தோடுதான் பிறந்தோம்; வாழ்ந்து கொண்டும் இருக்கிறோம்.

இருந்தாலும்... தேவை, பழக்கம், சூழ்நிலையினுடைய நிர்ப்பந்தங்களினால் சில சமயங்களில் தெரிந்தோ தெரியாமலோ, தவறு செய்துவிடுகிறோம்.

அந்த இடத்திலே, உணர்ச்சி வயப்பட்ட நிலையிலே, அறிவு சிந்திக்கத் தவறியதாலே, சூழ்நிலையின் நிர்ப்பந்தத்தாலே, தவறு நடந்துவிடுகிறது.

இப்படித் தவறுகள் எல்லாம் நம் உடலிலே பழிச்செயல் பதிவுகளாகப் பதிவுபெற்று, நமக்குத் துன்பங்களையே விளைவிக்கின்றன.

இந்தப் பழிச்செயல் பதிவுகள் நமது உடலில் எங்கெங்கே பதிவாகின்றன என்று பார்க்கும்போது-

உடல், செல்களில், மூளைச் செல்களில், உயிர்த்துகள் செல்களில், வித்து செல்களில், சீவகாந்தக் களத்தில், வான் காந்தத்தில் பதிவாகித் தக்க காலத்தில் தனக்கும் தனது வித்து வழித் தோன்றும் சந்ததிகளுக்கும் தக்க விளைவுகளை ஏற்படுத்துகின்றன.

இவ்வாறு அலைகளாகவும் பதிவுகளாகவும் நம் உடலில் தொடர்ந்து நடைபெற்ற வண்ணம் உள்ளது.

இதனைப் பல உதாரணங்களின் மூலம் விளங்கிக் கொள்ளலாம்!

உதாரணமாக... தொலைக்காட்சி நிலையத்தார் ஒரு நிகழ்ச்சியைப் படமாக எடுக்கிறார்கள் என்று வைத்துக் கொள்வோம்.

அந்த நிகழ்ச்சியின்போது கேமராவுக்குள் உள்ள படச்சுருளில் உருவம், ஒலி, நிறம் இவையாகப் பதிவாகிறது.

அதை எடுத்துவிட்ட பிறகு அந்தப் படச்சுருளைப் பார்த்தால் வெறும் பதிவுதான் இருக்கும். ஆனால் பார்க்க முடியாது.

புள்ளி வடிவமாக, அலை வடிவமாகக் காட்சி பதிந்து இருக்கும். அதனை காந்த அழுத்தத்தினால் ஊக்குவித்து அலைகளாக்கி செயற்கைக்கோளுக்கு அனுப்புகிறார்கள்.

இந்தப் படம் எடுக்கும் கருவிக்கும், இடத்திற்கும், செயற்கைக் கோளுக்கும் இடையில் உள்ள தூரத்தில் என்ன இருக்கிறது என்றால் காந்த அலைதான் உள்ளது.

அப்படி படம் எடுத்து செயற்கைக்

கோளுக்கு அனுப்பும்போது சுருங்கிய நிலையில் அலையாகச் சென்று பதிவாகி, பின்பு அங்கிருந்து பூமிக்கு அனுப்பும்போது பதிந்த காந்த அலையான நிகழ்ச்சி, தொலைக் காட்சிப் பெட்டியில் படமாக விரித்துக் காட்டப்படுகிறது.

அதாவது, சுருங்கிய அலையில் படமாக்கப்பட்டது, மறுபடியும் விரிந்து... படக்காட்சிப் பெட்டியில் தெரியும்போது அதே உருவம், ஒலி, நிறம் இவையெல்லாம் தெளிவாகத் தெரிகிறது.

இதனைத்தான் பதிவுகள் என்று சொல்கிறோம்!

அதுபோலவே ஒரு யானையைப் பார்க்கிறோம். யானை மிகப் பெரிய உருவம். அந்த உருவம் கண்ணில் வரும்போது மிகச் சிறிய அளவில், சுருங்கிய நிலையில் ஒரு கொசுவினுடைய அளவில் தெரிகிறது.

மீண்டும் சுருங்கி, உருவமே அற்ற நிலையில் மூளை செல்கள் வரைக்கும் செல்லும்போது புள்ளியாகப் பதிகிறது.

புள்ளியாகப் பதிந்ததை அலையாக மாற்றி உடலிலே உள்ள ஜீவ காந்த ஆற்றலின் திணிவு நிலையான உயிர்த்துகள்களில் மோதி பதிவாகிறது.

மீண்டும் உயிர்த்துகளிலிருந்து அந்த ஜீவகாந்த அலை வீசும்போது அவை மூளையின் தன்மையால் விரிவடைந்து எண்ணங்களாக, நினைவுகளாக, காட்சிகளாகத் தெரிகின்றன. இவ்வாறு புலன்கள் மூலம் உணரப்பெறும் அனைத்தும், அதாவது இன்பம், துன்பம், அமைதி, பேரின்பம் என்ற நான்கு வகையில் ஏற்படுகின்ற அனுபோகம், அனுபவம், விளைவு, தொடர் விளைவு எல்லாம் உடலில் உள்ள உயிர்ச் சக்தியில் எல்லாவற்றிலும் அலைகளாக விரிந்து சுருக்கப்பதிவுகளாக பதிவாகிறது.

பிறகு நினைக்கும்போது எல்லாம் விரிவடைந்து அவை எடுத்துக் காட்டப்படுகிறது.

எந்தக் கருத்தானாலும்... சொல், செயல் எதுவானாலும் காந்த அலையில் அதன் அழுத்தத்தின் அளவுக்கு ஏற்ப பதிவாகிறது என்று உணர்ந்து கொள்ளலாம்.

இந்தப் பகுதியைப் பொறுமையாகப் படியுங்கள்! தனிமையில் மனதை ஒருநிலைப் படுத்திப் படியுங்கள். புரியும். பிரமிப்பாய் புரியும்.

இதிலும் ஒரு முக்கிய விஷயம் உண்டு!

என்ன அது?

(அடுத்த வாரம்)


வாழ்க வளமுடன்...
வாழ்க வையகம்...
RAMRAJ
ராம்ராஜ்
காட்டன்
• வேஷ்டிகள் • பனியன்கள்
• சர்ட்டுகள் • டிராயர்கள்
அனைத்து முன்னணி ஜவுளி நிறுவனங்களிலும் கிடைக்கும்.

# வாழ்க

வங்களும்
ணியங்களும்!

13

்க்கைக்கு
உதவும்
உன்னதத்
தொடர்

தெளிவுபடுத்த ஒரு உதாரணம் சொல்லுகிறேனே!

இப்போது நான் பேசுகிறேன். டேப்பில் பதிவு செய்கிறார்கள். பிறகு அந்த டேப்பை எடுத்துப் பார்த்தால் அதில் ஒன்றும் தெரியாது. அந்தப் பேச்சு பதிந்த டேப்பை டேப்ரிகார்டரில் போட்டால் அதே பேச்சைக் கேட்க முடிகிறது.

அதுபோல... ஒவ்வொரு பொருட்களின் தன்மைகள், உருவங்கள் யாவும் அலைகளாக மாறி பதிவுகளாக, உயிர்த்துகள்களில் அதாவது உடலில் உள்ள உயிர் ஆற்றலில் விரிவு சுருக்க இயக்கப் பதிவாகவும், மூளையில் நினைவுப் பதிவாகவும், வித்து அணுக்களில் தரப் பதிவாகவும், பிரபஞ்ச சமஷ்டி உயிரோடு தொடர்பு கொண்டு எண்ணிறந்த மக்கள் மூளையிலும் பதிவாகின்றதோடு உயிரில் பிரதிபலிப்புப் பதிவாகவும் பதிவாகிறது.

நாம், எந்தெந்த புலன்கள் மூலமாக செயல்கள் செய்து அனுபோகம், அனுபவம் பெறுகிறோமோ அவையெல்லாம் அந்தந்த உறுப்புகளில் பதிவாகி திரும்பத் திரும்ப மீண்டும் அந்த எண்ணம்; நினைவு வரும் பொழுது அதே நினைவு, அதே காட்சி இவை மூலமாக எண்ணம் வந்து விடுகிறது.

உதாரணமாக

ஒரு இனிப்புப் பண்டம் உள்ளது. அதைப் பார்த்த உடன் நாவில் நீர் சுரக்கிறது.

# வளமுடன்!

## வேதாத்திரி மகரிஷி

எப்படி?

ஏற்கெனவே அந்த இனிப்புப் பண்டத்தை நாம், முன்பே சுவைத்திருக்கிறோம். அப்போது சுவை உணர்வுப் புலனாகிய நாக்கு எவ்வாறு இயக்கியதோ அந்த இயக்கமானது அலையாகி உடலில் ஓடிக்கொண்டு உள்ள ஜீவகாந்த சக்தியில் பதிவாகி விடுகிறது.

மீண்டும் அந்த இனிப்புப் பண்டத்தைப் பார்க்கிறபோதோ, நினைக்கும்போதோ அதில் உள்ள சுவை, சுவைத்த காலம், அதனால் பெறப்பட்ட அனுபவம் அவ்வளவும் எண்



ணத்தில் காட்சியாக வரும் பொழுது... உடலில் உள்ள எல்லா செல்களுக்கும் செய்தியை அனுப்பி, அதைப் பார்த்தவுடன் எடுக்கவும், சாப்பிடவும் அதே செயலைச் செய்வதற்குத் தயாராக்கித் விடுகிறது.

அதுபோலவே, ஒருவர் ஒரு திருவிழாவிற்குப் போகவேண்டுமென்று எண்ணுகிறார் என்று வைத்துக் கொள்வோம்.

அந்த எண்ணத்தில் ஒரு ஊர், அங்கு போகும் செயல், அங்கு

நாவில் இயக்கப் பதிவாக, உடல் முவதும் ஒலியலை அதிர்வுப் பதிவாக, மூளையில் நினைவுப் பதிவாக, வித்தில் தரப்பதிவாக, பிரபஞ்ச உயிரிலும், பிற உயிர் களிலும் பிரதிபலிப்புப் பதிவாக அமைகின்றன.

காண விழையும் காட்சிகள் அனைத்தும் அகக்காட்சியாகின்றன.

பல தடவை இந்த எண்ணம் பிரதிபலிக்கும் போது எண்ணத்திற்குச் செயலாற்றவல்ல போதிய வலிவு ஏற்பட்டுவிடும். இந்த எண்ணத்தால் ஏற்பட்ட உயிராற்றல் விரைவு அதிர்வு அலைகள் உடல் கருவிகளையெல்லாம் ஊக்கி எண்ணத்தைச் செயலாற்றத் தயார் நிலையை ஏற்படுத்தி விடும். பிறகு திருவிழாவிற்குப் போய்ப் பார்த்துக் களிக்கும் செயல் மலர்கின்றது.

இவ்வாறு செயலாகப் பதிந்த எண்ணமும் செயலும், தேவையாக, பழக்கமாக, சூழ்நிலைக் கவர்ச்சியாக மாறி அடிக்கடி மனிதனைச் செயல்படுத்துகின்றது. இதுபோன்றே நாம் பேசும் பேச்சுக்களும் பதிவாகின்றன.

நாவில் இயக்கப் பதிவாக, உடல் முழுவதும் ஒலியலை அதிர்வுப் பதிவாக, மூளையில் நினைவுப் பதிவாக, வித்தில் தரப்பதிவாக, பிரபஞ்ச உயிரிலும், பிற உயிர்களிலும் பிரதிபலிப்புப் பதிவாக அமைகின்றன.

இந்த விளக்கத்தைக் கொண்டு ஒரு எண்ணம், ஒரு செயல் எவ்வாறு பதிவு, பிரதிபலிப்பு, செயலாற்றல், இன்ப துன்ப விளைவுகள் என்ற நான்காக மாற்றம் பெறுகிறது என்பதை உணரலாம்.

இந்த உண்மையை நீங்களே உணர்ந்துதான் அறிய வேண்டும்!

இதற்குப் படிப்பு ஒன்றும் பயன்படாது. எந்த விஞ்ஞானக் கருவியும்கூட பயன்படாது. நம்முடைய மனம், நம்முடைய வாழ்க்கை முறை, நம்முடைய இன்ப துன்ப உணர்வுகள், நம் சிந்தனையைக் கொண்டு... அதற்கு உரிய முறையில் ஆராய்ச்சி செய்து அவரவர்களே தெரிந்து கொள்ள, புரிந்து கொள்ள வேண்டியதுதான்.

எந்தெந்த செயல் செய்தாலும் சரி அதற்கு ஒரு விளைவு உண்டு. விளைவு இல்லாமல் வினை இல்லை.

அது நன்மையாக இருந்தாலும் சரி, தீமையாக இருந்தாலும் சரி. நன்மையும் தீமையும் செயல்களில் இல்லை.

செய்யும் செயல் என்னென்ன விளைவுகளைத்

தருமோ அந்த விளைவைக் கொண்டுதான் நன்மையும் தீமையுமாகப் பிரித்து 'புண்ணியம்' என்றும், தீமையான விளைவாக இருந்தால் 'பாவம்' என்றும் கூறுகிறோம்.

பசி எடுக்கிறது. உணவு சாப்பிட்டுப் பசியைப் போக்கிக் கொள்கிறோம்.

நாவுக்குச் சுவையாகவும், நன்றாகவும் இருக்கிறது என்பதற்காக அதிகப்படியாக உண்டால் என்ன ஆகும்?

அந்த உண்ட உணவே தீமையை உண்டாக்குகிறது. அதாவது அளவு முறை மாறும்போது இன்பமே துன்பமாக மாறுகிறது. ஆகவே செயலில் பாவம் புண்ணியம் இல்லை.

செயல்களின் விளைவைத்தான் கவனிக்க வேண்டும்.

அதாவது பாவம் எது? புண்ணியம் எது? என்று சிந்திக்க வேண்டும்.

எண்ணம், சொல், செயல் ஆகிய ஏதொன்றாலும் தனக்கோ, பிறர்க்கோ, தற்காலத்திலோ, பிற்காலத்திலோ, அறிவிற்கோ, உடலுக்கோ துன்பம் தராது, விழிப்போடு, துன்பங்கள் நீக்கும் வகையில் செய்யப்படும் செயல்கள் யாவும் புண்ணியத்தின் பாற்படும்.



ஒருவரது எண்ணம், சொல், செயல் இவைகளினால் எதனாலேனும் தனக்கேனும், பிறருக்கேனும் அன்றைக்கோ, பிற்காலத்திலோ, உடலுணர்ச்சிக்கோ, பகுத்தறிவுக்கோ துன்பம் விளைவதாக இருந்தால் அத்தகைய செயல்கள் பாவம் என்பதாகும்.

ஆகவே, துன்பம் தரும் செயல் அனைத்தும் பாவங்கள்! இதுவே பாவப் பதிவுகள். இதற்கு இடமளித்தால் அவை திரும்பத் திரும்பப் பிரதிபலிப்பாகிச் செயல்களாக விளைந்து தனக்கும் பிறர்க்கும் வாழ்வில் துன்பத்தை ஏற்படுத்துகின்றன.

(தொடரும்)

RAMRAJ
ராம்ராஜ்
காட்டன்
• வேஷ்டிகள் • பனியன்கள்
• சர்ட்டுகள் • டிராயர்கள்
அனைத்து முன்னணி ஜவுளி நிறுவனங்களிலும் கிடைக்கும்.

# வாழ்க வளமுடன்!

புண்ணிய பாவம் என்னவென்பதும் தெரிந்துவிட்டது. எங்கு எப்படி பதிவுகள் உண்டாகிறது என்பதையும் தெரிந்துகொண்டோம். இதை மாற்றி விட வேண்டும் என நினைக்கிறோம். ஆனால் சந்தர்ப்பங்கள் நேரும்பொழுது மாற்ற முடியவில்லை.

விளக்கத்திற்கும், பழக்கத்திற்கும் இடையில் போராடிக் கொண்டிருக்கும் ஒரு வியத்தகு நிலையில்

மனிதன் வாழ்ந்து கொண்டிருக்கிறான்?

இதற்கு ஒரு பயிற்சி அவசியம் வேண்டும்.

முன்பு ஜீவகாந்த சக்தி உற்பத்தியாகிறபொழுது அந்தந்த புலன்களின் செல்களும், அதனுடைய இயக்கத்தையும்; எப்படி எப்படி இயங்கவிட்டோமோ அதே முறையில் இயங்கிக் கொண்டே இருக்கிறதனால் அந்தப் பழக்கத்தை மாற்றிக் கொள்ள பயிற்சி வேண்டும். எண்ணத்தினாலோ, அல்லது எண்ணிய உடனேயோ மாற்றமுடியாது.

எண்ணி, திட்டமிட்டு கொஞ்சம் கொஞ்சமாக அதற்கு மேல் பதிவு கொடுத்து, மாற்றுக் கொடுத்து அதன்பிறகுதான் மாற்ற முடியும்.

எவ்வளவுதான் நுண்ணிய நூல்கள் பலவற்றைக் கற்றாலும், இது நல்லது, இது கெட்டது என்று தெரிந்து கொண்டாலும் பேதமை உணர்வே, அதாவது எத்தனையோ ஜென்மமாகப் பெற்ற வினைப் பதிவுகள் நிச்சயம் நம் முன் வந்து நிற்கும்.

அதைப் போக்குவதற்கு என்ன செய்ய வேண்டும்?

சிந்தனையாற்றல் உள்ளவர்கள், இந்த உலகம் அமைதியாக இருக்க வேண்டும் என்று கருதுகிறார்கள்.

இயற்கை வளத்தை அறிவின் சிறப்பினாலும், கைத்திறனாலும் வாழ்க்கைப் பொருளாக மாற்றக் கூடிய அளவிற்கு மனிதன் முன்னேறி விட்டான்.

பிறர் உள்ளம் உணர்ந்து அதற்குத் தகுந்தவாறு நன்மை தீமைகளைக் கணிக்கக்கூடிய அளவுக்கு அறிவில் ஓங்கிவிட்டான்.

'அத்தகைய ஆற்றல் பெற்ற மனிதன் தன்னுடைய ஆற்றலைச் சரிவர பயன்படுத்தாமல் ஏன் தவறான வழியில் சென்று தவறு செய்து கொண்டிருக்கிறான்?'

இந்தக் கேள்விக்கு நாம் நிச்சயம் விடை காண வேண்டும்.

நம்மிடம் இயல்பாக இருக்கக் கூடிய உள்ளுணர்வுச் சக்தி, குணாதிசயங்கள், தன்மைகள் (Personality and Character) இவை எப்படி வந்தன? எங்கிருந்து வந்தன? என்று பார்ப்போம்.

நாம் பிறந்த பொழுது நம்முடைய பெற்றோர்களிடத்திலிருந்து, அந்தக் கருவிலே இரண்டு பேருடைய ஜீவகாந்த சக்தியும் ஒன்று சேர்ந்து உயிர்ச் சக்தியாகி கருவாக அமைந்து வந்தோம்.

வாழ்க்கைக்கு உதவும் உன்னதத் தொடர் 14

அவர்கள் செய்த வினைகள், அவர்களுடைய குணாதிசயங்கள், அவர்களுடைய பதிவுகள், அவ்வள வும் வித்திலே அலை வடிவமாக இருக்கிறது.

அது மாத்திரம் இல்லை.

'அவர்கள் எங்கிருந்து வந்தார் கள்?' என்று பின்னோக்கி கருத் தொடராகப் போய்க்கொண்டே இருந்தால் கடைசியில் ஒரு மனித னில் போய் முடியும். அவன்தான் முதலில் தோன்றிய மனிதன்.

அன்றிலிருந்து இன்றுவரையில் எத்தனை கோடி தலைமுறைகளாக வந்துள்ள மனிதனிடத்தில், எவ் வளவு காலம், என்னென்ன நிகழ்ச்சிகள், எண்ணிய எண் ணங்கள், செயல் விளைவுகள் அவ்வளவும் அலைகளாக வும், பதிவுகளாகவும் மூளை யில்தான் பதிவு பெற்று இருக்கிறது.

இந்த உடலிலுள்ள ஜீவ காந்த சக்தியானது அலை யாக ஓடிக்கொண்டே இருப் பதினாலே உடலிலுள்ள செல் களும், மூளையினுடைய செல்களும், எவ்விதமான பதிவுகள் பெற்றுள்ளனவோ, அந்தந்தப் புலன்களின் தொடர்புகளுக்கேற்ப, தேவைக்கு ஏற்ப, தூண்டுத லுக்கு ஏற்ப நினைவுக்கு அகக் காட்சியாக எடுத்துக் காட்டு கிறது.

முதல் மனிதன் உலகத்தில் எப்படித் தோன்றினான் என்று நாம் ஆராய்வோமா னால் விலங்கினத்தினுடைய வித்துத் தொடரிலேதான் மனிதன் தோன்றியிருக்க வேண்டும்.

வித்து இல்லாமல் உருவம்

வேதாத்திரி மகரிஷி

# மனிதன் தோன்றியது எப்படி?



தோன்றியிருக்க முடியாது.

சந்தர்ப்பவசமாக இரண்டு விதமான விலங்கினம் ஒன்று சேர்ந்து, அதிலிருந்து முதலில் ஒரு மனிதன் ஆணோ, பெண்ணோ தோன்றிவிட்டது.

மீண்டும் அதே விலங்கினம் கூடியதின் விளைவுதான் இந்த மனித சமுதாயம் வளர்ந்து ஒரு குடும்பமாக உலக முழுவதும் பரவி விரிந்து இருக்கக் கூடிய உலக சமுதாயமாக உள்ளது.

அந்த முதல் மனிதன் தோன்றினானே விலங்கினத்திலிருந்து, அதற்கு முன் உள்ள ஐயறிவு விலங்கினம் எப்படி வந்தது? என்று பார்க்கிற பொழுது–

நான்கறிவு, மூவறிவு, இரண்டறிவு, ஓரறிவு உள்ள தாவரங்களிலிருந்துதான் மனித இனம் உற்பத்தியாகி இருக்கிறது.

இப்போது இரண்டறிவு உள்ள ஜீவ இனத்திலிருந்து ஐயறிவு உள்ள விலங்கினம் வரையில், அவை எப்படி வாழ்கின்றன?

ஒரு ஜீவனை மற்றொரு ஜீவன் பிடித்துக் கொன்று உணவாகக் கொண்டுதான் வாழ்வை நடத்துகின்றன.

இந்த பறித்து உண்ணும் செயல்தான் விலங்கினத்திலுடைய செயல்.

அந்தப் பதிவுகள்தான் மூளையில், உடல் செல்களில் பதிவாகி இரண்டறிவு ஜீவனிலிருந்து நாலறிவு ஜீவன் வரையில் வந்து, பிறகு மனிதனாகி வருகிற வரையிலும், தற்போதும், அந்தப் பதிவுகள் பதிவாகி உள்ளன. எனவே அன்று முதல் இன்று வரை வந்துள்ள மனிதனிடம் உள்ள ஜீவகாந்த சக்தியில் அவ்வளவும் இருப்பாகத்தான் இருந்து வருகிறது.



**பெரீ...ய மீசை!**

ராஜஸ்தான் சுற்றுலாப் பிரிவில் வேலை செய்யும் ராம்சிங் சவ்ஹான் பெரிய மீசைக்காரர். இவரது மீசையின் நீளம் 10.6 அடி. கல்கத்தாவில் நடைபெற்ற உலக சுற்றுலா மையத்தில் மீசையை உயர்த்திக் காட்டுகிறார்!

-ராம்கி

இப்போது நம்மிடமுள்ள ஒரு தன்மையை, குணாதிசயத்தை எடுத்துப்பார்த்தோமானால் இரண்டறிவு புழுவிலிருந்து ஐயறிவு உடைய விலங்கினம் வரையிலும், பிறகு மனித இனம் தோன்றி இன்று வரையில், எல்லா இடங்களிலும் நடந்த நிகழ்ச்சிகள், செய்த செயல்கள், பதிவுகள் எல்லாமே தொடர்ந்து இடைவிடாது கருத்தொடராக வந்துகொண்டு இருக்கிறது.

ஆக தற்போது மனிதனை எடுத்துக் கொண்டால் எல்லா ஜீவன்களுடைய குணா

திசயங்களும், தன்மைகளும் பதிவாகி உள்ளன என்பதைத் தெரிந்து கொள்ளலாம்.

மனிதனுக்கு உணவு உற்பத்தி செய்யத் தெரியும். அதைப் பாதுகாத்து வைத்துக் கொள்ளவும் தெரியும். இருக்கிற இடத்தி லிருந்து இல்லாத இடத்திற்குக் கொண்டு போகவும் தெரியும்.

'இவ்வளவு தெரிந்துள்ள மனிதன் பறித்து உண்ண வேண்டுமா?' என்றால் தேவையில்லை. ஆனால், அந்த எண்ணம், செய்கை எப்படி வந்தது? அந்த விலங்கினப் பதிவின் காரணமாக, பழக்கத்தினால் தொடர்ந்து வந்துகொண்டே இருக்கிறது.

விலங்கினத்தில் உள்ள பறித்து உண்ணும் செயலானது, மனிதனிடத்தில் மேலும் பொருள், புகழ், அதிகாரம், புலனின்பம் இந்த நான்கு தேவைகளையும் தனதாக்கிக் கொண்டு வாழக்கூடிய அளவில் அதே விலங்கினப் பதிவு மனிதனிடம் வேலை செய்கிறது.

'இது தற்போது தேவையா?' என்றால் தேவையில்லை. இந்தச் செய்கையை மாற்றி அமைத்துக் கொண்டு வாழ முடியுமா? வாழ முடியும்!

'வாழ்வேன்' என்கிற துணிவும், ஆற்றலும் பெற்று அதற்குத் தகுந்தவாறு மனிதன், செயல்கள் செய்ய வேண்டும்.

எந்த ஒரு செயல் செய்தாலும் அந்தச் செயலுக்குத் தக்கவாறு விளைவு தானாக ஏற்படும் என்பது இயற்கையின் சட்டம்.

இந்த இயற்கையின் விதிப்படி இன்னொரு செயல் செய்தால் அதற்கும் ஒரு விளைவு வரவேண்டும் அல்லவா?

ஆகவே, முன்பு செய்த செயல்களை மாற்றி அமைக்கக் கூடிய அறிவுடன், அதற்குரிய செயல்களைச் செய்வீர்களானால் தானாகவே பதிவுகளிலிருந்து மாற்றம் பெறலாம்.

பாவப் பதிவுகள், பழிச்செயல் பதிவுகள், எந்தப் பதிவாக இருந்தாலும் மாற்றிவிட முடியும்.

மாற்றக்கூடிய, மாற்றிக் கொள்ளக்கூடிய அறிவும் ஆற்றலாக உள்ளது.

அதற்கு மூன்று வழிகளை நாம் தெரிந்துகொள்ள வேண்டும். அந்த மூன்று வழிகள் என்னென்ன?

(அடுத்தவாரம்)

வாழ்க வளமுடன்... வாழ்க வையகம்...
RAMRAJ
ராம்ராஜ்
காட்டன்
• வேஷ்டிகள் • பனியன்கள்
• சார்ட்டுகள் • டிராயர்கள்
அனைத்து முன்னணி ஜவுளி நிறுவனங்களிலும் கிடைக்கும்.

# வாழ்க வளமுடன்!

## தாலி எப்படித் தோன்றியது?

**வா**ழ்க்கையானது ஆண், பெண் என்ற இருவரும் இணைந்து தான் நடைபெறுகின்றது. இந்த இரண்டு பேர் கூட்டுறவில்தான் பிறவி தோன்றுகிறது.

என்றாலும்கூட -

ஒருசில காரணங்களால் உலகெங்குமே ஆண்கள் மேலோங்கவும் பெண்கள் கீழாக மதிக்கப் பெறும் ஒரு நிலைமை ஏற்பட்டுள்ளது. தொடக்க காலத்தில் அதற்குரிய காரணம் இருந்தது.

காலத்தால் அந்த நிலைமை போனபிறகும்கூட பழக்க வழக்கத்தை ஒட்டி ஆண்களுக்கு அதே ஆதிக்க மனப்பான்மை ஏற்பட்டு, தொடர்ந்து வந்துகொண்டு இருக்கிறது.



வேதாத்திரி மகரிஷி

ஒரு சமுதாயம் திருந்த வேண்டுமானால் இந்தக் குறைபாடுகள் நீங்கத்தான் வேண்டும்.

இந்தக் குறைபாடுகளை நீக்கிக் கொள்வதற்கு ஒரு சாரார் மட்டும் - ஆண்கள் மட்டுமோ, அல்லது பெண்கள் மட்டுமோ- முயன்றால் போதாது.

இரண்டு பேர்களுமே தங்கள் குறைபாடுகளை உணரவேண்டும்; அவற்றை முறையாகப் போக்கிக் கொள்கின்ற அக்கறை அவர்களுக்கு வரவேண்டும்.

ஒரு குடும்பம் என்று எடுத்துக் கொண்டீர்களானால்...

அந்தக் குடும்பம் நலம்பெற வேண்டும், அந்தக் குடும்பத்தில் நல்ல குழந்தை பிறக்க வேண்டும், அந்தக் குழந்தை அறிவுடையவனாக, சமுதாயத்தில் பொறுப்புள்ள பிரஜையாக வாழவேண்டும், குடும்பத்திற்கு நல்ல உறுதுணையாக இருக்கவேண்டும் என்றுதான் எல்லோரும் விரும்புகிறோம்.

அப்படியானால் அந்தக் குழந்தைப்பேறுக்கு உரிய ஆண், பெண் இருவருமே சம உரிமை, அறிவிலே திறமை, நுட்பம் இவை நிறைந்தவர்களாகத்தான் இருக்க வேண்டும்.

ஆண்களுக்கு மாத்திரம் கல்வி வசதி, செல்வ வசதி இன்னும் அதிகார வசதி எல்லாமே வைத்துக் கொண்டு பெண்களுக்கு அவை மறுக்கப்பட்டால் என்ன ஆகும்?

ஒருபுறம் அறிவிலே, செல்வத்திலே, மற்றும் எல்லாவற்றிலுமே எழுச்சி, மற்றொரு புறத்திலே எல்லாவற்றிலும் தாழ்ச்சி. அங்கே பிறக்கக்

கூடிய குழந்தை கூட
அப்படித்தான் இருக்கும்.

இந்த ஏற்றத்தாழ்வினைப் புரிந்து, அதை நாம் நீக்கிக் கொள்ளவேண்டும்.

இயற்கையமைப்பிலேயே ஆண் பெண் இருபாலருக்கும் சில வேறுபாடுகள் உள்ளன. அதற்கு நாம் மதிப்பளிக்க வேண்டியது அவசியம்தான்.

ஆனால், இன்றைய காலத்தில் பெண்களுக்கு வாழ்விலே சமபங்குகொடுக்க வேண்டும் என்ற உணர்வு வளர்ந்து வருகிறது.

அதோடு அல்லாது ஒரு சிறப்பான பங்குகூட அவர்களுக்கு உண்டு என்பதைச் சிந்தனையாளர்கள் எல்லாம் தெரிந்து கொண்டார்கள்.

ஆனால் மற்றவர்களோ பழக்கத்தின் காரணமாகவும் தமது அந்தஸ்து குறைந்துவிடுமோ என்ற அச்சத்தின் காரணமாகவும் அதைக்கொடுக்க மறுக்கின்றார்கள்.

அந்த எண்ணமானது நாட்பட நாட்பட மிகுந்துகொண்டேதான் போகிறது.

உண்மையிலே ஒரு குழந்தை அறிவுடையவனாக, திறமையுடையவனாக, நல்ல மகனாக வரவேண்டும் என்றால் ஆணும் பெண்ணும், தாயும் தந்தையும் சரிநிகர் சமானமாக, சுதந்திரத்தோடு, அறிவுச் சுதந்திரத்தோடு இருக்க வேண்டும்.

ஒருவர் சொன்னார்: "ஆண்கள் மட்டும் படித்தவர்களாக இருந்தால் போதும்; பெண்களுக்கு அந்த அளவுக்கு படிப்போ அல்லது ஆராய்ச்சியோ தேவையில்லை; அப்பொழுதும் அவர்களுக்குப் பிறக்கக் கூடிய குழந்தை நல்ல குழந்தையாக இருக்கும்; ஏனென்றால் ஆண் படித்து இருப்பதனால்'' என்று!

இதற்கு ஜார்ஜ் பெர்னாட்ஷா ஒரு அறிவுரையை வழங்கி இருக்கிறார்.

அழகுமிக்க ஒரு பெண்மணி பெர்னாட்ஷாவிடம் வந்து தன்னை அவர் மணம் புரிந்துகொள்ள வேண்டும் என்று வேண்டினாராம். 'ஏன் இந்த அக்கறை?' -என்று கேட்டபோது, "உங்கள் அறிவு மிகமிகச் சிறப்புடையது; உலகம் போற்றத்தக்கதாக அது அமைந்து இருக்கிறது; எல்லாரும் பாராட்டுகிறார்கள். நாம் இருவரும் திருமணம் செய்துகொண்டால், உங்களுடைய அறிவும், என்னுடைய அழகும் சேர்ந்து ஒரு குழந்தை பிறக்குமேயானால் அது உலகுக்குப் புதுமையாக இருக்கும்'' என்று அந்த அம்மையார் சொன்னாராம்.

பெர்னாட்ஷா, உடனே, "அது சரி அம்மா! ஆனால் உன்னுடைய அறிவும் என்னுடைய அழகும் அந்தப் பிள்ளைக்கு அமைந்து விட்டால் என்ன செய்வது?'' என்று திருப்பிக் கேட்டாராம்.

இதிலிருந்து என்ன தெரிகின்றது என்றால் ஒரு புறம் கொஞ்சம் தாழ்வு இருந்தால் கூட, அந்த தாழ்வு உணர்ச்சி மனிதனுக்கு இருக்கத்தான் இருக்கும்.

எனவே சம உணர்வு வேண்டும்! மேலும் எந்த



இடத்திலே சிறப்பு உள்ளதோ அந்தச் சிறப்பு பாராட்டப்பட வேண்டும்.

எல்லோருக்கும் ஒரு சந்தேகம், எப்படி ஆணுக்குப் பெண் அடக்கம் என்ற கருத்து ஏற்பட்டது என்ற ஒரு சிந்தனை இருக்கலாம்.

மலைப் பிரதேசத்தில்தான் முதல் முதல் மனிதன் வாழத் தொடங்கினான்.

மலை, காடு இந்த இடங்களிலே இரண்டு வித ஆபத்து மனிதனுக்கு உண்டு.

எப்பொழுதுமே கொடிய விலங்கி னங்கள் அங்கு வாழும். மனிதன் அவற்றிடமிருந்து தன்னைப் பாது காத்தும் அவற்றை எதிர்த்துப் போராடி வென்றும்தான் வாழ வேண்டும்.

அந்த நிலையிலே இருந்தபோது ஒரு பெண்ணைவிட ஆணுக்குத்தான் கொடிய விலங்கினங்களோடு போராட வேண்டிய கடமையும் வீரமும் உடல் அமைப்பும் உள்ளதைக் கண்டவர்கள் பெண்ணை ஆண் பாதுகாக்க வேண்டும் என்ற ஒரு நியதியை ஏற்படுத்திக் கொண் டார்கள்.

அந்தப் பண்பாட்டைத் தொடர்ந்து ஒரு சமுதாய வழக்கம் உண்டாயிற்று!

அப்படி ஒரு பெண்ணை ஒரு ஆண் விலங்குகளிடமிருந்தோ அல்லது முரட னிடம் இருந்தோ காப்பாற்ற வலிவு இல்லாமல் அவனுக்குத் திருமணம் கிடையாது என்ற ஒரு சம்பிரதாயம் குறிஞ்சி நாட்டில் உருவாகியது.

அதற்கு அவன், தன் வீரத்தை நிரூபிக்க

வேண்டும். சமுதாயத்திற்கு அவன் தகுதியை வெளிப்படுத்திக் காட்ட வேண்டும்.

ஒரு கொடிய விலங்கோடு போராடி அதனைக் கொன்று, தான் கொன்ற விலங்கின் பல்லையோ அல்லது நகத்தையோ அடையாளமாக எடுத்து வந்து கயிற்றிலே கட்டி ஒரு பெண்ணுக்குப் பரிசாகத் தந்து, உலகுக்கு அவனுடைய வீரத்தை மெய்ப்பிக்க வேண்டியதிருந்தது.

அப்போதுதான் தாலி கட்டும் பழக்கம் ஏற்பட்டது.

இவ்வாறு பெண்களைப் பாதுகாக்க வேண்டியது ஆண்களது கடமை என்ற முறையிலே, பெண்களை அன்பின் பெருக்கத்தால் வீட்டிலே மிக மிகப் பாதுகாப்பாக, அடக்கமாக வைத்து, ஆண்கள் வெளியிலே சென்று பொருட்களை ஈட்டி வந்து பெண்களிடம் கொடுப்பது என்பது அந்தக் காலத்திற்குப் பொருத்தமாக இருந்தது.

இன்று வாழ்க்கையிலே அதே பழக்கம் எந்த அளவுக்குத் தேவை?

நாம் ஆராய்ந்துதான் பார்க்க வேண்டும்.

தாலியைக் கூட எடுத்துப் பார்ப்போமேயானால்... கொஞ்சம் கொஞ்சமாகக் காலம் போகப்போக என்ன ஆகிவிட்டது?

**கா**தலித்து மணந்த கணவரின் அகால மரணம், தொடர்ந்து மூன்று தேர்தல்களில் தோல்வி ஆகியவற்றால் கலங்காதவர் ஷீலா தீட்சித். இன்று டில்லி பிரதேசத்தின் முதன் மந்திரியாக இருக்கும் முதல் காங்கிரஸ் பெண்மணியான இவரின் நிர்வாகத் திறனை எதிர்க்கட்சிகளாலும் பாராட்டாமல் இருக்க முடியவில்லை! 1998-ல் லோக் சபா தேர்தலில் தோற்றதும் இவர் அன்று பார்த்த ஜேம்ஸ் பாண்ட் படம் 'டுமாரோ நெவர் டைஸ்!' என்பது! 'நாளை நமதே' என்ற இந்த நம்பிக்கைதான் அவரது தாரக மந்திரம்!

-நளினி

## நாளை நமதே!



புலிப்பல் போய், தாலியைப் பொன்னால் புலிப்பல்லைப் போலவே செய்து உட்புறம் அரக்கு ஊற்றி வைத்து விட்டார்கள் - இது தென்னாட்டில்!

வடநாட்டில் என்ன ஆயிற்று என்றால் தாலி கட்டுவதில் ஒரு விந்தை!

அங்கே அடிக்கடி வேற்று நாட்டவர்களுடைய படையெடுப்பு இருந்தது. அப்படிப் போர் நேரும்போது பகைவர்கள் முதலில் சூறையாடுவது பெண்களைத்தான்.

இந்த மாதிரியான ஒரு முரட்டுத்தனம் இருந்தபோது, அப்படி அன்னியர் கையிலே சிக்கிக் கொண்டால் கற்பு அழியாமல் தம்மைப் பாதுகாத்துக்கொள்ளப் பெண்களுக்கு வசதி வேண்டும் என்பதற்காக, பொட்டாசியம் சயனைடு என்று சொல்கின்றார்களே அந்த மாதிரி ஒரு இரசாயனத்தை, நச்சுத்தன்மை கொண்ட பொருளை வாயில் வைத்து உடனே இறந்துவிட ஏது

வாக அதனை தாலியிலே ஒரு சிறு குமிழியிலே வைத்து மூடி விடுவார்கள்.

அதைத் தான் பொட்டு என்கிறார்கள்.

அதனை ஒரு கயிற்றில் கோர்த்து கழுத்தில் கட்டி விடுவது பெண்களுக்கு ஒரு சடங்காகி விட்டது.

அது எப்படி இருக்க வேண்டும் என்றால் எடுத்தால் வாய்க்குச் சரியாக வரவேண்டும்!

காரணம்?

எதிர்பாராமல் ஒருவனிடத்தில் அகப்பட்டுக் கொண்டால் தன் கற்பு அழியாத முன்னமே வாயில் வைத்துக் கடித்து உயிரைப் போக்கிக் கொள்வது என்பது அந்தக் காலத்தில் இருந்தது.

பின்னர் இதனால் என்ன ஆகியது என்றால் கணவன் மனைவிக்குள் ஏதோ சிறு தகராறு வந்தாலும் தாலியை எடுத்துக் கடிக்க ஆரம்பித்தபோது இனிமேல் இந்த மாதிரி வேண்டாம் என்று அங்கேயும் அந்தப் பொட்டுக்குள் அரக்கை வைத்து விட்டார்கள்!

இன்று எங்குமே தாலியில் அரக்குத்தான்!

தாலியானது ஆணினுடைய வீரத்தினுடைய சின்னம் என்பது போய், பெண்களுக்கு ஆபத்துக் காலத்தில் தற்காப்புச் சாதனம் என்பதும் போய், திருமணம் செய்து கொண்ட பெண் என்று அடையாளம் காட்டும் ஒரு சின்னமாக மட்டுமே இன்று ஆகிவிட்டது!

அடுத்து ஒரு முக்கிய விஷயத்திற்குப் போகலாமா?

அமெரிக்க நாட்டில் ஒரு பெண்மணி என்னிடம் ஒரு விளக்கம் கேட்டார்கள்.

நான் பெண்களுடைய உடல் நலத்தைப் பற்றிப் பேசிக்கொண்டிருக்கும்பொழுது, கற்பு நெறியைப் பற்றி அழுத்தந்திருத்தமாகச் சொன்னேன்.

அதை அந்தப் பெண்மணி புரிந்து கொள்ள முடியவில்லை.

ஆனாலும் அது புரிந்தபிறகு பல கேள்விகள் கேட்டார்கள்.

'இந்தக் கற்பு நெறி என்பது என்ன? ஆராய்ச்சியற்ற நம்பிக்கை இல்லையா சுவாமிஜி?' என்று கேட்டார்கள்.

"அம்மா, உனக்கு நான் கற்பு பற்றி விளக்கம் தருகின்றேன்" என்று ஆரம்பித்தேன்.

என்ன விளக்கம் அது?

(அடுத்த வாரம்)

வாழ்க வளமுடன்... வாழ்க வையகம்...
RAMRAJ
ராம்ராஜ்
காட்டன்
• வேஷ்டிகள் • பனியன்கள்
• சார்ட்டுகள் • டிராயர்கள்
அனைத்து முன்னணி ஜவுளி நிறுவனங்களிலும் கிடைக்கும்.

87 வேதம் 26-9-97

# வாழ்க வளமுடன்!

அமெரிக்க நாட்டில் ஒரு பெண்மணி என்னிடம் ஒரு விளக்கம் கேட்டார்கள்.

நான் பெண்களுடைய உடல் நலத்தைப் பற்றிப் பேசிக்கொண்டிருக்கும்பொழுது, கற்பு நெறியைப் பற்றி அழுத்தந்திருத்தமாகச் சொன்னேன்.

அதை அந்தப் பெண்மணியால் புரிந்து கொள்ள முடியவில்லை.

ஆனாலும், அது புரிய ஆரம்பித்த சூழ்நிலையிலும் பல கேள்விகள் கேட்டார்கள்.

'இந்தக் கற்பு நெறி என்பது என்ன? ஆராய்ச்சியற்ற நம்பிக்கை இல்லையா சுவாமிஜி?' என்று கேட்டார்கள்.

"அம்மா, உனக்கு நான் அதுபற்றி விளக்கம் தருகின்றேன்'' என்று ஆரம்பித்தேன்.

ஒரு ஆணும், ஒரு பெண்ணும் உடலுறவு கொண்டால் என்னென்ன விளைவு ஏற்படும் என்பது உங்களுக்குத் தெரியும்.

அது குழந்தைப் பேறு வரையிலே நீடிக்கும். சமுதாயத்தைச் சேர்ந்த ஒரு இணைப்பு



ஒரு தொடர்.

உடல் நலம், மனவளம், சமுதாய வளம், பொருளாதாரம், அரசியல் இவ்வளவும் ஆணும், பெண்ணும் உறவு கொள்ளும்போது அதிலே யிருந்து விளையக்கூடிய விளைவுகளாகத் தொடர்ந்து இருக்கின்றன.

ஒரு வித்து, ஒரு ஆணினுடைய வித்து, பெண் ணினுடைய கர்ப்பப்பையிலே சேருமேயா னால், அது கூவறிப்போகவோ (absorb), அல்லது வெளி யேறவோ ஒரு மாதம் ஆனாலும் ஆகும்.

அதற்கு இடையிலே, வேறொரு தரமான வித்து அதனோடு சேருமேயானால்... இப்பொழுது எப்படி இரத்தத்திலே இரசாயனப் பிரிவு என்று பிரிக்கின் றார்களோ அதேபோல வித்திலேயும் அந்த வேகம் இருக்கிறது– இரசாயன வேகம். அதிலே இரண்டு விதமான வித்துச் சக்தி ஒன்று சேருமேயானால் அது பெரும்பாலும் உடனடியாகக் கிருமிகளாகவே மாறும்!

அந்தக் கிருமிகள் கருப்பையைப் பற்றிக் கொள்ளுமேயானால் எத்தனை விதமான நோய், வியாதி வரும் என்பதை டாக்டர்களால்தான் சொல்ல முடியும்– அதை நான் விவரிக்க இயலாது!

ஆகையினால் அதைத் தவிர்க்க வேண்டும் என்கிறபோது... சாதாரணப் பெண்மணிகளுக்கு, 'கற்பு நெறி' என்பதை... ஒரு கடவுள் தன்மையாக்கி, சமுதாயத்திற்கு மேம்பாடாகச் செய்து போதித்துப் பழகி பயிற்சி செய்து அந்தப் பழக்கத்தில் நிலைத்து வருகின்றார்கள்!

இப்போது சொல் மகளே, இது ஒரு மூடநம்பிக் கையா?–என்று அந்த அமெரிக்கப் பெண்மணி யிடம் கேட்டேன்.

"இல்லை, இல்லை, இது விஞ்ஞானபூர்வமான விளக்கம். இந்த மாதிரி எங்கள் நாட்டில் யாரும் சொல்லவில்லை?!" என்று கூறினார்.



வேதாத்திரி மகரிஷி

# கற்பு என்பது அவசியமா?

"உங்கள் நாட்டில் இருக்கக்கூடிய கலாச் சாரம் எவ்வளவு காலமாக உருவாகி வந்தது?" – கேட்டேன்.

"சுமார் 300 வருடங் கள்!"–என்றார்.

16 வாழ்க்கைக்கு உதவும் உன்னதத் தொடர்

"பல நாடுகளிலிருந்து வந்தவர்கள் இங்கே இருக்கின்றார்கள். அங்கே அவர்கள் தங்கள் கலாச்சாரத்தை விட்டுவிட்டு இங்கே வந்த போது எந்த கலாச்சாரமும் இல்லாது, தான்தோன்றித்தனமாக வாழ முற்பட்ட போது அவர்களுக்கு ஏற்ற முறையிலே வாழ வேண்டிய வகை இங்கே தெரியாது போனது.

## கல்கத்தாவில் நடக்கவிருக்கும் பாரதி விழாவின் சிறப்பு விருந்தினராகக் கலந்து கொள்ள கவிஞர் மு.மேத்தா கல்கத்தா செல்கிறார்.

ஆனால் ஒவ்வொரு நாட்டிலேயும் அந்தந்த நாட்டில் போய்ப் பார்த்தீர்கள் என்றால் அவரவர்க்கென ஒரு பண்பாடு இருக்கும்.

இது விஞ்ஞான உலகம்!

இப்பொழுது நீங்களே ஆராய்ந்து கொண்டிருக்கின்றீர்கள். மேல்நாட்டில் இப்பொழுது உள்ள நிலைமை- அதாவது கருப்பையை 60 சதவீதம் பெண்கள் எடுத்துவிட வேண்டிய நிலைமை வந்துவிட்டதற்கு என்ன காரணம்?

இதுதான் காரணம்!

ஆனால் இந்த மாதிரியான சங்கடங்கள் எல்லாம் எங்கள் நாட்டில் மிகவும் குறைவு.

நீங்கள் எதை மூடநம்பிக்கை என்று சொல்கின்றீர்களோ, அதில் ஒரு விஞ்ஞான தத்துவம் மறைந்து இருக்கிறது.

எல்லோராலும் மேலோடு புரிந்து கொள்ள முடியாமல் மறைந்து கிடக்கின்றது என்பதைத் தான் 'மூடம்' என்று சொல்கிறோம்.

அதனால் அதை அடியோடு குறைபாடாகப் பேசிவிட வேண்டாம்!'' -என்று அந்தப் பெண்ணுக்கு விளக்கினேன்.



பிறகு அந்தப் பெண்மணி என்னை விழுந்து வணங்கி, "சுவாமிஜி, எனக்கு ஒரு வரம் கேட்கின்றேன். தயவு செய்து கொடுங்கள். என் மனமே பெரிய மாற்றம் அடைந்து போய் விட்டது'' என்றார்.

'என்ன வரம் வேண்டும் கேள். என்னால் முடிந்தால் தருகிறேன்' என்றேன்.

அதற்கு அவர் 'நான் மீண்டும் ஒரு பிறவி எடுப்பேனேயானால் இந்திய மண்ணில் ஒரு பெண்ணாகப் பிறக்க வேண்டும்'' என்று மனமுருகிச் சொன்னார்.

அந்தப் பெண்ணின் உள்ளத்தை நம் விளக்கம் எவ்வளவு தூரம் தொட்டு விட்டது பாருங்களேன்?!''

இப்படி, வெளிநாட்டுப் பெண்களுக்கு நம் நாட்டுப் பெண்களைப் பற்றிக் குறைவான அபிப்பிராயங்கள் இருந்து வருகிறது.

நாம் நம் கலாச்சாரத்தையும், நடைமுறைப் பண்புகளின், பழக்க வழக்கங்களின் மேன்மையையும் விளக்கிச் சொல்லும்போது மாறி விடுகிறது.

ஆகவே, நாம் உண்மை உணர்ந்த தெளிவோடு பேச வேண்டும். வெளி நாடுகளில் நம் நாட்டினுடைய கலாச்சாரதைப் பற்றித்தான் பேச வேண்டும்.

'மேல்நாட்டில் எல்லாம் ஆண்களும் பெண்களும் கை கோர்த்த படித் தெருவில் போகிறார்கள். இங்கே மட்டும் ஏன் கட்டுப்பாடு?'- என்ற எண்ணம் சிலருக்கு இருக்கும்.

அந்த நாட்டில் உள்ள சீதோஷ்ண நிலை, வாழ்க்கை முறை எல்லாம் வேறு வேறு சமுதாய அமைப்பில் அமைந்துள்ளன.

அது காலத்தால் பயன் இல்லாது போகும்போதுதான் மாறுமே தவிர அதுவரைக்கும் பொறுத்துத்தான் ஆகவேண்டும்.

அந்த நாடு சீதோஷ்ண நிலையில் பெரும்பாலும் குளிர்ச்சி நாடு. அங்கே.. ஆண், பெண் உடலுறவு ஏற்படும் வேகம் மிகவும் குறைவு.

ஆகவே, அவர்கள் செயற்கை முறையிலே பாலுணர்ச்சியினைத் தூண்டுகின்றார்கள்.

சீதோஷ்ண நிலையை மாற்ற அயலவர் கரம் தொட்டு ஆடிப் பாடி ஆனந்தக் கூத்து அடிப்பார்கள். அது அந்த நாட்டிற்கு ஒத்துக் கொள்ளும்.

ஆனால் இயற்கையிலேயே இவ்வுணர்ச்சி இந்தியாவில் வாழ்வோர்க்கு அதிகமாக உள்ளது. ஆகையினால் இங்கு அறிவால் உணர்ச்சிகளை வெல்லும் பண்புதான் அவசியம்.

ஆண், பெண் இருபாலருக்கும் கற்பு என்பது அவசியம்!

இருவரும் கற்பினுடைய பெருமையைத் தெரிந்து கொள்ள வேண்டும்.

கற்பினைக் காப்பாற்றும் கடமை இருவருக்குமே பொது! ஆயினும் பெண்களுக்குப் பொறுப்பு அதிகம்.

ஆணும் பெண்ணும் சமம்தான். ஆண் தவறிவிட்டால் பெண்ணுக் கல்லவா பாரம். வாழ்நாள் முழுவதும் களங்கம்.

எனவே, உயிரை விட மேலாகக் கற்பை மதிக்க வேண்டிய கடமை பெண்களுக்கு உண்டு!

அதுசரி, பெண்ணுக்குச் சம உரிமை, மாமியார் மருமகள் மோதல் இதைப்பற்றி என் கருத்து என்னவா? சொல்கிறேனே!

(அடுத்த வாரம்)

வாழ்க வளமுடன்... வாழ்க வையகம்...
RAMRAJ
ராம்ராஜ்
காட்டன்
• வேஷ்டிகள் • பனியன்கள்
• சர்ட்டுகள் • டிராயர்கள்
அனைத்து முன்னணி ஜவுளி நிறுவனங்களிலும் கிடைக்கும்.

# வாழ்க வளமுடன்!

வாழ்க்கைக்கு உதவும் உன்னதத் தொடர் **17**

இன்று பெண்கள் சம உரிமையைப் பற்றி அழுத்தந்திருத்தமாகப் பேசுகின்றார்கள்.

பெண்ணுரிமை குறித்து உலகம் முழுவதும் கடந்த சில வருடங்களாக வாதப் பிரதிவாதங்கள், அவர்களுக்கென இயக்கங்கள், போராட்டங்கள் நடைபெற்று வருகின்றன.

ஆனால் -

பெண்கள், தங்களைக் கவர்ச்சியாக அழகு படுத்திக்கொண்டு... ஆண்களைக் கவர வேண்டும் என்கிற எண்ணமும்... அதற்குரிய நடையுடை பாவனைகள், நகைகள் அணிவதுமாக இருக்கின்ற வரையிலே சம உரிமை ஏற்படுவது சிரமம் என்பதே என் கருத்து!



இந்தியா முழுவதும், அத்தனை மாநிலத்திற்கும் பொதுவாய் இரண்டு 'Law'க்கள் உண்டு! அந்த இரண்டு Law என்னவென்றால். Mother-in-Law, Daughter-in-Law.

மாமியார், மருமகள் என்கிற இந்த இருவருக்கும் நடக்கிற போராட்டம் அந்தக் காலத்திலிருந்து இன்று வரை என்றைக்குமே முடிவு காணப்படாமல் இருக்கிறது!

மேல்நாட்டுப்

**வேதாத்திரி மகரிஷி**

பெண்கள் அதிலிருந்து விடுபட்டு விட்டார்கள்!

அங்கு 'மாமியாரும் கிடையாது, மரு மகளும் கிடையாது' என்று சொல்கிற அளவுக்குக் கல்யாண முறை தளர்ந்து போயுள்ளது.

ஆனால் நம்நாட்டுப் பண்பாட்டிலே மட்டும் இந்தச் சச்சரவு அன்றும் இன்றும் என்றும் ஏற்படக் காரணம் என்ன?

ஒரு பெண் குடும்பம் நடத்துவதற்கு மாமியாருக்குக் கீழே இருந்து தெரிந்து கொள்ள வேண்டும் என்பதுதான் நமது வாழ்க்கை முறை! ஏற்பாடு!

அதை அடிப்படையாக வைத்துக் கொண்டு மாமியார்கள் ஆட்டிப் படைக்கின்றபோது, எப்பொழுது... என்று இந்த வீட்டை விட்டுப் போகப் போகின் றோம் என்கிற குறைபாடு திருமணத் தம்பதிகள் இரண்டு பேருக்கும் ஏற்பட்டு விடுகிறது.

பெண்ணாகப் பிறந்த நீங்கள் ஒவ் வொருவரும் இதை உணர வேண்டும்.

"நான் என்னுடைய மாமியாரிடத்தில் என்னென்னவெல்லாமோ சிரமப்பட் டேன். ஆனால் அந்தச் சிரமம் இல்லாமல் எனக்கு வரக் கூடிய மருமகளைப் பார்த்து நல்ல

# மாமியார்– மருமகள் மோதல்!



முறையில் வைத்துக் கொள்வேன்!''-

என்று ஒவ்வொருவரும் இருக்க முனைந்தால்... இன்னும் இருபது ஆண்டுகளுக்குள்ளாக எந்த மாமியாரும் எந்த மருமகளையும் ஆட்டிப்படைக்க வேண்டிய சூழ்நிலையே இருக்காது.

இதேபோல், மாமியாரின் மதிப்பையுணர்ந்து மருமகளும் மாமியாரைத் தனது அன்னையைப் போலக் காத்து அவரை மகிழ்விக்க வேண்டியதும் அவசியம்.

சம உரிமை என்று பார்க்கும்போது இந்த உரிமை பற்றியும் பார்க்க வேண்டும்!

இந்தச் சமுதாயத்திலே சமுதாய நலனை ஒட்டிச் சேவை செய்வதிலே, நாம் எவ்வளவோ பணியாற்ற வேண்டியுள்ளது.

உதாரணமாய்-

- தட்டுமுட்டுச் சாமான்களைப் போல கையில் நீரை வார்த்துத் தத்தம் பண்ணிக்கொடுப்பது என்கிற பெரும் கொடுமை இந்தச் சமுதாயத்திலே காணப்படுகிறது.

இன்றும் கூட தத்தம் செய்வது நடைபெற்று வருகிறது. உலக சமுதாய சேவா சங்க முறைப்படி செய்யும் திருமணத்தில் இதற்கு இடமேயில்லை.

அந்தக் காலத்தில் சிலர் குருகுல வாழ்க்கைக்காக காட்டில் வாழ்ந்து கொண்டிருந்தார்கள். அவர்களுக்குக் குடும்பம் நடத்தப் பெண் வேண்டியதாக இருந்தது!

அந்த மாதிரித் தவம் இருந்து மதித்த காலத்தில் பெண் வேண்டும் என்றால் விரும்பிக் கொடுத்தார்கள்.

அவ்வாறு பெண்ணைப் பெற்றுக் கொண்டு போகும்போது... பெண், அங்கே பத்து நாள் இருந்து விட்டு இங்கே வந்து பத்து நாள் தங்குவாள்... மறுமுறை அழைத்தால் 'நான் வரவில்லை' என்று சொல்லி விடுவாள்!' என்று எண்ணித் 'தத்தம்' செய்து கொடுத்து விட்டால் மறுபடியும் வர மாட்டாள் என்று 'தத்தம்' செய்து கொடுக்க வாங்கிக் கொண்டு போனார்கள்.

'தத்தம்' செய்த எந்தப் பொருளையும் திரும்பவும் எடுத்துக்கொள்ளக் கூடாது. அந்த மாதிரித் தத்தம் செய்து கொடுத்த பழக்கம் இப்போது திருமணத்தில் ஒரு முறையாகவே மாறி விட்டது.

இவ்வாறு, தேவை இல்லாத பல பழக்க வழக்கங்கள் நம் திருமண நிகழ்ச்சி முறைகளில் உள்ளன. அவை எல்லாம் தகர்த்து எறியப்பட வேண்டும்!

பெண்ணுரிமை என்றால் எல்லா வகையிலும் எல்லாக் கோணத்திலும் இருந்து அந்தச் சம உரிமையை நாம் பாதுகாக்கத்தான் வேண்டும்.

விழித்துக்கொண்ட பெரியோர்கள், புலவர்கள், எழுத்தாளர்கள்தான் பெண்ணுரிமையைப் பற்றிப் பேச ஆரம்பித்தார்கள்.

அதற்கு முன்பு இருந்த காலம், பெண்களை இழித்துப் பேசுவதையே நாகரீகமாகக் கொண்டிருந்தது.



இப்போது நாம் என்ன செய்ய வேண்டும் என்றால் 'நாம், ஆணாக இருந்தாலும் சரி, பெண்ணாக இருந்தாலும் சரி, ஒரு குடும்பத்தில் இருவருக்கும் சம உரிமை உண்டு. சம பொறுப்பும் உண்டு!

குழந்தைகளை வளர்ப்பதிலும் அல்லது குடும்பம் நடத்துவதிலும், பொருளாதாரத்தைச் சரியாக வைத்துக் கொள்வதிலும் அந்தச் சம உரிமை உண்டு என்பதை உணர்ந்து அதை எந்த வகையிலும் பாதுகாக்க வேண்டும் என்பதை உணர்ந்து ஏற்க வேண்டும்.'

இது நமது கடமை!

பழக்கத்தின் காரணமாக, இப்படி, இன்னும் எத்தனையோ குறைபாடுகள் நம்மிடம் உள்ளன.

அதை எல்லாம் படிப்படியாக நாம் போக்கிக் கொள்ள வேண்டும்.

எந்தச் சீர்திருத்தமும் எடுத்துக் கூறியோ, குற்றம் கூறியோ வர முடியாது. ஆகவே நலம் கூறி, நலம் செய்து அதன் மூலமாகத் தீமை ஒழிவதற்கு, வேண்டாதவைகள் ஒழிவதற்கு நாம் அக்கறையோடு பாடுபட வேண்டும்.

பெண் என்றாலே பொதுவாக ஒரு இரண்டாம் தரப் பிரஜையாகத்தான் உலகம் நீண்ட காலமாகக் கருதிக்கொண்டு வருகிறது. இது உண்மைக்கு மாறானது.

தத்துவ உலகத்திற்கும் இது வேறுபட்ட கருத்துத்தான்.

பெண்களுடைய மதிப்பை, சிறப்பை, உயர்வை... ஒரே ஒரு வார்த்தையிலே சொல்லிவிடலாம்.

ஆமாம்! இந்த உலகத்திலே வாழுகின்ற மக்கள் எல்லோருமே பெண்ணினத்தின் அன்பளிப்பு என்று சொன்னால் அது மிகையாகாது. அந்த முறையிலே பெருமை பெற்றவர்கள் பெண்கள்.

அந்தப் பெருமையைக் காக்க வேண்டியது, போற்ற வேண்டியது ஆண்களுடைய கடமை. இதில் இன்னும் ஒரு முக்கியமான விஷயமும் உண்டு! என்ன அது?

(அடுத்த வாரம்)

வாழ்க வளமுடன்...
வாழ்க வையகம்...
RAMRAJ
ராம்ராஜ்
காட்டன்
• வேஷ்டிகள் • பனியன்கள்
• சார்ட்டுகள் • டிராயர்கள்
அனைத்து முன்னணி ஜவுளி நிறுவனங்களிலும் கிடைக்கும்.

உண்மைக் கதை

# மேகலா சித்ரவேல்

மருத்துவமனையின் ஐ.ஸி. பிரிவுக்கு வெளியே நின்றிருந்த பாரதிக்கு இன்னதென்று சொல்ல முடியாத பீதி வயிற்றில் பிரளயமாய் உருண்டது. முதல்கட்ட மருத்துவ பரிசோதனை முடிந்தவுடன் பெரிய டாக்டர் சொன்னார்:



"ஒண்ணும் கவலைப்படாதேம்மா! இருபது நாள் ட்ரீட்மெண்ட் எடுத்தால் சரியாகிவிடும். முதல்ல ஒரு வாரம் ஐஸி. வார்டில் இருங்க பார்க்கலாம். ஏம்மா! வியாதி இப்படி முத்தற அளவுக்கு அலட்சியமா இருந்திருக்கிங்களே? உடம்பெல்லாம் மஞ்சள் பூத்துப் போச்சு. நல்லவேளை இப்பவாவது கொண்டாந்தீங்களே. முதலில் பிளட் டெஸ்ட் பண்ணிப் பார்க்கணும். என்னோட சந்தேகம் சரியா இருந்தா... அவ்வளவுதான்.. ஆனால் பணம் நெறைய செலவாகும்."

பத்தியமாகச் சாப்பிட வேண்டும் என்று சொன்னதைக் கேட்காத கணவனின் பிடிவாதத்திற்காக வேதனைப்பட்டாள்.

"போம்மா. ஐ.ஸி. வார்டுல மருந்து சீட்டு இருக்கும். வாங்கிக்கிட்டு வர்ற வழியப்பாருங்க."

பாரதி அவசர சிகிச்சைப் பிரிவுக்கு ஓடினாள். முழநீளத்திற்கு மருந்துச் சீட்டு அவள் கையில் திணிக்கப்பட்டது.

வேகமாக லிப்டை நோக்கி ஓடினாள். "இந்தாம்மா.. கீழே இறங்கறதுக்கு லிப்ட் வராது. படி வழியா இறங்கிப்போ.."

வாழ்வில் முதன் முறையாக பார்க்கின்றவர்கள் எல்லோரும் சிடுசிடுவெனப் பேசியதைக் கேட்டபோது,



பாரதியின் முகம் வாடியது. அழுகை நெஞ்சை முட்டியது. வேகமாகப் படியில் இறங்கினாள்.

மருந்துச் சீட்டைப் பார்த்ததும், கடையின் உரிமையாளர், "எல்லாமா சேர்த்து பதினைந்தாயிரம் ஆகும். பணம் இருக்கா?"

பாரதிக்கு திக்கென்றது. கைப்பையில் கடன் வாங்கி வந்திருந்த பத்தாயிரம்தான் இருக்கிறது.

"மருந்தெல்லாம்கொடுங்க சார். ரொம்ப அவசரம். என் கணவர் ஐஸிவார்டில் இருக்கார். என்கிட்டே பத்தாயிரம் தான் இருக்கு. மருந்தைக் கொடுத்திட்டு வந்து மீதி ஐயாயிரம் தரேன். பிளீஸ் தயவு பண்ணுங்க சார்."

"உங்களைப் போல வர்றவங்களுக்குப் பரிதாபப்பட்டு தயவு



பண்ணிக்கிட்டிருந்தா, எங்க ளுக்கு யாரும்மா தயவு பண்ணு வாங்க? பணம் இருந்தா மருந்து. இல்லைன்னா, இடத்தை காலி பண்ணுங்க.''

கடைக்காரர் சொல்வதில் தவறு என்ன இருக்கிறது? அவர வருக்கு ஆயிரம் தொல்லைகள். அடுத்தவர் துன்பம் பற்றி அவ ருக்கு என்ன?

திரும்பிப் பார்த்தாள். மருத் துவமனை வளாகம் பெரிய பிரம்ம ராட்சசன் போல நின்றி ருந்தது. "சீக்கிரம் வா" என்று கட்டளை இட்டது. பணம் வேண்டுமே? பாரதி தவித்து, தத் தளித்தாள். கைகளைப் பிசைந்த போது ஆறு பவுன் வளையல் கண்ணில் பட்டது.

வியர்க்க விறுவிறுக்கத் தன் முன் மருந்துகளை நீட்டிய வளைப் பார்த்து நர்ஸ் உதட் டைப் பிதுக்கினாள்.

"உனக்காக எவ்வளவு நேரம் காத்திருக்கறது. உம் புருஷன் உள்ளே உயிரைக் கையில் பிடிச் சுக்கிட்டு கெடக்கறான். நீயோ மெதுவா ஆடி அசைஞ்சுக்கிட்டு வர்ற.. இப்பதான் ட்யூட்டி டாக்டர் கீழே காண்டீனுக்குப் போனார். எப்ப வருவாரோ தெரி யலை.. நீ ஒண்ணு செய்... ஓடிப் போய் அவரு கால்ல, கையில விழுந்து கூப்பிட்டுக் கிட்டு வா.. சீக்கிரமா போம்மா."

மீண்டும் பாரதி பறந்தோடி னாள். பத்து பேரோடு சிகரெட் பிடித்துக் கொண்டு நின்றிருந்த டாக்டரைக் கெஞ்சி மன்றாடி அழைத்து வந்தாள்.

முதல்கட்ட மருத்துவ சிகிச்சை ஆரம்பம் ஆகியது. ஐ.சி. வார்டின் கதவருகில் பாரதி தவம் செய்யலானாள்.

காலையில் ஏழு மணிக்கு வந்த பெரிய டாக்டர் அவளை அருகில் அழைத்தார். கொஞ்ச நேரம் உற்றுப் பார்த்துவிட்டு மெதுவாகச் சொன்னார்:

"நான் பயந்தது போலவேதான் ரிசல்ட் வந்திருக்கு. உன் கணவருக்கு ஹிப்படைடீஸ் பீ ஜாண்டீஸ்... எப்படி வந்தது- ஏன் கவனிக்கலைங்கற கேள்வி யெல்லாம் இப்ப கேட்டுப் பயனில்லை. இனிமே என்ன செய்யலாம்ன்னுதான் யோசிக்கணும். அதனால் முடிஞ்சதை

## நாங்க மட்டும் லேசா?

நடந்து போய் வாங்கினா ஒரு விலை, காரில் போய் வாங்கினா ஒரு விலைதான் சொல்றாங்க. அதனால நான் எப்பவும் ஆட்டோவில்தான் ஷாப்பிங் செல்வேன். பாண்டி பஜார், திநகருக்கு அடிக்கடி ஷாப்பிங்

நான் முயற்சி செய்திடறேன். அதுக்கு மேல கடவுள் இருக்கார். நீ உடனே பணத்துக்கு ஏற்பாடு செய்யணும்.''

அவர் இத்தனை சொல்லியும், தான் கேட்பது முட்டாள்தனமானது என்பது புரிந்தும் அவள் பாமரத்தனமாகக் கேட் டாள்.

"நல்லாயிடும் இல்லே டாக்டர்?"

டாக்டர் புன்முறுவலித்தார். "அது உன் நம்பிக்கைன்னா, எனக்கு ஆட்சே பணை இல்லை.''

அவர் சொல்வது ஆறுதலா, அச் சுறுத்தலா? பாரதி குழப்பத்தில் கண்ணை மூடினாள். அடுத்து வந்த பத்து நாட்களும் மரண அவஸ்தையில் கடந்

தது. காந்தி சிரிக்கும் பெரிய நோட்டுக்கள் காற்றாய்ப் பறந்தோடின.

பத்து நாட்களுக்குப் பிறகு கண்ணன் வார்டுக்கு மாற்றப்பட்டான். பெரிய டாக்டர் அவளை அழைத்தார்.

"இதோ பாரும்மா, உன் கணவருக்கு எந்த கவலையும் இருக்கக்கூடாது. அதனால் அவரை தொல்லை பண்ணாமல் எதிரில் உட்கார்ந்து கையைப் பிடித்துக் கொண்டிரு. போதும்."

பிடிப்பிடியாக மாத்திரைகள் கொடுக்கப்பட்டன. இரண்டு கை நரம்பு வழியாக ஏறும் மருந்துகள். அசைய முடியாத நிலை. சாப்பாடோ இன்னும் கொடுமை.

உப்பு இல்லாமல் கூழாக்கப்பட்ட தயிர் சோறு ஒரு பிடி. ஒரு வாய் காய்கறி கூப். ஒரு முட்டை. தக்காளி சாலட். தேக்கரண்டியினால் ஊட்ட முடியாது. கையில் எடுத்து ஊட்ட வேண்டிய நிலை.

காலண்டரில் கிழிபடும் ஒவ்வொரு தாளும் கொஞ்சம் முன்னேற்றத்தையும், நிறைய பின்னடைவையும் செய்து கொண்டிருந்தது. எப்படி, எப்போது குணமாகும் என்று தெரியாது. கண்டிப்பாக குணமாகும் என்று அறுதியிட்டுக் கூறவும் முடியாது. சேமிப்பும் நகைகளும் மருந்துகளாய் கண்ணன் உடலுக்குள் நுழைந்தன.

நண்பர்கள் வீட்டு வாசலில் கையேந்தும் நிலை வந்தபோதும், பாரதி தயங்கவில்லை. கண்ணில் நீரோடு அவள் கை நீட்டியபோது, கொடுத்தவர்களும் அழுதார்கள். அவளுக்கும் ஆறுதல் சொன்னார்கள்.

கண்ணன் அசந்து தூங்கின ஓர் இரவில் வராந்தா பக்கம் வந்து நின்றாள் பாரதி. அவள் கேளாமலே ஓய்வு அறையில் இரவுப் பணி மருத்துவரும், நர்சும் பேசுவது காதில் விழுந்தது.

"எட்டாம் நம்பர் கண்ணனுக்கு குணமாயிடுமா டாக்டர்?"

"வாய்ப்பே இல்லை சிஸ்டர். உள்ளுக்குள்ளே வியாதி முத்திப் போச்சு. எல்லா ஆர்கன்சையும் தின்னுட்டுது. கொஞ்சம் முந்தி மாத்திரை தரும்போது பார்த்தேன். காலில் தானாக ரத்தம் வடியுது.. என்ன கலர்ல தெரியுமா? கறுப்பு கலர்ல.. பெட்சோர் வேற பார்த்தேன்.. பாவம்..

"வேற ஆளுன்னா எப்பவோ போய்ச் சேர்ந்திருப்பான். இவன் எப்படியோ உசிரை இழுத்துப் பிடிச்சுக்கிட்டு கிடக்கறான்...

"அந்தப் பாரதிக்கு தெரிஞ்சா தாங்கவே மாட்டாளே.. இப்பகூட கேட்டா நல்லாயிடுவார்னு தான் சிரிச்சுக்கிட்டே சொல்லிக் கிட்டிருக்கா..

போவேன். பொருளுக்குத் தகுந்த விலைதானே கொடுக்க முடியும். அவங்க அதிகமாகச் சொன்னால் வரிஞ்சுகட்டிக்கிட்டு சண்டைக்கு நின்றுதான் பேரம் பேசி வாங்குவேன் - என்கிறார் நடிகை ரதி.



"எப்படியோ.. சீக்கிரமே செத்துப் போயிடுவான். குழந்தைகூட இல்லை போலிருக்கு?"

அதற்கு மேல் கேட்க முடியாமல் பாரதி அறைக்குள் ஓடினாள். மனதில் வெடித்துக் கிளம்பிய அழுகையைத் தனக்குள் விழுங்கினாள். ஆழ்ந்த உறக்கத்திலிருந்த கண்ணனைப் பார்த்தாள். இமையோடு இமை ஒட்டாது விழித்துக் கிடந்தான் அவன்.

"என்ன பேசறோம்னு தெரிஞ்சுதான் பேசறியாம்மா நீ.. இந்த நிலையில் பயணம் கண்ணனுக்கு ஒத்துக்காது. என்னதான் நீ டாக்ஸி வைச்சு கூப்பிட்டுக்கிட்டுப் போனாலும் ரிஸ்க்தான். நான் அனுப்ப முடியாது.." பெரிய டாக்டர் சிடுசிடுத்தார்.

"சாரி சார்.. நீங்க டிஸ்சார்ஜ் செய்துதான் ஆகணும்.." பாரதியின் குரலில் தெளிவும், உறுதியும் இருந்தது.

"அப்புறம் உன் இஷ்டம். எப்படியோ போய்த்தொலை. இந்த மாத்திரைகளையாவது ஒழுங்கா வாங்கிக் கொடு. டயட் கவனமா பார்த்துக்க." முழநீள சீட்டைத் திணித்து அனுப்பினார் டாக்டர்.

வீட்டுக்கு வந்ததும் கண்ணனுக்கு சின்னப் பிள்ளை போல குதூகலம்!

"கலர் கலரா மாத்திரை முழுங்கி, முழுங்கி தொண்டையெல்லாம் புண்ணாகிட்டுது பாரதி. கொழகொழன்னு வாயில வைக்க முடியாத தயிர் சோறு.. நெனைச்சாலே குமட்டுது.. அந்த டாக்டர் பேச்சைக் கேட்டுக் கிட்டு நீயும் அப்படித்தான் தருவியா?"

"உங்களுக்குத் தெரியாதா? அந்த டாக்டர் ஒரு அசடு. அதுக்கு ஒண்ணும் தெரியாது. இனிமே மாத்திரையும் வேணாம், கொழ கொழ தயிர் சாதமும் வேணாம்."

"பாரதின்னா பாரதிதான்" கண்ணன் சிரித்தான்.

பாரதி மளமளவென வேலையில் இறங்கினாள். சுடச்சுட வெந்நீர் வைத்துக் குளிப்பாட்டி பவுடர் போட்டு விட்டாள். வாய்க்கு ருசியாக மிதமான காரமும், நெய்யும் கலந்து காய்கறிகள் நிறையப்



போட்டு சோறுடன் குழைய வேகவைத்து ஊட்டி விட்டாள்.

அவனுக்குப் பிடித்த நீல நிறத்தில் சேலை கட்டி தலை நிறைய பூ வைத்துக் கொண்டு அவனோடு நிறையப் பேசினாள்.

"இப்பதான் பாரதி

உன்னைப் பார்க்க எனக்குப் பிடிக்குது. நீ அந்த ஹாஸ்பிட்டலில் அழுதுக்கிட்டு கிடந்த பாரு. அது எனக்குப் பிடிக்கவே இல்லை. அந்த டாக்டர் ஒண்ணும் இல்லாததை பெரிசு பண்ணிட்டார். நீயும் பயந்திட்ட...

**நாங்க மட்டும் லேசா?**

நான் குடும்பத்தோடு பெங்களூர் சென்றபோது அங்கே ஷாப்பிங் சென்றேன். கார்மெண்ட்ஸ் கடையில் நான் வாங்கின துணியின் விலை அதிகமாக இருப்பதாக எனக்குத் தோணுச்சு. நான் உடனே அந்த விலையில் பாதி விலையாகக் குறைச்சு பேரம் பேசினேன். அதே விலைக்குத் தந்திட்டாங்க. இன்னும் விலையை கம்மி பண்ணிக்கேட்டு இருக்கலாமே என்று மனசுக்குத் தோணுச்சு – என்கிறார் நடிகை ஸ்ரீதேவி விஜயகுமார்.

அந்த ஆளு சரியான குடாக்கு.."

அவள் மடியில் தலை வைத்துத் தூங்கினான். வாய் கொள்ளாமல் பேசினான். சிரித்தான். வாய்க்கு ருசியாக நன்றாகச் சாப்பிட்டான்.

முழுதாகப் பத்து நாள் இன்பமாகக் கழிந்தது. பதினோராம் நாள் விடியலோடு அவள் மடியிலேயே அவன் அமரனானான்.

ஊர் கூடியது. உறவுகள் வந்தன.

"பாவி சண்டாளி.. உடம்புக்கு முடியாத பிள்ளையை வீட்டுக்கு இழுத்துக்கிட்டு வந்திருக்கா. இன்னும் ஒரு பத்து நாளைக்கு ஹாஸ்பிட்டலில் இருந்திருந்தா பிள்ளை பொழைச்சிருக்குமாம்.."

"காசுக்கு பார்த்திருப்பா.. அழுவறாளா பாரு... அப்படியே நிம்மதியா உட்கார்ந்திருக்கா. என் வயசுக்கு இப்படி ஒரு பொம்பளையை நான் பாத்ததில்லையடியம்மா."

"இவளையெல்லாம் நிக்கவைச்சு சுடணும். புள்ளைய வீட்டுக்குக் கொண்டு வந்து கொன்னிருக்கா. படுபாதகி."

இந்த வார்த்தைகள் எதுவும் தன்னைத் தீண்டாதது போல பாரதி உட்கார்ந்திருந்தாள்.

மனதில் நிம்மதி நிலவியது. பெரிய பாரம் இறங்கியது போல இருந்தது.

சாவுக்காகக் காத்திருக்கிற நாட்களில், கண்ணுக்கு நிறைவாக மனைவியைப் பார்த்து, வாய்க்கு ருசியாகச் சாப்பிட்டு, கவலைகளற்று சாவுக்குத் தயாராவது எத்தனை நிம்மதி. அந்த சாவும் தூங்கும்போதே வந்துவிட்டால்? இன்னும் எவ்வளவு மகிழ்ச்சி!

இதையெல்லாம் இந்தப் புரியாதவர்களுக்குப் புரியவைப்பது பாரதியின் நோக்கமல்ல. தன்னுடைய அன்புக் கணவனின் இறுதி நாட்களை நிம்மதியாக்கிய சுகம் ஒன்றே அவளுக்குப் போதும். அவனது சந்தோஷக் கணங்களாக இருந்த ஒரு வார நினைவோடு அவள் இனி வாழத் தயாராகிவிட்டாள். இந்த மவுன வாழ்வில் அவளால் யாரையும் சேர்த்துக் கொள்ள முடியாது. பாரதிக்கு மட்டுமே இது புரியும்!

**பின்குறிப்பு:**

இந்தக் கதையில் வரும் பாரதி போல எல்லாம் நடத்திய எழுத்தாளராகிய என்னால் இறுதியில் பாரதி செய்தபடி கணவரை வீட்டுக்கு அழைத்து வர மட்டும் முடியவில்லை.

– மேகலா சித்ரவேல்.

ன்று முன்னேறி வரக்கூடிய உலகத்திலே பெண்களுடைய உள்ளம் துடித்துக்கொண்டு இருக்கிறது- தங்களுடைய பங்கை ஆற்றுவதற்காக!

ஒவ்வொரு இடத்திலேயும் அவர்களுக்கு இருக்கக் கூடிய தடைகள், அந்தத் தடைகளினால் ஏற்படக்கூடிய விளைவுகள் உண்மையில் சமுதாயத்தையே பாதிக்கின்றன.

விஞ்ஞானம் இப்பொழுது மருத்துவத் துறையிலே மிகவும் முன்னேறி இருக்கிறது என்று சொன்னால் அதை மறுக்க முடியாது. அதற்குக் காரணம் மருத்துவத் துறையில் பெண்கள் எடுத்துக் கொண்டுள்ள பொறுப்பும் தொண்டும்தான்.

பெண்களுக்கு, குழந்தைகளுக்கு நோயுண்டானால், அதைத் தீர்க்க வல்லவர்களாக இப்பொழுது மருத்துவத்துறையிலே வல்லுனர்களாக பெண்களே திகழ்கின்றார்கள்.

மருத்துவம் என்பது நோய் வந்த பிறகு தீர்ப்பது மாத்திரம் அல்ல. நோயே வராமல் காப்பதும்தான்!

இயற்கையாக நம்முடைய உடலிலே உடல் நலத்திற்கு ஏற்ற எல்லாம் அமைந்து இருக்கிறது. அவ்வப்போது ஏற்படுகின்ற குறையைக்கூட சரிக்கட்டிக் கொள்ளக்கூடிய அளவுக்கு உள்ளது இயற்கையினுடைய ஆற்றல் அமைப்பு!

நம்முடைய உடலிலே, ஒவ்வொரு செல்லும் ஒரு இரசாயனச் சாலையாக வேலை செய்து கொண்டு இருக்கிறது.

நாம் அதைத் தெரிந்து கொண்டு ஒத்துழைத்தால் போதும். அதைக் கெடுக்காமல் இருந்தால் போதும். நோய் ஓடும்! எனவே அதை நாம் அவசியம் தெரிந்து கொள்ள வேண்டும்.

கருவமைப்பு குறித்தும் நாம் சிலவற்றை நினைவில் கொள்ள வேண்டும்!

பெற்றோர்கள் எந்த முறையிலே மனம், உடல் அமைப்பிலே இருக்கின்றார்களோ அதை ஒட்டித்தான் ஒரு குழந்தை உருவாக முடியும்.

மரத்தை ஒட்டித்தான் விதை இருக்கும். அந்த விதையை ஒட்டித்தானே மரம் இருக்கும்?

இது தொடர் நிகழ்ச்சி!

குழந்தைகள் ஆரோக்கியமாக இருக்க வேண்டும்

என்று சொன்னால், பெற்றோர்கள்
மன நலத்திலே... உடல் நலத்திலே... நலம் உள்ளவர்
களாக அமைய வேண்டும்! இருக்கவேண்டும்!
பெற்றோர்களிடத்திலே ஒருவருக்கு ஒருவர்
பிணக்கு, மனத்தாங்கல் இருக்குமேயானால்... நமது
உடலிலே முக்கியமான சக்தியாகிய சீவகாந்த ஆற்றல்
பிணக்குற்று... அது விஷத்தன்மையாக மாறக்கூடிய
தாகவே அமையும். அது- குழந்தைகளையும் பாதிக்கும்!
அதேபோல, இந்தக் காலத்தில் எத்தனையோ வகை
யிலே படிப்பு, கல்வி வளர்ந்து கொண்டு இருக்கிறது.
கல்விக்குச் செலவழிக்கக் கூடிய பணத்தின் அளவு
கூட எல்லா நாடுகளிலும் அதிகம்தான்.
ஆனாலும் உடல் நலம், மனவளம், நட்பு நலம் காத்து
அமைதியாக வாழத்தக்க வாழ்க்கைக் கல்வி மட்டும்
நம்மிடையே போதிக்கப்படவில்லை.
உயிர் என்றால் என்ன? மனம் என்றால் என்ன? உடல் என்றால்
என்ன?



# இதனால்கூட தலைவலி வருகிறதா?

வாழ்க்கைக்கு உதவும் உன்னதத் தொடர்

18

வேதாத்திரி மகரிஷி

# வாழ்க வளமுடன்!

சமுதாயத்தில் அதிகமாக உள்ளனர். நம்மிலே பலரும் கூட அப்படித்தான் வாழ்ந்து கொண்டு இருக்கிறோம்!

வாழ்க்கையிலே இன்னும் முக்கியமான பொருள்: 'சீவகாந்த ஆற்றல் எப்படி அமைந்து இருக்கிறது? அது எப்படி இயங்குகின்றது? நாம் அதைப் போற்றிக் காக்க என்ன செய்ய வேண்டும்?'-என்று தெரியவில்லையானால், நாம் செய்யக்கூடிய ஒவ்வொரு செயலிலும்... அளவு மீறியும், முறை




மாறியும் செய்வோம்.

என்ன செய்தாலும், செயல், நோக்கம், திறமைக்கு ஏற்ப விளைவு உண்டு. அந்த விளைவை எல்லோரும்தான் அனுபவிக்க வேண்டும்.

மருத்துவத்தில் விஞ்ஞான வளர்ச்சி இல்லாத அந்தக் காலத்திலேயே கருவளர்ச்சிப் பற்றி ஆராய்ந்து அதன் வளர்ச்சி இயல்பைக் கண்டு பிடித்திருக்கிறார்கள்.

இப்போது எல்லாமே தெளிவாக விளங்கக் கூடிய காலம், விஞ்ஞான மருத்துவர்களுக்கு!

எனினும் சீவகாந்த ஆற்றலும் மனமும் எவ்வாறு உடலை வழிநடத்துகின்றன என்று மேலும் அவர்கள் தெரிந்து கொள்ள வேண்டும்.

குழந்தைப்பேறு உண்டாவதற்கு முன்னதாகவே கணவன் மனைவி உறவு எப்படி இருக்க வேண்டும் என்பதை பண்பாட்டில் நாம் வளர்க்க வேண்டும்.

ஒருவருக்கொருவர் பிணக்கு எழாது உள்ள குடும்பத்தில்தான் குழந்தைகள் நன்றாக இருக்கும்!

எங்கு பிணக்கு இருக்குமோ... அங்கு, அடிப்படை சுதந்திரத்தையே அடக்கு முறையால் தடுக்கும் போக்கும், போராட்டமும் இருக்கும்! அது குழந்தைகளைப் பாதிக்கும்; மனம், உடல் நலம் கெட்டதாகத்தான் அமையும்.

இதை கணவனும் மனைவியும் புரிந்து கொண்டு ஒத்துழைக்க வேண்டும்.

விட்டுக் கொடுப்பதற்குப் பதிலாக ஒவ்வொருவரும் ஒருவிதமான பிடியை பிடித்துக் கொண்டு, என் கருத்துத்தான் உயர்ந்தது என்று வைத்துக்கொண்டால் பிணக்குதான் வரும்.

இதையெல்லாம் சரி செய்வதற்கு அகத்தவம் என்ற முறையிலே ஒரு தியான முறையை நல்ல முறையில் செய்து வந்தால்– அதாவது மயக்க நிலையிலிருந்து விழிப்பு நிலைக்கு வந்து நம்மை சரி செய்து கொள்ளலாம்.

மேலும்-

கர்ப்ப காலத்தில், இரண்டு மாதத்தில்

இருந்து கடைசி வரைக்கும் அஸ்வின் முத்திரை (Spinter Exercise) செய்து கொண்டே வந்தால் குழந்தை நல்ல முறையில் வளர்கின்றது. பிரசவம் எளிய முறையில் ஆகின்றது.



பிரசவம் ஆன உடனே தாயும் சேயும் உடல் நலத்தோடு இருப்பதற்கு முடிகிறது.

நான் பேசும்போது தலைவலியைப் பற்றிச் சொன்னேன். இந்தத் தலைவலி ஒரு ஆணுக்கோ பெண்ணுக்கோ அடிக்கடி வருகிறது என்று சொன்னால், அதுவும் திருமணம் ஆனபிறகு வருகிறது என்றால்-

கணவன் மனைவிக்கு இடையில் அவமதிப்பு மூலம் பிணக்கு (Conflict through insulting incidents) எவ்வளவுக்கெவ்வளவு ஒரு நாளைக்கு வருகின்றதோ அதுவெல்லாம் கட்டாயமாக நரம்பு சம்பந்தப்பட்ட நோயில்தான் கொண்டு வந்து விடும்.

பக்கவாத நோயில் கூட கொண்டு வந்து விடும்!

கணவன்; மனைவி உறவிலே இரண்டு பேருக்கும் ஒற்றுமை இல்லாது... ஒருவித வெறுப்பு, ஒருவரை ஒருவர் சபித்துக் கொள்ளும் நிலை இருப்பின், அது நேரடியாக வியாதியை உண்டாக்கலாம்.

இன்னும் அழுத்தமாக வேதனை இருக்குமேயானால் பிரதிபலிப்பு விபத்துகள் உண்டாகலாம்.

ஆகையினால், தம்பதிகள் இதைப் புரிந்துகொண்டு, நலமே எண்ணி நலமே செய்யவேண்டும் என்கிற சிந்தனையை வளர்த்துக் கொள்ள வேண்டும்.

நாம் எப்படி இருக்க வேண்டும் என்றால்.. எப்பொழுதும் பிறருக்கு உதவியே செய்ய வேண்டும்!

பிறரிடமிருந்து வாங்குவது என்பதே வேண்டாம். அவர்கள் செய்தாலும் சரி, செய்யாவிட்டாலும் சரி, அவர்களுக்கு நாம் உதவி செய்ய வேண்டும்.

இன்னும் சமையல் ஆகவில்லை, மணியாகி விட்டது. இதற்கு மேல் போனால் பஸ் கிடைக்காது. "அம்மா நான் இன்று காண்டீனில் சாப்பிட்டுக் கொள்கிறேன்; நீங்கள் சிரமப்படவேண்டாம்" என்று மகிழ்ச்சியாகச் சொல்லிவிட்டுப் புறப்படவேண்டும்.

இந்த தன்மையால் விளையும் பலன்கள் ஏராளம்!

*(அடுத்த வாரம்)*

வாழ்க வளமுடன்... வாழ்க வையகம்..
RAMRAJ
ராம்ராஜ்
காட்டன்
• வேஷ்டிகள் • பனியன்கள்
• சார்ட்டுகள் • டிராயர்கள்
அனைத்து முன்னணி ஜவுளி நிறுவனங்களிலும் கிடைக்கும்.

17-10-03

வாழ்வாங்கு வாழ வேண்டுமானால், ஒவ்வொரு மனிதனுக்கும் ஐந்து துறைகளிலே அறிவு வேண்டும்.

அவை

1. அறிவியல் 2. சுகாதாரம் 3. பொருளாதாரம் 4. அரசியல் 5. விஞ்ஞானம்! வாழ்க்கைக்கு இந்த ஐந்தும் தேவை.

ஒவ்வொரு மனிதனும் இந்த ஐந்து பிரிவுகளிலும் நிறைவு பெற வேண்டும்.

சிறு குழந்தை முதற்கொண்டு 15, 20 ஆண்டுகள் வரையிலே இந்த ஐந்து துறைகளிலும் முயன்று அறிவு பெற வேண்டும்.

அதன் பின்பு வாழ்க்கையிலே புகுந்தால் தன்னிறைவாக இருக்கும். எல்லாவற்றையும் அவரவரே உணர்ந்து திருத்தி அவர்கள் செயல்பாடுகளைச் செய்வதற்கு நல்ல வாய்ப்பிருக்கும்.

குடியரசு என்று சொல்லக் கூடிய சுதந்திர நாடுகளிலே ஓட்டுரிமை என்று ஒன்று கொடுக்கப்பட்டிருக்கின்றது.

ஓட்டுரிமை என்றால் என்ன?

எனக்கு இத்தகைய ஆட்சி தான் வேண்டும் என்று விரும்பி, அந்த ஆட்சியை வகுத்துக் கொடுப்பதற்கு உரிமையுடையவர்கள்தான் ஓட்டுரிமை பெற்றவர்கள்.

இவ்வாறு ஓட்டுரிமை பெற்றவர்கள் எல்லோரும் ஆட்சியைப் பற்றி, அரசியலைப் பற்றி, பொருளாதாரத்தைப் பற்றி, இன்னும் சமூக இயலைப் பற்றி, சுகாதாரத்தைப் பற்றியெல்லாம் தெரிந்துகொள்ளவில்லையென்றால் அவர்கள் எவ்வாறு நல்லதோர் பண்பாடு உடைய அரசியல் தலைவரைத் தேர்ந்து எடுக்க முடியும்?!

குருடனும் குருடனும் குருட்டாட்டம் ஆடி குழியில் விழுகிறவாறுதான்... இந்தக் குறைபாடுதான் இந்த நாட்டிலே இருக்கின்றது.

இந்த நாட்டிலே வேறு ஏதேனும் வளம் குறைவா, அல்லது அறிவு குறைவா, நிபுணத்துவம் குறைவா?

எல்லாம் நிறைவாகவே உள்ளன!

நமது தேவைகளை நாமே நிறைவு செய்து கொள்ள முடியும்.

இங்கே, படித்தவர்கள் இருக்கின்றார்கள், இளைஞர்கள் இயக்கங்கள் வளர்ந்துகொண்டு வருகின்றன. இன்று பதவிகளில் எல்லாம் நம்மவர்களே இருக்கின்றார்கள்; அவர்கள் ஒரே ஒரு உறுதிமொழி, சிந்தித்து முடிவு காணும் உறுதிமொழி எடுத்துக்கொண்டால் போதும்.

என்னவென்றால், "நான் இங்கே இருக்கின்றேன், இவ்வாறு இருக்கின்றேன், என்னுடைய வலிமை இவ்வளவு, என்னுடைய அதிகார வரம்பு இவ்வளவு இருக்கின்றது, எனக்குக் கல்வி இவ்வளவு இருக்கின்றது, இதை வைத்துக்கொண்டு எந்த முறையிலே, யாருக்கு, என்ன

நன்மை செய்ய முடியும்?'', என்பதைச் சிந்தித்து...

இவ்வாறு சிந்தித்த முடிவிலே தனக்குள்ள ஆற்றலை உணர்ந்துகொண்டு சமுதாயத்திற்கு எனது கடமையாற்ற, "நான் தயாராக இருக்கின்றேன். என்னால் முடிந்த வரையிலே என்னுடைய தொண்டினைச் சமுதாயத்திற்குச் செய்யக் கடமைப்பட்டு இருக்கிறேன். பிறர் பொருளை அல்லது சுதந்திரத்தைப் பறிக்காமல் இதைச் செய்வேன்'' என்ற அளவிலே எல்லோரும் முனைய வேண்டும்.

நம் நாட்டிலே பெரும்பாலான இடங்களில் முட்டுக் கட்டைதான் முன் நிற்கிறது! உதவி? ம்ஹூம், இல்லை.

நமது பண்பாட்டிலே உள்ள இந்த பொதுநல நோக்கக் குறைபாடு அகல வேண்டும்!

என்னுடைய ஆற்றல் இவ்வளவு இருக்கின்றது, இந்தப் பொறுப்பை வைத்துக்கொண்டு யாருக்கு என்ன

# நம் நாட்டுக்கு உடனடித் தேவை என்ன?

செய்ய முடியுமென்று உள்ளத்தை நேர்மையில் நிறுத்திக் கொண்டு செயல் புரிந்து வாழத் தயாராக இருப்பார்களேயானால் போதுமே!



இதற்கு மேல் என்ன வேண்டும்? இதைவிட மிகுந்த செல்வமும் புரட்சியுமா இந்த உலகத்திற்கு வேண்டும்?

இந்நாட்டிற்குப் புரட்சி தேவையில்லை; இன்று திரட்சிதான் வேண்டும்.

அதாவது, எல்லா மக்களும் அறிவினாலே, கருத்தினாலே உணர்ந்து நட்புடன் வாழத் திரட்சி பெற வேண்டும்.

ஆகையால் இம்மாதிரியான நல்ல கருத்துக்களைச் சித்தத்திலே திடமாக இருத்திக்கொள்ள வேண்டும்.

'திடசித்தம்' என்றால் இன்னதுதான் செய்து முடிப்பேன் என்று ஒரு சங்கல்பம்; இந்த சங்கல்பத்தை எடுத்துக் கொள்ள வேண்டும்!

படித்து வரக்கூடிய பிள்ளைகளுக்கு மாணவப் பருவத்தில் இருந்தே இந்தப் பண்பாடு அறிவாட்சிதரமாக அமைய வேண்டும்.

ஒரு திருமணத்தை எடுத்துக் கொள்வோம். இந்தத் துறையிலே எவ்வளவோ வீண் செலவு செய்து கொண்டு இந்நாடு இருக்கின்றது.

புள்ளி விவரம் எடுத்தீர்களேயானால் 50 சதவீதக் குடும்பங்கள் தங்களுக்கு இருக்கக் கூடிய சொத்தை இழந்துவிட்டோ அல்லது கடனில் அகப்பட்டுக்கொண்டோ இருப்பது, திருமணத்திற்குச் செய்த செலவினால்தான். ஏன், நம்முடைய சங்கங்கள் முயற்சியினாலே இதை முடிவுக்குக் கொண்டு வரலாமல்லவா? கொண்டு வர முடியும்.

எப்படி?

(அடுத்த வாரம்)

வாழ்க வளமுடன்... வாழ்க வையகம்...
RAMRAJ
ராம்ராஜ்
காட்டன்
• வேஷ்டிகள் • பனியன்கள்
• சர்ட்டுகள் • டிராயர்கள்
அனைத்து முன்னணி ஜவுளி நிறுவனங்களிலும் கிடைக்கும்.

குடித்தபடியே ஆரம்பிப்பதுண்டு. தன்னை அப்பா இப்படி ஒரு பெரியவனைக் கூப்பிடுவதைப் போல் கேட்டது அவனுக்கு மிகுந்த பெருமையாகவும், சந்தோஷமாகவும் இருந்தது. அன்பு வழிய வழிய அப்பாவைப் பார்த்தான்.

'டீ'க்கள் வந்தன. அவன் குடிக்க

குறிப்பா அவ மேல வர்ற உன்னோட வெறுப்பு சமயங்கள்லே எனக்கு பயமா இருக்கு யோனா. அவ ரொம்ப சின்னவடா. நான்கூட சின்னச் சின்ன சண்டைகள் சுவாரசியம்னு கண்டுக்காம விட்டாலுமே... இப்பல்லாம் வேறு விதமா நெருடலாயிடுச்சு. என்னுடைய இந்த



ஆரம்பித்தும்கூட அப்பா டீ கப்பில் இருந்த ஸ்பூனில் 'டீ'யைக் கலக்கிக் கொண்டே இருந்தார் எதையோ தேடுவதைப் போல.

"யோனா, எனக்குத் தெரிந்த வரை நானும், என் தங்கச்சியும் சண்டையே போட்டதில்லை. நல்ல ஃப்ரண்ட்ஸ் நாங்க. அதனாலதான் எனக்கு உங்க ரெண்டு பேர் சண்டை,

நினைப்புகள் தப்பா இருக்கலாம். தப்பா போயிடணும்னு ஆசைப்படறேன். ஆனா அப்படி இல்லேன்னா? ஏன்னா... நீயும் பெரிய பையனாய்ட்டே வர்றே இல்லையா?''

கேட்டார்.

யோனா நிமிர்ந்து பார்த்தான்.

*(அடுத்த இதழில் முடியும்.)*

# வாழ்க வளமுடன்!

## 20 வாழ்க்கைக்கு உதவும் உன்னதத் தொடர்


தேபோன்று... கல்வியிலே, இன்று நமக்கு வேண்டிய கல்வியா இருக்கின்றது?

கல்விக்காக எத்தனையோ கோடி கோடியாகச் செலவு செய்கின்றோம். ஆனால் நமக்கு என்ன கல்வி வேண்டுமோ அந்தக் கல்வி இங்கே கிடையாது.

ஆலயங்களிலே தெய்வ வழிபாட்டுக்காக எவ்வளவோ நாம் செலவு செய்கின்றோம். எந்த அளவிலே ஆலயங்கள் மனிதனுக்கு வேண்டிய நன்மைகளை விளக்கிக் கொண்டிருக்கின்றன என்று பார்க்கும்போது, நாம் எதிர்பார்க்கின்ற அளவுக்கு இல்லை.

மனிதனாகப் பிறந்து விட்டோம், இந்த சமுதாயத்திலே நான் வாழ்வதற்கு, என்னுடைய கடமையைச் செய்வதற்கு, என்னுடைய அறிவைப் பெருக்கிக் கொள்வதற்கு, எனக்கு என்ன வேண்டுமென்று ஒவ்வொருவரும் சிந்திக்க வேண்டும்.

**வேதாத்திரி மகரிஷி**

சிந்திக்கின்றபோதுதான் வேண்டியது என்னவென்று விளங்கும்!

சிந்திக்காதபோது, வேண்டாததுதான் வேண்டியது போலவே தோன்றும்.

ஆகவே சிந்தனையின் மூலமாக வேண்டியதை முதலில் தெரிந்து கொள்ள வேண்டும்.

இவ்வாறு தெரிந்து கொள்ளும்போது, மனிதனுக்கு ஐந்து வகையிலே கடமைகளுண்டு.

அவை என்ன?

1 தான் 2. குடும்பம் 3. சுற்றம் 4. ஊரார் 5. உலகம் ஆகிய பிரிவுகளாகும்.

இந்த ஐவகையையும் அவரவர்கள் ஆற்றலுக்கும், வயதிற்கும், அறிவிற்கும் தக்கவாறு உயர்த்திக் கொண்டே போகலாம்.

ஆனால் முதல் முக்கியத்துவம் தனது உடலையும் மனதையும் வளமாகவும், நலமாகவும் வைத்துக் கொள்ள வேண்டும்.

இரண்டாவதாகக் குடும்பம், பிறகு சுற்றம், ஊரார், உலகம் என்று இவ்வாறு விரிய வேண்டும்.

இந்த ஐந்திலே ஒன்றினால்



31-10-03

மற்றொன்று பாதிக்கப்படாமல் பார்த்துக் கொள்ள வேண்டும்.

நான் சமுதாயத்திற்காக உழைக்கின்றேன் என்று கூறித் தன் குடும்பத்தைப் பராமரிக்காது விட்டாலோ, உடல் நலத்தைச் சிதைத்துக் கொண்டாலோ, சமுதாய நலனுக்கு ஒருவர் தொண்டு செய்ய முடியுமா?

குடும்ப நலனும் உடல் நலனும் வீணாகிப் போய் விடும்!

ஒரு மனிதன் நல்ல முறையிலே வாழ்ந்தானேயானால்- அதாவது தன் உடலையும் மனத்தையும் சரிவரப் பேணி வந்தானேயானால்... சமுதாயத்திற்கு இலாபமாக, நன்மையாக அமையும்.

அவ்வாறின்றி அவன் உடல் நலம் குன்றி நோயுற்றால் சமுதாயந் தானே அதற்கு ஈடு செய்ய வேண்டும்?

அப்பொழுது சமுதாயத்திற்கு இருவிதத்திலும் நஷ்டம் வந்தடையும்! முதலாவ

ஐவகை கடமைகள்

தாக அவனால் கிடைக்கக் கூடிய இலாபம் போய் விட்டது! இரண்டாவதாக அவனை நோயிலிருந்து மீட்கச் செலவும் இழப்பும் உண்டாகின்றன!!

ஆகவே, தனி மனிதன் தன்னைப் பாதுகாத்துக் கொள்வது என்பது



சுயநலமல்ல.

தன்னைச் சரியாக வைத்துக் கொள்வது, ஆற்றல் உள்ளவனாக மாற்றிக் கொள்வது, கல்வியிலே தேர்ந்தவனாக மாற்றிக் கொள்வது ஆகிய இவையெல்லாம் சுயநலமாகாது.

நான் வாழக்கூடிய இந்தச் சமுதாயத்திற்கு நல்ல பிரஜையாக, நல்ல தொண்டனாக வரவேண்டுமென்ற ஒரு அடிப்படையிலேதான் ஒரு மனிதனுடைய நலம், அவனை அறியாமலேயே அவன் செய்யக் கூடிய நல்ல காரியங்களெல்லாம் கூட சமுதாயத்திற்கு நன்மையாகவே முடியும்.

பிறர்க்குத் தொண்டாற்ற வேண்டும், பிறர் படும் துன்பத்தை நீக்கத் துணைபுரிய வேண்டும் என்ற வகையிலே தனி மனிதனுடைய தயாரிப்பு நிலை சமுதாய வளத்தைப் பெருக்கச் செய்யும்.

வெளிநாட்டுப் பயணத்தின்போது இரண்டொரு அலுவலகங்களிலே "விசா" கொடுக்கக்கூடிய பகுதிக்குப் போக வேண்டியிருந்தது.

அங்கு சென்ற உடனே, அங்கிருந்த அதிகாரி ஒருவர் எழுந்து நின்று என்னுடன் கைகுலுக்கி, "உங்களுக்கு நான் என்ன செய்ய வேண்டும்?" என்று கேட்டார்.

"என்னுடைய "விசா"வை ஒரு பத்து நாட்களுக்கு நீட்டித்துக் கொடுக்க வேண்டும்" என்று கேட்டுக் கொண்டேன்!

உடனே... 'தயவுசெய்து நீங்கள் அமர்ந்திருங்கள்' என்று கூறிவிட்டு, ஒரு 10 நிமிடத்திற்குள்ளாக அந்தக் காரியத்தை முடித்துக் கொடுத்து விட்டார்.

இந்நிகழ்ச்சியானது, இந்தியாவிலிருந்து சென்றவர்களுக்குக் கனவு போன்று இருக்கின்றது.

நம் நாட்டில் ஒரு அரசாங்க அலுவலகத்திற்குச் சென்றால் வரி கொடுக்கும் குடிமகன் எவ்வாறு நடத்தப்படுகின்றான்?

பகுதிக்குப் பகுதி அவனை அலைக்கழித்து இறுதியாக 'இன்னொரு நாள் வா' என்கிற பதில்தானே கிடைக்கிறது?

இத்தகைய கீழ்த்தரமான பண்பாடு இந்நாட்டில் எப்படியோ வந்து, வளர்ந்துவிட்டது.

இந்தப் பண்பாட்டை மாற்றி அமைப்பதற்கு இம்மாதிரியான சங்கங்கள் எல்லாம் முயற்சி எடுத்தால் நிச்சயமாகப் பலன் கிட்டும்.

தண்டனையினால் உலகத்தைச் சீர்திருத்த முடியுமென்று நினைத்தால் அது நிச்சயமாக நிறைவேறாது.

சட்டத்தினால் உலகைச் சீர்திருத்த முடியுமென்று நினைத்தால் முடியவே முடியாது.

அறிவிலே மனிதன் உணர வேண்டும்! உயர வேண்டும்! இன்னது நன்மை, இன்னது தீமை, தீமை தராத செயல்களை மட்டுமே நான் செய்ய வேண்டும் என்று மனிதன் உணர வேண்டும்.

அவனாகக் கற்கும் கல்வியிலே, அவன் உள்ளத்திலே இருந்து எழக்கூடிய நல்லுணர்விலேயிருந்து செயல்பட்டானேயானால் அது தான் நன்மையாக இருக்கும்.

பயத்தினாலோ அல்லது வேறு ஒரு ஆசைகாட்டி மயக்கும் போதனையினாலோ மாத்திரம் இத்தகு மாற்றத்தை ஏற்படுத்த முடியாது.

எனவே, அந்த முறையிலே இந்த நாட்டில் கல்வி வளர வேண்டும், சமுதாய நலன்களெல்லாம் வளர வேண்டும்.

போராட்டமே தேவையில்லை; ஒவ்வொருவரும் அவரவர்களுடைய கடமையைச் செய்தால், எல்லோருக்கும் உரிமை வந்து விடுகின்றது.

உரிமை என்பது என்னவென்றால் அவரவர்கள் செய்யவேண்டிய கடமையைச் செய்தால், எல்லோருடைய உரிமையும் இக்கடமையினால் காக்கப்படுகின்றது.

இதில் மற்றொரு கேள்வியும் உண்டு!

என்ன அது?

(அடுத்த வாரம்)

RAMRAJ
ராம்ராஜ்
காட்டன்
• வேஷ்டிகள் • பனியன்கள்
• சர்ட்டுகள் • டிராயர்கள்
அனைத்து முன்னணி ஜவுளி நிறுவனங்களிலும் கிடைக்கும்.

# கிரேஸி ரசித்தது

தன் காரில் சென்றபோது கார் பிரேக்டவுன் ஆகி நின்றுவிட்டது. நண்பர்கள் கீழே இறங்கி தள்ள முயன்றபோது, அழைத்தார்கள். "என்னை அழைக்காதீர்கள்! என்னால் தள்ள முடியாது. எனக்குத் தள்ளாத வயது" என்றாராம் கி.வா.ஜ! இதை நினைத்துச் சிரிப்பேன்.

என்.எஸ்.கே. ஒரு நாடகத்தில் நடித்தபோது ராஜா வேடம் போட்டவர் மந்திரியாக நடித்த என்.எஸ். கேயிடம் ஒவ்வொரு நாட்டு மன்னராக 'கப்பம்' கட்டிவிட்டாரா என்று கேட்டபடி வந்தது என்.எஸ்.கேக்கு அலுத்துவிட்டது. கடைசியாக ஒரு மன்னரைக் குறிப்பிட்டு ராஜா 'கப்பம் கட்டிவிட்டாரா?' என்று கேட்க என். எஸ்.கே. சலிப்புடன் 'அவர் வெறும் வேட்டிதான் கட்டினார்' என்று சொந்தடயலாக் பேச கூட்டம் சிரித்ததாம். இது எனக்குப் பிடித்தது.

நாகேஷ் என்னிடம் சொன்ன நகைச்சுவை இது. கல்யாணத்தில் சீட்டு விளையாடிக் கொண்டிருந்த பலரைத் தாண்டி ஒரு இளம் பெண் கல்யாண மண்டபத்திற்கு வெளியே போகச் சென்றாளாம். ஒரு பெரியவர் அந்தப் பெண்ணிடம் 'அம்மாடி வெளியே பார்த்து போயிட்டு வா. தெருக்களில் ரவுடிகள், காலிப்பயன்கள் இருப்பாங்க' என்று எச்சரித்தாராம். சீட்டு விளையாடிக் கொண்டிருந்த ஒருவன் 'நீ தைரியமா போயிட்டுவாம்மா... எல்லா ரவுடிகளும், காலிகளும் இங்கேதான் இருக்கோம்' என்றானாம்.

அபஸ்வரம் ராம்ஜி சொன்ன ஜோக் இது. நண்பனிடம் ஒருவன் 'என்னடா பத்தாவது ஆண்டு திருமண நாளுக்கு நீ என்ன செய்யப் போறே?' என்றான். 'ஐந்தாவது ஆண்டு திருமண நாளுக்கு என் மனைவியை காஷ்மீருக்கு கூட்டிகிட்டு போனேன்' என்று சொன்னான் நண்பன். கேட்டவன் சலிப்புடன் 'ஐந்தாவது ஆண்டு இருக்கட்டும்... பத்தாவது ஆண்டுக்கு என்ன செய்யப்போறே? அதைச் சொல்லு.'




என்றானாம். 'ஐந்தாவது ஆண்டு விழாவில் காஷ்மீரில் விட்டு விட்டு வந்த என் மனைவியை இப்ப போய் அழைச்சிட்டு வரப்போறேன்' என்றானாம். கேட்டவன் மயங்கி விழுந்து விட்டான்.

-ஆரைகுடி
மாயகிருஷ்ணன், வி.க.

# தியானம் என்றால் என்ன?

"மனம் என்றால் என்ன?" என்ற ஒரு கேள்வியை எழுப்பிக் கொண்டு பார்த்தோமேயானால் அதனைத் தொடர்ந்து "மனிதன் என்றால் என்ன?" என்றும் கேட்க வேண்டும்.

அவ்வாறு கேட்போமேயானால், வருகின்ற விடை: "மனிதன் என்றால் மனம்தான்; மனம் என்றால் மனிதன்தான்" என்பதாகும்!

ஏனெனில், உடல், உயிர் இந்த இரண்டையும் எடுத்துக் கொண்டு, "உடல்தான் மனிதனா?" என்று கேட்டுப் பார்த்தோமேயானால் "உடலானது மனிதன்தான். இதில் என்ன ஐயம்?" என்று ஒரு சிலர் நினைக்கலாம்.

ஆனால், உயிர் போய்விட்ட பின்பு அந்த உடலுக்கு வேறு பெயர்தானே உண்டாகிறது? எனவே, உடலை மட்டும் மனிதன் என்று ஒப்புக்கொள்வதற்கில்லை,

அப்படிப்பட்ட இந்த உடலும், உயிரும்

வாழ்க்கைக்கு உதவும் உன்னதத் தொடர்

# வளமுடன்

வேதாத்திரி மகரிஷி

சேர்ந்து இயங்கும்போதுதான் மனம் என்ற ஒன்று விளக்கமாக, இயக்கமாக நடைபெற்று வருகின்றது.

அந்த நிலையிலேதான் "மனம்" என்று குறிப்பட்டுச் சொல்கின்றோம். அதைத்தான் "குணம்" என்றும், ஆங்கிலத்தில் "Personality" என்றும், "மனிதத் தன்மை" என்றும், "மனிதன்" என்றும் கூறுகின்றோம்.

மனத்தின் தன்மை எதுவோ அது தான் மனிதனுடைய தன்மை! மனத்தின் மாண்பு எதுவோ அதுதான் மனிதனுடைய மாண்பு! மனத்தின் உயர்வு எதுவோ அதுவேதான் மனிதனுடைய உயர்வு.

ஆகவே, மனத்தை நாம் எந்த அளவில் உயர்த்திக் கொள்ளுகிறோமோ– தூய்மை செய்து கொள்ளுகிறோமோ– வலுப்படுத்திக் கொள்ளுகிறோமோ– அந்த அளவிலேதான் மனிதனுடைய வாழ்வு, மனிதனுடைய மதிப்பு, மனிதனுடைய வெற்றி, மனிதனுடைய எல்லா வளங்களும் அமையும்.

ஆகவே, மனத்தை வளப்படுத்த வேண்டியது மிகமிக அவசியம்!

இதைக் கேட்கும்பொழுது எல்லோருக்கும் ஓர் எண்ணம் ஏற்படலாம்: 'இந்த மனமானது ஓடிக்கொண்டே இருக்கிறதே, இதை நிறுத்திவிட்டால் நன்றாக இருக்கும். ஆனால் அது நிற்க வேண்டுமே?!'

ஆனால், மனம் நிற்கவேண்டுமென்று ஒருவர் நினைக்க ஆரம்பித்தால்... உண்மை! அது முன்பைவிட அதிவேகமாக ஓடத் தொடங்கும்!

ஆமாம்! "மனத்தை அடக்க நினைத்தால் அலையும்; மனத்தை அறிய நினைத்தால் அடங்கும்."

மனத்தை அடக்கிவிட வேண்டுமென்று நினைத்துக்கொண்டு, எங்கே அடக்குவது என்று நாம் போய்க் கொண்டே இருக்கும்போது அதுவும் ஓடிக்கொண்டேதான் இருக்கும்.

ஆனால், "மனம் என்றால் என்ன?" என்று மனத்தையே மனத்தைக் கொண்டு கேட்கத் தொடங்கினால்... அப்பொழுதுதான் அந்த மனத்திற்கு அமைதி கிட்டும்.

இந்தக் கட்டத்திலே நாம் அறிந்து உணர்ந்து கொள்ளவேண்டியது என்னவென்றால், மனத்தாலன்றி மனத்தை நிலைநிறுத்திட முடியாது என்பதே.

இந்த மனத்திற்கு ஒரு பயிற்சியை அளிக்க வேண்டியது அவசியம் என்பது இப்போது உணரப் படுகின்றதல்லவா?

அதற்கேற்ற ஒரு பயிற்சியை அளிப்பதற்கு முன்னதாக "மனம் ஏன் ஓடுகிறது?' என்று ஆராய்வோமா?

நாம் எத்தனையோ காரியங்களைச் செய்கின்றோம். அந்தக் காரியங்கள் அத்தனையையும் முதலில் எண்ணம் வந்தபின்தானே செய்கின்றோம்? எனவே, எண்ணம் தான் எல்லாச் செயல்களுக்கும் அடிப்படையாக இருப்பதை உணருகிறோம்.

மனமானது ஏன் அவ்வாறு இயங்குகின்றது... நமது இச்சைக்குக் கட்டுப்படாது எண்ணம் இயங்குவானேன்?

அது ஓடிக்கொண்டே இருக்கும்போது நமக்குத் துன்பமாகவே சில சமயத்தில் இருக்கிறதே என்பதையெல்

லாம் பார்த்தோமேயானால், அந்த மனம் என்ற ஒன்று இருக்கின்றதே, அது உருவானதற்குக் காரணமாக இரண்டடுக்கு வினைப் பதிவுகள் நம்மிடம் இருப்பது தெரியவரும்.

பிறந்தது முதற்கொண்டு இன்று வரையில் என்னென்ன செய்தோமோ, என்னென்ன நினைத்தோமோ, என்னென்ன தீர்மானித்தோமோ, இவை அனைத்தும் அங்கே பதிவாகி இருக்கின்றன.



இவ்வாறு பதிவு செய்யப்பட்டவைகளெல்லாம் அவ்வப்போது சூழ்நிலைக்கேற்ப, சந்தர்ப்பங்களுக்கேற்ப மீண்டும் மீண்டும் அதேமாதிரியான எண்ணங்களாகவே பிரதிபலித்துக் கொண்டே இருக்கும்; புதிய புதிய எண்ணங்களும் உருவாகும். இது ஒரு பதிவு.



இதை மேல் அடுக்குப் பதிவு என்று சொல்லலாம்.

இந்த மனத்திற்கு இன்னொரு பதிவு- முன்னதான பதிவு இருக்கிறது. அதுதான் கருவமைப்புப் பதிவு. இந்தக் கருவமைப்புப் பதிவு என்பது, பெற்றோர்களை அடிப்படையாகக் கொண்டு பார்க்க வேண்டியது.

அவர்களுடைய குணாதிசயங்கள் (Character), அவர்களுடைய வினைப் பயன்கள், அவர்களுக்கு முன்னோர்கள், அவர்களுக்கும் முன்னோர்கள் என்று நம் கருத்தொடர் வழியாகப் பின்னோக்கிச் சென்றோமேயானால் முதன் முதலில் ஒரு மனிதன் உலகத்தில் தோன்றினானே, அன்று முதற்கொண்( பெற்றோர்கள் வரையிலே எங்கேயு( இடைவிடாத தொடராகக் கருவமை( பின் மூலம் வந்துகொண்டே இரு( பதைப் பார்க்கலாம்!

அத்தனைப் பிறவிகளிலேயும் எ( ணிய எண்ணங்கள், செய்த செயல்கள், கொண்ட அனுபோக அனுபவங்க( எல்லாம் பதிவாகி இருக்கின்றன.

இந்த மனம் என்ற தன்மையிலே அதாவது அறிவு என்ற தன்மையிலே எனவே, நாம் 'மனம்' என( குறிப்பிட்டுப் பேசுவ( இரண்டடுக்கு வினை( பதிவுகளாலே ஆக்கப்பட்ட ஒரு தத்துவமாகும்.

இந்தக் கருவமைப்பு( பதிவு 'சஞ்சித கர்மம்' என்று சொல்லப்படுகிறது!

இந்த இரண்டு கர்ம( தின் அடிப்படையிலே இந்த இரண்டும் சேர்ந்து ஒரு மனிதனுடைய தன்மை( யாக உருவாகி இரு( கின்றது.

ஆகவே, இப்பொழு( எண்ணம் ஏன் ஓடுகின்ற( என்று பார்த்தால், முன்பு நா( என்னென்ன காரியங்கள் செ( தோமோ அதேபோல உடலிலே சக்தி ஏற்படுகிறபோது, அந்தச் சக்தியின் காரணமாக அதே எண்ணம், அ( செயல் உண்டாகின்றது.

நாம் இப்பொழுது எண்ணத்தை ஒழுங்குபடுத்த வேண்டும் என்( சொன்னால் அதற்கு முறையான ஒ( பயிற்சி அவசியமாகிறது.

முன்பு ஒருவிதமாகப் பயிற்சியை நாம் செய்து கொண்டோம். அதனா( அது இயங்கிக் கொண்டே இருக்கி( றது. மீண்டும் இன்னொரு பயிற்( தேவைதான் என உணர்ந்து கொண்ட

பின் எண்ணம் எவ்வாறு அமைகிறது என்பதை முதலில் தெரிந்துகொள்ள வேண்டும்.

அதன்பிறகு அதற்குரிய முறையிலே பயிற்சி செய்ய வேண்டும். அவ்வாறு செய்தால்தான், நம்முடைய மனத்தை நம்முடைய விருப்பப்படி நடத்தி நாம் அடையவேண்டிய எல்லாப் பேறுகளையும்- எல்லா இலட்சியங்களையும் நாம் வாழ்க்கையிலே அடைய முடியும்.

அதற்குரிய பயிற்சியைத்தான் யோகம்' என்றும் 'அகத்தவம்' என்றும் லயம் சொல்லுவார்கள்.

மனப்பயிற்சியைப் பழைய யோக நூல்களிலே நான்கு விதமாகக் குறிப்பிட்டிருக்கிறார்கள்!

அந்த நான்கு விதமான பயிற்சிகள்: 'பிரத்தியாகாரா, தாரணா, தியானம், சமாதி' எனக் குறிப்பிடப்படுகின்றன.

'பிரத்தியாகாரா' என்றால் இது வரையிலே என்னென்ன காரியங்கள் செய்தோமோ, அதன்வழியே மனம் ஓடிக்கொண்டு இருக்கின்றதே. அதை முதலில் அதன் வழியே ஓடாமல் திருப்பி விடுவது - ஓட்டத்திலேயிருந்து மாற்றியமைப்பது- இதுவே பிரத்தியாகாரா!

அதன்பிறகு 'தாரணா'. தன் விருப்பம்போல ஏதோ ஒரு பொருள்மீது, செயல்மீது, நினைவின்மீது மனத்தை நிறுத்தி வைக்கப் பழகுவது (Focussing attention on one thing at will). இதை 'Concentration' என்று கூறுவார்கள் இதுதான் தாரணா.

மூன்றாவது பயிற்சி 'தியானம்!' இந்த மனம் எங்கிருந்து புறப்படுகின்றதோ, அது புறப்படுகின்ற இடத்திலேயே மனத்தைக் கொண்டு வந்து நிலைநிறுத்தப் பழகுவது என்பதுதான் தியானம்.

எங்கிருந்து புறப்படுகின்றதெனில், மனம் என்பது வேறு ஒன்றும் இல்லை, நம்முடைய உயிராற்றல்தான்.

உயிர்ச்சக்தியினுடைய படர்க்கை நிலைதான் மனமாக இருக்கின்றது.

இந்த உடலில் உயிர் இயங்கும் போது, அதிலிருந்து ஓர் அலை வீச்சு உண்டாகிறது; அலையின் மூலமாகப் புலன்கள் வழியே சென்று உயிரே மனமாக இயங்கிக் கொண்டிருக்கின்றது.

அந்த மனத்தை அந்த உயிர் மேலேயே லயிக்கச் செய்வதுதான் தியானம் (Meditation) ஆகும்.

இதில் முக்கியமாய் கவனிக்க வேண்டியதும் ஒன்று உண்டு!

அது என்ன?

-அடுத்த வாரம்


RAMRAJ
ராம்ராஜ்
காட்டன்
• வேஷ்டிகள் • பனியன்கள்
• சர்ட்டுகள் • டிராயர்கள்
அனைத்து முன்னணி ஜவுளி நிறுவனங்களிலும் கிடைக்கும்.

# வாழ்க வளமுடன்!

# நான் யார்?

இதுநாள் வரையில் எதிர்ப்படுவர்களை "நீ யார்?'' என்று கேட்டுத்தான் நமக்குப் பழக்கம்!

எப்பொழுதாவது "நான் யார்?'' என்று நமக்குள்ளே கேட்டுக்கொள்கிறோமா என்றால் கிடையாது.

எனவே முதல் முறையாக இன்று "நான் யார்?'' எனக் கேட்பது புதுமையாகத் தான் இருக்கும். அந்தப் புதுமை தான் மனிதனை மனிதனாக்கவல்லது.

"நீ யார்?'' என்று கேட்கையில் வெறுப்புணர்ச்சி தான் மேலோங்கி நிற்கும்.

அது மனம் புறத்தே இயங்கிக் கொண்டிருக்கும் உணர்ச்சிவயப்பட்ட நிலை.

"நான் யார்?'' என்று கேட்கும் போது "என்னை இந்த உலகிற்கு அனுப்பியவர் யார்? இந்த உலகத்தை நிர்வகித்துக் கொண்டிருப்பது யார்? நான் எங்கிருந்து வந்தேன்? எங்கு போக வேண்டும்? அது எப்பேர்ப்பட்ட இடம்?'' என்று எல்லைகாண விரும்பும் கேள்வி தான், "நான் யார்'' என்பது!



மூன்றும் சேர்ந்ததுதான் "நான்'' என்பதாக ஒலிக்கிறது.

'இந்த மூன்றில்' நான் உடலா? உயிரா? அறிவா? -இதுதான் இப்போது நாம் தெரிந்துகொள்ள வேண்டிய முக்கிய விஷயம். அல்லது எல்லாமே சேர்ந்துதான் நானா?-

இந்த வினா சுலபமாகக் கிடைக்கக்கூடிய விடை உடையதுதான்.

ஆனாலும் அதை எளிதில் பெற

"நான் யார்?" என்பது இரண்டே வார்த்தைகள் கொண்ட கேள்வி தான்! இரண்டே இரண்டு சொற்கள்!!



22

இந்த இரண்டு சொற்கள் கொண்ட ஒரு கேள்விக்கு அர்த்தம் மாத்திரம் புரிந்து கொண்டு விட்டால், இந்தப் பிரபஞ்சத்தின் ரகசியம் அத்தனையும் விளங்கிவிடும்.

எனவே, இப்போதாவது "நான் யார்?" என்கிற கேள்வியை நாம் ஒவ்வொருவரும் கேட்டுக் கொள்வோம்.

உடல், உயிர், மனம் இந்த முடியாதபடி இதுவரை படித்த நூல்களில் சிக்கல்களை ஏற்படுத்தி வைத்திருக்கிறார்கள்.

காரணம்?

யாரோ ஒரு சாதகர் தனக்குத் தெரிந்த ஒருவரிடம் இந்தக் கேள்வியைக் கேட்டுவைப்பார். அவர் பதில் சொல்வார். இவர் தெரியாத அவரிடம் என்ன தெரிந்து கொண்டாரோ அதை வைத்துக்கொண்டே பத்துப் பேரிடம் சொல்வார். இப்படி உண்மையை மறைத்து எழுதப்பட்ட எத்தனையோ நூல்களை இன்று பார்க்கின்றோம்.

அதனால்தான் உண்மை மறைந்து போயிற்று!

உண்மை என்பது எப்போதும் எளிது.

அதைத் தெரியாமல் அணுகும் போது, பல குழப்பங்களை ஏற்படுத்திக்கொண்டு அதனை யாருக்குமே விளங்காமல் செய்து விடுகின்றார்கள்.

அவ்வாறல்லாது உண்மை

**வேதாத்திரி மகரிஷி**

யோடு நாம் உண்மையை அணுகினால், உண்மையைத் தெரிந்து கொண்டால்! அது மிகவும் எளிது தானே? நல்லதுதானே?

அந்த முறையிலே எந்தவிதமான கூட்டல், குறைத்தல் இல்லாத யோகத்தை, அசலாக யோகமாகவே நாம் தெரிந்து கொண்டால், அந்தப் பயிற்சி முறையை எளிமை என்ற வார்த்தையை வைத்து எளிய முறைக் குண்டலினி யோகம் என்று சொல்கிறோம்.

அது மாத்திரமல்ல!

யோக முறையில் அன்றிருந்த சடங்கு, சம்பிரதாயங்களை எல்லோரும் செய்ய முடியாது. ஆர்வமிகுந்த ஒருசிலர் இதற்காக இல்லத்தை விட்டே சென்றுவிடுவதை நாம் பார்த்திருக்கலாம், அல்லது கேள்விப்பட்டிருக்கலாம்.

அந்த மாதிரி இல்லாமல், குடும்பத்தைத் தேடி, வீடு வீடாகப் போய், இந்த யோகம் எல்லோருக்கும் எளிதாகக் கிடைக்கின்றது என்றால் ஏன் இதை 'எளிய முறைக் குண்டலினி யோகம்' என்று சொல்லக் கூடாது?

> **உடல், உயிர், மனம் இந்த மூன்றும் சேர்ந்தது தான் "நான்" என்பதாக ஒலிக்கிறது. இதில் உடலா? உயிரா? அறிவா? இதுதான் இப்போது நாம் தெரிந்து கொள்ள வேண்டிய முக்கிய விஷயம்**

அந்த முறையிலே இந்த எளிய முறை யோகத்தின் மூலமாக நடைமுறையாக, பிரத்யட்சமாக, அனுபவமாகப் புரிந்து கொள்ளக்கூடியதுதான் "நான் யார்" என்ற விளக்கமும்!



ஒரு அன்பர் - அவர் அதிகமாக ஆராய்ச்சி மனம் உடையவர்; அவருக்கு, "கடவுள்," "உயிர்" இந்த இரண்டைப் பற்றித் தெரிந்து கொள்ள வேண்டுமென்று ஆசை. எனவே அவர் விடை தேடி எங்கெங்கோ போனார்.

பெரிய வியாபாரி ஒருவருடைய மகன் அவர்; முதல் பிள்ளை! அவருக்குப்பின் நான்கு பிள்ளைகள் இருந்தனர்.

இவர், தான் திருமணம் கூடச் செய்து கொள்ளாமல், சகோதரர்களுக்குக் காலத்தோடு செய்துவைத்தார்.

ஆனால் அவர் தேடல் வேறு!

இந்தக் கேள்விகளுக்கும் விளக்கம் அவ்வளவு எளிதல்ல என்று சொன்னார்கள்.

அதன்பிறகு ஒவ்வொருவரும் ஒவ்வொரு விதமாக பதில் சொன்னார்கள். அதை அவர் ஒத்துக் கொள்ளவில்லை.

இறுதியில் ஒரு பெரியவரைப் போய் வணங்கி, "ஐயா, எனக்கு ஒரு சந்தேகம், அதற்கு விடை காண வேண்டும் என வந்தேன்," என்று கூறினார். அந்தப் பெரியவர் நிமிர்ந்து பார்த்தார்.

அப்புறம்?

(அடுத்த வாரம்)

# விண் முதல் மண் வரை!

அவர் கேட்ட கேள்வி! "கடவுள் என்றால் என்ன?- இதைப் பற்றித் தெரிந்து கொள்ள வேண்டும்'' - என்பது தான்!

"அவ்வளவு தானே! என்னுடன் இரு! நீ தெரிந்துகொள்ளலாம்,'' என்றார் அந்தப் பெரியவர்.

இரண்டாண்டுகள் முடிந்தவுடன் குருவை வணங்கி, தன்னுடைய வினாவிற்கு விடையை வேண்டினார் சிஷ்யன்.

"சரி, குறித்துக் கொள்ளுங்கள், கடவுள் என்பது குழப்பம், வாழ்க்கை என்பது பிரச்சினை, என்று!' -என்றார் குரு பதிலாக.

"இதில் குறித்துக் கொள்ள என்ன இருக்கிறது? இது எனக்கே தான் தெரியுமே?!'' -என்றார் அந்த அன்பர்.

"உனக்குத் தெரிந்ததுதான். அதையே நானும் சொல்லும் போது ஒரு தெளிவு உண்டாகிறது அல்லவா?'' என்று திருப்பிக் கேட்டார் குரு.

"ஆம், ஆனால் விளக்கம் கிடைக்கவில்லையே?'' இது விடாப்பிடி சிஷ்யனின் எதிர் வினா.

"இது தான் விளக்கம்;

வாழ்க வளமுடன்!

வேதாத்திரி மகரிஷி

23

72

21-11-03

இதுவரை உலகம் கண்ட விளக்கமும் இதுதான்.''

பிறகு அந்த அன்பர் என்னைச் சந்தித்தார். நான் அவருக்குத் தீட்சை கொடுத்து, விளக்கமும் கொடுத்தேன். அவர் மிக்க மகிழ்ச்சியுடன், விளக்கம் கொடுத்ததற்கு நன்றி கூறிவிட்டுப் போனார்.

அதுபோல உள்ளதுதான் இந்த "நான் யார்?'' என்பது!

"இதற்கு விடை கிடைத்தால், தெய்வத்தை அறியலாம், தெய்வநிலை அறியலாம், மெய்ப்பொருள் எது என்பதை உணரலாம், அறிவு என்ன என்பது அப்போது உணரப்படும். ஆக, அறிவை அறிதல், தெய்வ நிலை அறிதல், பிரபஞ்சத்திற்கு மூல காரணமாக உள்ளதை அறிதல்- எல்லாமே ஒன்றுதான்.

இவ்வளவு பெரிய சிக்கலான விஷயத்தை எளிமையான வார்த்தைகளிலே உங்களுக்கு விளக்கப் போகின்றேன்.

சிலருக்கு விளங்கும்; ஆனால் பிடிபடாது. அதை மறுபடியும் மறுபடியும் ஆராய வேண்டும்.

ஏனென்றால்-

இதற்கு முன்னர், ஏதோ சில விஷயங்களை "அதுதான் கடவுள்'' என்றும், "அதுதான் உயிர்'' என்றும் எண்ணி எண்ணி அந்தப் பதிவே உங்களிடம் அதிகமாக இருப்பதால், உண்மை என்பது என்னவென்று தெரிந்தால் கூட, அது உடனே ஒத்துவராத ஒரு மயக்கமாக இருக்கும்.

ஒரு சிலருக்குப் புலன்கள் வழி மாத்திரம் தெரியும்; மற்ற சிந்தனை பற்றி ஆராய்ச்சி இருக்காது! அவர்களுக்கு விளங்காது.

ஆனால், எல்லோருக்குமே காலத்தால் விளங்கிவிடும் என்பது மட்டும் நிச்சயம்.

ஒரு சிறிய உதாரணத்தின் மூலம், "நான் யார்?''- என்ற கேள்விக்கு இப்போது விளக்கம் கொடுக்கப் போகின்றேன்.

ஒரு ஆப்பிள் பழத்தை எடுத்துக் கொள்வோம். இப்பொழுது நான் கையில் வைத்திருப்பது ஒரு ஆப்பிள் பழம்.

இந்தப் பழம் கண் பார்வையிலே 'ஆப்பிள் பழம்' என்ற பெயரைக் காட்டி இதுவரை நமக்குத் தெரிவித்திருக்கின்றார்கள்; அதனால்தான், நாம், அதை ஆப்பிள் பழம் என்று சொல்கிறோம்.

**வாழ்க்கைக்கு உதவும் உன்னதத் தொடர்**

புலன் அளவிலே பார்க்கின்றபோது இது ஒரு தோற்றத்திற்குரிய பொருளாக இருக்கிறது! புலனைக் கடந்து விஞ்ஞான அறிவுக்குப் போகலாமா?

'விஞ்ஞானம்' என்றால் என்ன? எத்தனையோ பொருட்களை நாம் பார்க்கின்றோம்- சூரியன், சந்திரன், கடல், மலை முதலியன.

அந்த ஒவ்வொரு தோற்றத்தையும் பிரித்துக் கொண்டே போனால் கடைசியில் எல்லாமே 'விண்' என்ற ஆகாசத்தினுடைய கூட்டாகவே முடியும்.

எந்தத் தோற்றமானாலும், எந்தப் பொருளானாலும் அதைப் பிரித்துப் பார்ப்போமேயானால் கடைசியில் நிற்பது- நுண் துகளாக உள்ள "விண்'' என்பதே!

அந்த விண் என்பதை சரியாக உணர்ந்து கொண்டோமேயானால் அதுதான் "சிவம்'' என்ற பூரணம்.

அந்தப் பூரணமே தன்னைத் துண்டுபடுத்திக் கொண்டு "சக்தி"யாக, இயக்கமாக வந்தது.

அந்தச் சக்தி என்ற விண்... 'பரமாணு' என்று தமிழிலும், 'ஆகாசம்' என்று வட மொழியிலும் குறிப்பிடப்படுகிறது; 'Ether' என்று ஆங்கிலத்தில் சொல்கிறோம்.

அதை மாத்திரம் மனதில் கொண்டு இந்தத் தோற்றங்களைப் பார்ப்போமேயானால் அதனுடைய கூட்டுதான் எல்லாமும் என்பது விளங்கும்.

அதாவது பௌதீகப் பிரிவு என்று பார்த்தால் முதலில் விண்தான். அந்த விண் சிறிது கூடும் போது காற்று. அதற்கு மேல் இன்னும் சற்று அழுத்தமாகக் கூடும் போது நெருப்பு.



நெருப்பு, காற்று இரண்டுமே காற்றுத் தான்! இது அழுத்தக் காற்று, அது லேசான காற்று - அவ்வளவு தான்!

இந்த இரண்டும் ஒன்றோடு ஒன்று இணைந்து ஒரு இடத்தை நிரப்பிக்கொண்டால் அதுவே நீர். அதற்குமேல் இன்னும் நெருங்கிக் கெட்டியானால் மண். இவையே பஞ்ச பூதம் என்று ஐந்தாக உள்ளன.

ஆச்சரியமாக இருக்கிறதா? இன்னும் பல வியப்பான உண்மைகளை நீங்கள் விரும்பினால்... செவி மடுத்தால் அறியலாம்!

அவை-

-அடுத்த வாரம்

# வாசகர்

'எப்படி இருந்த நான்... இப்படி ஆயிட்டேன்'னு சோகத்தில்கூட நகைச்சுவை உணர்வை வெளிப்படுத்தும் தனுஷ் ரியலி கிரேட்.

–நிஷா, மதுரை.

செம்மங்குடிக்கு பொடி போடக் கற்றுக் கொடுத்தவர் ராஜாஜியா? ஆச்சர்யமான தகவலாயிருக்கே!

–கோபால், ஸ்ரீவில்லிபுத்தூர்.

லேட்டஸ்ட் சர்ச்சையான சூப்பர் ஸ்டார் நாற்காலி பற்றி விக்ரம் சொல்லியிருப்பது அவரின் ஆழ்ந்த கூர்நோக்குப் பார்வையை உணர்த்துகிறது.

– கணேஷ், திருச்சி.

ஆஹா! பிரம்மாதம்! மழைக் காலக் கூட்டத் தொடர்போல் குளிர்ச்சியான கிரண் ஆல்பம் ரொம்பவே அசத்திவிட்டது.

– மனோ, விழுப்புரம்.

கிராமப் பஞ்சாயத்துக்கள் பற்றி பிரபலங்கள் சொல்லியிருக்கும் கோணங்கள் வித்தியாசமானது.

–ரமா, சிவகாசி.

வாழ்க்கையின் வசந்த காலம் பள்ளிப் பருவம் தான். 'ஒரு பெண் கல்வி கற்றால் அந்தக் குடும்பத்தில் உள்ள அத்தனை பேரும் கல்வி கற்ற மாதிரி''– ஜோதிர்லதா கிரிஜாவின் கருத்து அட்சர லட்சம் பெறும்.

–மூர்த்தி, கோவை.

"என்னப்பா எமனுக்கே ஸ்டாப் போர்டு காட்டுறியா?'' கிண்டல்களுடன் போக்குவரத்துப் போலீசாரின் அனுபவங்கள் ரசிக்க வைத்தன.

–செல்வா, தென்காசி.

பட்டுக்கோட்டை பிரபாகரின் கடிதத் தொடர் எங்களின் சிந்தனைக்கு விருந்து.

–விவேக், சென்னை.

# பெருந்தன்மையா?

விண், காற்று, நெருப்பு, நீர், நிலம் ஆகிய எல்லாமே விண்ணினுடைய கூட்டுத்தான் என்பதை முதலில் தெரிந்து கொள்ள வேண்டும். விண் என்பது மூலக்கூறு! நாம் பிரபஞ்சத்தில் பார்க்கக்கூடிய எல்லாமே விண் என்பதுதான். ஆனால், கூட்டாகப் பார்க்கின்றோம்.

தோப்பில் மரத்தைத்தான் பார்க்கிறோம். ஆனால் "தோப்பு" என்று சொல்லும்போது பல மரங்கள் அடங்கிய ஒரு கூட்டத்தைச் சொல்கிறோம்.

அது போல "விண்ணால் சேர்ந்த தோப்பு, தொகுப்புத்தான் தோற்றங்கள்" என்று எடுத்துக்கொள்ளவேண்டும்.

இப்போது சூரியனைப் பார்க்கின்றோம். அதைக் கண்ணால் பார்க்கின்றபோது மொத்தமாகப் பெரியதாக இருக்கிறது.

ஆனால் விண்ணறிவுக்குச் சூரியன் பரமாணுக்கள் பல சேர்ந்த ஒரு கூட்டுதான் - இது விஞ்ஞானம். அதாவது "விண்+ஞானம்!" விண்ணறிந்த ஞானம். அந்த விண்ணை அறிந்தவர்கள், அந்த நிலையிலே உலகத்தைப் பார்க்கக்கூடியவர்கள்.

அந்த நிலையிலே தன்னைப் பார்க்கக்கூடியவர்கள் இந்த உடலுக்குள்ளாக இருந்து இயங்கிக்கொண்டு இருப்பது விண் ("சித்தாகாசம்") என்ற உயிர் என்று சொல்லி வருகிறார்கள்.

அந்த அறிவு பெற்றவர்களை "விண்ணவர்" என்று சொல்வதும் நம் மரபு.

விண்ணவர் என்றால் விண் என்ற உண்மையை உணர்ந்தவர்கள்! "மண்ணிலே விண்ணைக் கண்டான்" என்ற பாடலைக் கேட்டிருப்பீர்கள். மண் என்று எடுத்துக்கொண்டால் அதைப் பிரித்துப் பார்க்கப்போனால் விண்தான் அதன் மூலக்கூறுகளாக இருக்கும்.

# ஆப்பின் சொல்லும் அறிவு!

இன்னொரு பழமொழி நமக்குத் தெரியும், "ஓடும் செம்பொன்னும் ஒக்கவே நோக்குவார்'' என்று!

இதற்கு விளக்கமாக நாம் சாதாரணமாக என்ன நினைப்போம்?

ஓடு விலையற்றது, அதாவது அதற்கு மதிப்புக் கிடையாது, தூக்கி எறியக் கூடியது. பொன்னோ எவ்வளவோ மதிப்புடையது.

அந்த நிலையில் "ஓடும் செம்பொன்னும் ஒக்கவே நோக்குவார்'' என்று சொன்னால்; ஞானிகள் ஓட்டுக்கும் பொன்னுக்கும் ஒரே மதிப்பைத்தான் அளிப்பார்கள் என்றுதான் சொல்வோம்.

ஞானிகளுக்கெல்லாம் பொன்னில் இருக்கும் விலை மதிப்பைப் பற்றிக் கவலையில்லை. ஆகையால் அதன் மேல் ஆசை வைக்க மாட்டார்கள் என்று. அதுவல்ல பொருள்.

ஓடும் பல விண்துகள்கள் நிறைந்த கூட்டு, பொன்னும் பல விண்துகள்கள் நிறைந்த கூட்டு. இந்த இரண்டிற்கும் வித்தியாசம் இல்லை, வேறுபாடு இல்லை.

மகாகவி பாரதியார் "ஐய பேரிகை கொட்டடா'' என்ற பாடலிலே...

"காக்கை, குருவி எங்கள் ஜாதி நீள்
கடலும், மலையும் எங்கள்
கூட்டம்,''

என்று சொன்னார். கடல், மலை இந்த இரண்டுமே எங்களுடைய கூட்டம்; அதாவது நானும் அணுக்களுடைய கூட்டம்; கடலும் மலையும் அணுக்களுடைய கூட்டம் இந்த இரண்டையும் எடுத்துக் கொண்டால் நாங்கள் அனைவரும் ஒன்றுதான்.



"காக்கை குருவி எங்கள் ஜாதி'' -எப்படியென்றால், பசி, உணர்ச்சிகள், இன்ப துன்ப உணர்வு இந்த மூன்றையும் அனுபவிப்பதில் நாங்கள் ஒன்றுதான்.

அந்த முறையிலே "மண்ணிலே விண்ணைக் கண்டான்'' என்பதும், "ஓடும் செம்பொன்னும் ஒக்கவே நோக்குவார்'' என்பதும் எல்லாமே அணுக்களுடைய கூட்டம்தான் என்ற தெளிவில் வந்தன.

இதுதான் விஞ்ஞான அறிவு!

அந்த விஞ்ஞான அறிவோடு இந்த ஆப்பிள் பழத்தைப் பார்ப்போம். கண்மூலமாகப் பார்க்கும்போது பழமாகத் தெரிகிறது அல்லவா?

சரி. அந்தக் கண்ணையே மறந்து விடுவோம்; விண்ணறிவுக்குப் போவோம்.

இது என்ன? பலகோடி விண்துகள்கள் நிறைந்த ஒரு கூட்டு 'பழம்' என்ற காட்சியாக இருக்கிறது.

ஒரு ஆப்பிள் பழத்திலே கோடிக் கணக்கான விண்துகள்கள் சேர்ந்து இருப்பதையும், அவை எல்லாம் ஒன்றோடு ஒன்று சேர்ந்துகொண்டு "ஆப்பிள்'' என்ற ஒரு நாடகம் நடத்திக்கொண்டு உள்ளதையும் உணர்கிறோம்.

இதுதான் விண்ணறிவு. இந்த அறிவோடு உலகத்தைப் பார்ப்போம், பிரபஞ்சத்தைப் பார்ப்போம்.

மனிதனைப் பார்ப்போம், மரத்தைப் பார்ப்போம். எல்லாமே விண் அன்றி யாதும் இல்லை.

சரி, அந்த விண் என்பது எங்கு தோன்றி வந்திருக்கிறது என ஆராயுமிடத்து அங்குதான் தத்துவ ஞானம், மெய்ஞானம் வருகிறது.

புலன் வழியே பார்த்து இந்தத் தோற்றத்தை வைத்துக்கொண்டே யாரோ இதுவரை சொல்லிக் கொடுத்தார்கள் இது ஆப்பிள் என்று. நானும் அதையே மனதில் கொண்டு அதை ஆப்பிள் என்று சொல்லி வருகிறேன்.

இது உண்மையான அறிவல்ல. ஏனென்றால் இதைப் பொருள் என்று கூறுகிறோம். ஆனால் இது பொருள் அல்ல.

பலகோடி அணுக்கள் கூடி இயங்கிக் கொண்டிருக்கும் இயக்கம், நிகழ்ச்சி.

இந்நிகழ்ச்சியை பொருள் என்று நினைப்பது மயக்கம் அல்லது மாயை என்று சொல்கிறோம். இது அஞ்ஞானம்.

ஆனால், அதற்கும்மேலாக விண்ணறிவுக்கு வந்தபோது, விஞ்ஞானத்திற்கு வந்தபோது இதுவே பலகோடி அணுக்கள் இணைந்து இந்தக் காட்சியிலே இருக்கிறது என்று அறிகிறோம்.

அந்த விண் என்பது என்ன என்று பார்க்கும்போது விரைவாகத் தற்சுழலோடு சுற்றிக்கொண்டே இருக்கக் கூடிய ஒரு நுண்ணிய துகள், அது தான் விண்.

அது எங்கிருந்து எப்படி வந்தது என்றால், பேராதாரப் பரம்பொருள் என்று சொல்லக்கூடிய, மனதுக்கு ஒன்றுமே இல்லை என்று விளங்கக் கூடிய சுத்தவெளி, அதனுடைய உள்ளடங்கிய ஆற்றலால் தன்னையே உடைத்துக்கொண்டு தானே நுண்ணிய இயக்கமாக வந்தது எதுவோ அதுதான் விண்; அதுதான் சக்தி.


"பலகோடி அணுக்கள் கூடி இயங்கிக் கொண்டிருக்கும் இயக்கம் நிகழ்ச்சி."

அப்போது விண் என்பது என்ன? இறைநிலையே, இறைவனே பின்னப்பட்டு, எழுச்சி பெற்று இயக்கத்திற்கு வந்த நிலை. அந்தப் பின்ன நிலையிலே ஆதியும் இருக்கிறது; இந்த விண்ணும் இருக்கிறது.

ஒன்றாகியது இப்போது விண். ஒன்றுக்கு முன் இருந்தது என்ன? கடலும் அலையும் போல- அலை இருக்கிறது. அலையை நிறுத்தி விட்டோம் என்றால், அலை நின்று போனால் அந்த அலைக்குப் பெயர் கடல். கடலினுடைய சிதைவு அல்லது பிரிவு அல்லது அசைவு அலை.

அதேபோன்று நிலையாக இருக்கக்கூடிய பிரம்மம் அல்லது சிவம், பூரணம், மெய்ப்பொருள், தெய்வம் என்று சொல்லக்கூடிய ஒரு பொருள் கண்ணுக்கு, மனதுக்கு சுத்த வெளியாகக் காட்சியளிக்கிறது.

புரிகிறதா?

(அடுத்த வாரம்)




வாழ்க்கைக்கு உதவும் உன்னதத் தொடர்

# சினம் தவிர்த்தல்

சினம் தவிர்த்தல் என்ற சிந்தனை மனித குலத்திற்கு மிக மிக அவசியமானது.

எந்தப் பொருளையும் நாம் மனதில் கொண்டு சிந்திக்கச் சிந்திக்க அதனுடைய முழுத்தன்மை தெளிவாகக் காட்சி தரும்.

அதனால் எழக்கூடிய தீமைகளைத் தவிர்த்துக் கொள்ளவும், அதை எந்த முறையிலே நலம் தரும் செயலாக மாற்றிக் கொள்ளலாம் என்ற வழி முறைகளை வகுக்கவும்கூட அந்தச் சிந்தனைதான் நமக்குத் துணை புரியும்.

'சினம் என்பது என்ன? அது எவ்வளவு கொடியது?'- என்பதும் அனைவருக்கும் புரிந்தது தான்!

அது, ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு விதத்திலே அனுபவமாகக் கிடைத்திருக்கும்.

சினம் யாரிடம் எழுந்தாலும் அது பிறர் உள்ளத்தையும் புண்படுத்துகிறது; தன்னையும்... அதாவது தன் உடலையும், தன் மனத்தையும் கேடுறச் செய்கிறது.

தன்னையும் கெடுத்துப் பிறரையும் கெடுத்து, தற்காலத்திலும் துன்பம் உண்டாக்கிப் பின்னரும் துன்பத்தை நீடிக்கச் செய்யும் ஒரு உணர்ச்சிவயப்பட்ட பகை உணர்வே சினமாகும்.

நெருங்கிய நண்பர்களிடத்திலே,

சுற்றத்தார்களிடத்திலே, நம்மோடு அன்பு கொண்டு நமது நலத்துக்காகவே வாழ்ந்து கொண்டிருப்பவர்களிடத்திலேதான் அதிகமாக சினம் வருவதைப் பார்க்கிறோம்.

தீமை செய்தார்க்கும் நல்லது செய்ய வேண்டும் என்ற பண்பாடு உடைய இந்த மனித சமுதாயத்தின் உயர்விலே நல்லது செய்பவர்களுக்கும் தீமை அளிக்கும் ஒரு எண்ண வேகம், உணர்ச்சி வேகம் சினம் என்றால் அதைக் கட்டாயம் தவிர்க்கத்தானே வேண்டும்?

அறுகுண வரிசையில் சினம் இரண்டாம் இடத்தை வகிக்கிறது. முதல் இடம் வகிக்கும் 'அவா' என்னும் ஆசையைச் சீரமைத்து நிறைமனமாக்கிக் கொள்ள வேண்டுமென்று பார்த்தோம்.

எனவே, இந்தச் சினத்தை ஒழித்தே ஆகவேண்டும். சினம் ஒழிய மனம் அடையும் நிலைதான் பொறுமை. இதனைப் பொறையுடைமை என்று வள்ளுவர் கூறுவார்.

தற்சோதனையில் மேன்மேலும் உயர்வடைந்து குணநலப்பேற்றை நோக்கி வெற்றிநடை போடும் நமக்கு இந்தப் பொறையுடைமை மிகவும் அவசியமாகும்.

பொறையுடைமையின்றிக் குணநலப் பேற்றில் உயர்வடைய முடியாது.

பொறையுடைமை தரும் நிறையுடைமை இல்லாத ஆன்மீகம் ஆன்மீகமே அன்று.

ஒருவன் ஞானம் பெற்று விட்டானா, அவன் ஞானிதானா? என்பதை எப்படி அறிந்து கொள்வது?

எந்தச் சூழ்நிலையிலும் ஒருவனைச் சினம் அணுகவில்லையானால் அவன் ஞானம் பெற்றுவிட்டான் என்று கொள்ளுங்கள். அவனே ஞானி என்று கொள்ளுங்கள்.

சினம் அறும் இடத்தில்தான் அருள் தோன்றும். அருள் துறைக்கு அதாவது ஆன்மீகத்திற்கு சினமானது நேர் எதிர் நிலை. அதனால்தான் 'சினம் மாண்டுபோக அருள் சேர்ந்

"நாடியிலே என்னங்க ப்ளாஸ்திரி?"

"நாடி ஜோதிடம்' பார்க்கப்போன இடத்திலே விழுந்திட்டேன்!"

- குமாரகு

திருப்ப தெக்காலம்?' - என்று பத்திரகிரியார் ஏங்கினார்.

கோபம் ஒவ்வொருவருக்கும் வருகிறது. அதை ஒழித்துவிட வேண்டும் என்று பெரும்பாலோர் விரும்புகிறார்கள். ஆனால் வெற்றி பெற்றவர்கள் மிகச் சிலரே.

எனவே, ஆன்மீகத்தில் உயர்வடைந்து கொண்டிருக்கும் நாம் இந்தச் சினத்தை அறவே ஒழித்தாக வேண்டும்.

ஒழிப்பது எப்படி?

சினத்தின் தீமையைப் பற்றி இதுவரை யார் யாரோ எவ்வ

றோர் எடுத்துக் கூறியிருக்கிறார்கள்.

ஆனால் சினத்தை ஒழிக்க நடைமுறையில் வெற்றி யடையத் தக்கதொரு பயிற்சித் திட்டத்தை யாரும் வகுத்தாரில்லை. நாம் அத்தகு திட்டத்தை முன் வைக்கிறோம்.



இத்திட்டத்தைக் கைபாண்டு சினத்தை ஒழித்துச் சிறப்புப் பெற்றவர் பலர்.

நடைமுறைப் பயிற்சித் திட்டத்தை ஆராயுமுன் சினத்தைப் பற்றியே ஓர் ஆராய்ச்சி நடத்தியாக வேண்டும்.

**சி**னம் என்றால் என்ன? அது எழும் காரணம் என்ன?

கோபத்தை ஒழித்துவிட வேண்டுமெனில்... முதலில் 'கோபம் என்பது என்ன?' என்று அறிய வேண்டும். பிறகு அதன் தோற்றுவாயைத் தெரிந்துகொள்ள வேண்டும்! அதன் பின்னரே அதை ஒழிக்க முயலவேண்டும்.

"எனக்குக் கோபம் வருகிறது", என்று சொல்லுகிறோம்.

நாம் வேறு, கோபம் வேறா? நாமே கோபமாக மாறுகிறோம்; தன் நிலையில் தானே மாறுதல் அடைகிறோம் என்பது தான் பொருள்?!

ஆசையைப் பற்றி ஆராய்ந்தோமல்லவா? அந்த ஆராய்ச்சியில் 'நானேதான் ஆசையாக மாறுகிறேன்' என்றும் கண்டோமல்லவா? அந்த ஆசையேதான் சினம் ஆகிறது என்றால், நானேதான் சினமாகிறேன் என்று முடியுந்தானே?

எனவே, கோபம் வேறு நான் வேறு என்று இரண்டில்லை.

நான், அசல் நானாகவே இருக்கும் போது அங்கே கோபமில்லை.

நான் கோபமாக இருக்கும்போது அங்கே நானில்லை!

உயிரின் எழுச்சி நிலைதான் ஆசை. அந்த ஆசைக்குத் தடை வரும்போது, அந்தத் தடையை வென்றுவிட வேண்டுமென்ற வேகம் உயிருக்குப் பிறக்கிறது.

ஆசையின் அளவு எழுந்த உயிரின் எழுச்சியானது, தடையின் அளவு தேங்கி வழிந்து, தடைக்கு மேலும் எழும்போது, அந்த அளவில் உயிரின் எழுச்சிதான் சினமாகத் தெரிகிறது.

அப்படி எழுந்த உயிரே சினம். உயிர்தான் சினம். அதாவது நான்தான் உயிராகையால் நான்தான் சினம்!

இதை, இன்னும் தெளிவாகப் பார்ப்போமா?

(அடுத்த வாரம்)



இன்னும் தெளிவாகச் சொன்னால் சினந்தோங்கி எழுந்து உயிராற்றல் செலவாகும் போது, செலவாகிய உயிரைச் சின மெனப் பெயரிட்டழைக்கிறோம்.

'மரத்தால் செய்யப்பட்ட பொம்மையை வைத்துக் கொண்டு மரத்தை நோக்கினால் பொம்மை இல்லை! பொம்மையின் வடிவத்தை நோக்கினால் மரம் இல்லை! மரம், பொம்மை இரண்டையும் நோக்கி னால் மரப்பொம்மை என்றாகிறது. இதுபோலவே, கோபமாக இருக்கும் போது அறிவென்பது ஆராய்ச்சி நிலையில், விழிப்பு நிலையில் இல்லை. அறிவால் ஆராயப் புகுந் தால் கோபம் என்பதில்லை. கூர்ந்து நோக்கினால்; 'நானேதான் கோப மாக இருக்கின்றது என்பது புலனா கிறது.

காலத்தோடு அலுவலகம் சென்றாக வேண்டும். அதற்கு 9 மணி ரயிலைப் பிடித்தாக வேண்டும். 8.30 மணிக்கெல்லாம் சாப்பாட்டில் உட்கார்ந்தாக வேண்டும். இது தேவையை ஒட்டி தேவையின் நிர்ப் பந்தத்தால் எழும் ஆசை.

ஆனால் 8.15 மணி வரை உலையில் அரிசி ஏறவில்லை.

அவருக்கு மனைவியின் மேல் கோபம் வருகிறது!

மகன் படித்துத் தேர்வுபெற வேண்டும் என்பது இன்னொருவர் ஆசை. ஆனால் அவன் ஊர் சுற்று கிறான். இவருக்குக் கோபம் வரு கிறது.

பரிசுச்சீட்டில் தனக்கே ஒரு லட்சம் கிடைக்கவேண்டும் என்பது மற்றொருவருடைய ஆசை. ஆனால் ஒரு எண் பிசகிவிட்டது. யார்மேல் எதன்மேல் என்று தெரியாமலேயே அவருக்குக் கோபம் வருகிறது. பாவம்! செய்தித்தாளைப் பிடித்துக் கிழிக்கிறார்.

அவ்வளவு வேண்டாம். ஓர் எறும்பை எடுத்துக் கொள்வோம். அது இழுத்துச் செல்லும் அரிசி யைப் பறித்துவிட்டால் அது எப்படி ஆட்டம் போடுகிறது பாருங்கள், கோபந்தானே அந்த ஆட்டத்திற்குக் காரணம்!

இப்படி தடைப்பட்ட ஆசை சினமாக மேலெழும்பும்போது அத் தடையை உடைத்துவிட, அழித்து விட வேண்டித்தானே வரும்?

தடையாக எது வருகிறது? மனைவி, மக்கள் அல்லது சமுதாயத்தில் யாராவது ஓர் ஆள்; இவர்களில் எவருக்கேனும் துன்பம் விளைவிக்காமல் அந்தச் சினம் தீராது.

அப்படிப்பட்ட சினம் நமக்கு வேண்டுமா? அது உயர்வாகுமா?

மனிதனிடத்தில் எவ்வளவோ தீய குணங்கள் இருக்கலாம். அவை எல்லாவற்றையும்விடக் கோபம் கொடியது.

கோபத்தால் வரும் கெடுதல் பலவற்றைப் பட்டியல் போட்டுத்

கோபம் கொடியது!

26

வாழ்க்கைக்கு உதவும் உன்னதத் தொடர்

தருகின்றார் அம்பல வாணக் கவி ராயர், தமது சதுரகிரி அறப்பளீசுரச் சதகத்தில்,

''கோபமே பாவங்களுக்
கெல்லாம் தாய் தந்தை
கோபமே குடி கெடுக்கும்,
கோபமே ஒன்றையும் கூடிவர
ஒட்டாது
கோபமே துயர் கொடுக்கும்
கோபமே பொல்லாது
கோபமே சீர்கேடு
கோபமே உறவறுக்கும்
கோபமே பழிசெய்யும்
கோபமே
பகையாளி கோபமே
கருணைபோக்கும்
கோபமே ஈனமாம் கோபமே
எவரையும் கூடாமல்
ஒருவனாக்கும்
கோபமே மறலிமுன்
கொண்டுபோய்த் தீய
நரகக்குழியினிற்றள்ளும்....''

கோபம் மரணத்தையும் விளைவிக்கும் என்கிறாரே! எப்படி?

வேதாத்திரி மகரிஷி

உணர்ச்சி நிலையில் மனம் நிற்கும்போது அறிவின் இயக்க வேகம் வினாடிக்கு 14 சுற்றுக்கு மேல் செல்கிறது.

கோபத்தில் 25 சுற்று, 30 சுற்று என்று உயருகிறது.

சுழற்சி வேகம் அதிகரிக்க அதிகரிக்க உயிருக்குச் செலவு தானே? செலவு அதிகந்தானே?

இன்னும் சுழற்சி வேகம் அதிகரித்து வினாடிக்கு 40 சுற்று என்ற அளவினை நெருங்கினால், உயிராற்றலின் வெளியேற்ற அளவையும் வெளியேற்ற வேகத்தையும் உடலால் தாங்க முடியாமல் போகும். உயிரின் அபரிமிதமான வெளியேற்றத்தினால் உடலை நடத்த வேண்டிய அளவுக்கும் குறைவாக உயிர் ஆற்றலின் அளவும் செறிவும் குறைந்துபோகவே, மரணம் சம்பவிக்கிறது.

இந்த உடனடி மரணத்தைக் கோபத்தில் யாரும் அடைந்து விடுவதில்லைதான்.

ஆனால் அடிக்கடி கோபப்பட்டு, அதிகமாகக் கோபப்பட்டு வந்தால் அறிவின் இயக்கவேகம் அதிகரித்து அதிகரித்து உயிராற்றல் செலவாகிச் செலவாகிப் பலவீனமடைந்து நீண்ட நாள் இருக்க வேண்டியவர்கள் சொற்ப நாளில் போய்விட வேண்டித்தான் வரும்.

அப்படிப்பட்ட கோபம் நமக்கு வேண்டுமா என்ன?

சிந்தியுங்களேன்!

(அடுத்த வாரம்)

## நவீன கடோத்கஜன்!

ஜப்பானின் சுமோ மல்யுத்தக் கலையில் தனி முத்திரை பதித்து அதில் மிக உயர்ந்த 'யோகோஸீனா' தகுதியையும் பெற்றவர் அகிபோனோ. அமெரிக்காவில் பிறந்த இவரின் உயரம் 2.04 மீட்டர். எடை 235 கிலோ! 1990களில் சுமோ மல்யுத்தப் போட்டிகளில் இவர் வெல்லாத சாம்பியன்ஷிப்புகள் கிடையாது! 2001-ல் ஓய்வு பெற்றபோது இவர் வென்றவை 11 சாம்பியன் பட்டங்கள்!

சுமோ மல்யுத்தப் பயிற்சியளிக்கும் 53 நிலையங்களில் 105 மாஸ்டர்கள் உண்டு. அந்த மாஸ்டர் பதவியைப் பெற 2 மில்லியன் டாலர் செலவாகுமாம்! அகிபோனோ போன்ற மிகப்பெரும் வல்லுநர்களை சில கம்பெனிகளே தங்கள் செலவில் ஸ்பான்சர் செய்யும். ஆனால் இவரை ஆதரிக்க எந்த முன்னணிக் கம்பெனிகளும் முன்வராததால் கிக் பாக்சிங் போட்டிகளில் கலந்துகொண்டு பொருள் ஈட்டுவது என்ற முடிவுக்கு வந்திருக்கிறார்! இந்த நவீன கடோத்கஜன் எம்பி எம்பி எட்டிக் காலால் உதைத்துச் சண்டை போடும் கிக் பாக்சிங் சண்டையை நினைத்தாலே தமாஷாய் இல்லை?!

-யாளி



பன் மேடையில் பேசுவது போன்ற காட்சி பழனி மலையடிவாரம் அருகே மேடைபோட்டு படமாக்கினார்களாம். அவரது கனல் பேச்சினால் அடுத்த நிமிடம் அடிதடி தொடங்குமாம். அதன்படி படத்துக்காக துணை நடிகர் நடிகைகள் அடிதடி போட அதை நிஜம் என்று கருதிய பொது மக்களும் கூட்டத்தில் புகுந்து ரகளை செய்ய, மேடை சரிந்து பார்த்திபன் தப்பியது பெரிய செயலாம்.

● கர்ப்பிணியான ஏழை உமா தர்ம ஆஸ்பத்திரியில் குழந்தை பெறுவது போல் காட்சி. ஆஸ்பத்திரியில் கரப்பான் பூச்சி, எலிகள் நடமாடுவது போல் இருப்பதற்காக, பழனி சுற்று வட்டாரத்தில் இருந்து 12 எலிகளையும், 40 கரப்பான் பூச்சிகளையும் பிடித்து வந்து உமாவின் பிரசவ அறையில் ஓடவிட்டு படமாக்கினார்களாம்.

● படத்தில் உமா வளர்ப்பது போல் வரும் ஒரு நாய்க் குட்டிக்காக 500 ரூபாய் கொடுத்து ஒரு நாய்க் குட்டியை வாங்கினார்களாம். தினசரி தீனி செலவு 100 ரூபாயாம். மூன்று நாட்கள் உமாவுடன் வாலை ஆட்டியபடி படத்தில் நடித்த அந்த நாய் குட்டி



நான்காவது நாள் செத்துவிட, படப்பிடிப்புக் குழுவே சோகத்தில் மூழ்கியது. உமா அழுதே விட்டாராம். நாய் குட்டி இல்லாததால் ஒரு நாள் படப்பிடிப்பு நின்று போனதாம்.

த. பழனிக்குமார்,

படங்கள்: 'தென்றல்' படத்திலிருந்து

சினமுடையோருக்குத் தவம் கிட்டாது

மனம் ஒடுங்கி நிற்கும் விதமாக நாம் குண்டலினி யோக மாகிய மனவளக்கலையை இயற்றி வருகிறோம். இந்தக் கோபமோ மனத்தின் அடித்தளமான உயிராற்றலுக்கு விரைந்து செலவாகும் வேகத்தைக் கொடுத்து விடுகிறது. எனவே, கோபம் கொள்ளும் மனத்தினால் ஒடுங்கி நின்று தவமியற்ற இயலவே இயலாது. முக்கியமாக மனம் தன் சுயநிலையாகிய சுத்த வெளியை, தெய்வ நிலையை எட்டவே எட்டாது.

அதேபோல மனம் ஒடுங்கி நின்று தவமியற்றிப் பழகிய பின்னர் தான் இந்தச் சினத்தை வெல்லும் திறன் மனத்திற்குக் கிட்டும். அதனால்தான் அறுகுணச் சீரமைப்பையும் துரியாதீதத்தையும் நாம் ஒன்றாக இணைத்து வைத்திருக்கிறோம். இறைநிலையோடு கலந்து பழகித் தவமியற்ற தவமியற்றத்தான் சட்டென்று விரிந்து சினமாக மாறாத தகைமை மனத்திற்குக் கிடைக்கும்.

கோபம் சிறு குழந்தைக்குக்கூட வருகின்றது. கரு அமைப்பால் உருவ அமைப்பு தொடர்ந்து வருவதுபோல், அறிவும் வருகிறது. அந்த அறிவானது நிலைமாறி அடையும் குணங்களும்கூட அதே கருவமைப்பால் தொடர்ந்து வந்து கொண்டிருக்கின்றன எனத் தெரிகிறது.

யூகத்தால் இன்னும் முன்சென்று ஆராய்ந்து பார்த்தால் மனிதனுக்கு முன் நிலையில் உள்ள விலங்குகளிடமும் பிராணிகளிடமும் கூடக் கோபம் என்னும் குணம் உண்டு என்பதை அறியமுடியும்.

மிருகங்கள், பிராணிகளில் பெரும்பாலனவை ஒன்றையொன்று உயிருடன் பிடித்துக்கொன்று ஆகாரமாகக் கொள்ளுகின்றன. அப்போது பிடிபட்ட ஜீவனானது தான் அடையும் துன்பத்திலிருந்து விடுபட முயல்கின்றது. அதனை உணவாகக் கொள்கின்ற ஜீவன் முன்னதை விடாது துன்புறுத்துகின்றது. இவ்விதம் ஆரம்பித்த சண்டையிலிருந்தே கோபம் என்ற உடல் வலிமையும் உள்ளத்தின் வேகமும் இணைந்து செயல்படும் ஒரு நிலை தோன்றியது. இந்தக் கோபம் சமய சந்தர்ப்பங்களால் கூடியும், குறைந்தும் கருவின் தொடர்பால் மனிதரிடத்தில் தொடர்ந்து இருந்துகொண்டே இருக்கிறது.

சினம் கொள்ளல் தற்கொலைக்கு ஒப்பாகும் என்றால் மிகையன்று. சினம் கொள்ளல் ஒரு பழக்கமாகவே கூட மாறிப்போகும். முதலில் ஒரு காரணத்தை வைத்துக்கொண்டு சினம் வந்தாலும் பிறகு பழக்கத்தின் விளைவாகக் காரணம் இல்லாமலேகூடச் சினம் வரும். சினம் தணிந்த பின் சினத்தின் விளைவை எண்ணி வருந்தினாலும் பிறகு அந்தச் சினம் வரும்போது அதனின்றும் தப்ப முடியாது.

எனவே, பிறர்மீது கொள்ளும் கோபமும், தன்மீதே எழும் கோபமாகிய கவலையும் ஒருவரிடம் காணப்படுமானால் அவர் ஆன்மீகத்தின் பக்கம் அடியெடுத்து வைக்கவே முடியாது.

# கோபம் ஒரு தற்கொலை!

27



வேதாத்திரி மகரிஷி

## வாழ்க வளமுடன்

வாழ்க்கைக்கு உதவும் உன்னதத் தொடர்

சினம் வரும்போது முகம் விகாரமாகிறது.

எவ்வளவுதான் அழகனாயினும் அழகியேயாயினும் சரி, சினம் வரும்போது அவர்கள் முகம் கோணலாகிப் பார்க்கச் சகிக்காததாகி விடுகிறது.

எல்லோர் முகமும் அப்படித்தான்.

நமக்குக் கோபம் வரும்போது முகம் எப்படி இருக்கும் என்று ஒரு கண்ணாடியை எடுத்து வைத்துப் பார்த்துக் கொண்டிருக்க நம்மால் முடியாது.

பிறர்க்குக் கோபம் வரும் போது நாம் காண்கிறோமல்லவா?

அப்போது முக அழகு கெடுவது மட்டுமன்று, உடல் நடுங்கும், கண்கள் சிவக்கும், நா குழறும், மனம் தடுமாறும், இன்னது செய்கிறோம் இன்னது பேசுகிறோம் என்று தெரியாது.

சினம் தணிந்த பிறகும் கூட முன் நடந்ததை எண்ணிப்பார்க்க வராது. அந்தக் காட்சியை அப்படியே திரைப்படமாகப் பிடித்து வைத்துப் பிறகு காட்டினால் வெட்கப்படும்படியாக இருக்கும்.

அதுமட்டுமா?

சினம்... ஆமாம்! உடலையும் கெடுத்து நோயை உண்டு பண்ணும்.

சினமானது பிறரை எவ்வாறு துன்புறுத்துகின்றதென முதலில் பார்ப்போம்.

சொந்த மகன், மகள், வாழ்க்கைத் துணை என்று வைத்துக்கொள்வோம், சினம் எழும்போது அவர்கள் மனம் என்னபாடுபடுகின்றது என்பதை நாம் உணர வேண்டும்.

பிறர் நம் மீது சினம் கொள்ளும்போது நம் மனம் எவ்வாறு நோகின்றது, வருந்துகிறது என்பதை எண்ணிப் பார்க்கவேண்டும்.

அதுபோன்றுதானே பிறர்மேல் நாம் கொள்ளும் சினம் அவர்களுக்கு வருத்தத்தை அளிக்கும் என்று கண்டுகொண்டால், நம்மோடு ஒத்த உறவினர் நமக்கு நலம் செய்பவர்களை இப்படி வருந்தவிடுவது நல்லதல்ல என்று தெளிவாகும்.

எனவே அதைத் தவிர்க்கத்தான் வேண்டும். அதுமாத்திரமல்ல, ஒருவர் மீது சினம் கொண்டால் அது ஒரு அவமதிப்பும் கூட! ஒருவர் மீது சினம் கொள்ளும்போது அவர்கள் படும் வருத்தம் ஒரு சாபமாகவே மாறுகிது. இவற்றையெல்லாம் எண்ணிப்பார்க்கும் போது பிறரைச் சினம் எவ்வாறு பாதிக்கிறது என்பது உங்களுக்கு நன்றாக தெரியவரும்.

அடுத்து, சினம் நம்மை எவ்வாறு பாதிக்கிறது என்று பார்ப்போமா?

சினம் எழும்போது என்னென்ன மாறுதல்கள் உடலிலும், உள்ளத்திலும் உண்டாகின்றன என்பதையும் கவனிக்க வேண்டும்.

சினத்தால் உடலிலே உள்ள உயிர்சக்தி விரைவு கொள்கிறது. குருதி அழுத்தம் ஏற்பட்டு இரத்தவேகம் அதிகரிக்கிறது; கண்கள் சிவக்கின்றன. நரம்புகளில் படபடப்பு ஏற்பட்டு அவை பலவீனமடை


குங்குமம்
TVS MOTOR COMPANY
இணைந்து வழங்கும்
வாரம் ஒருவருக்கு ஒரு பைக்!

அறிவுத்திறன் போட்டி 79ல் வெற்றிபெற்றவர்
எஸ். ஷேக் அன்வர் அலி
செங்கோட்டை
வாழ்த்துக்கள்!

கின்றன.

இவ்வாறு பலவிதமான குறிகளைப் பார்க்கின்றோம்.

இதன் விளைவாக உடலிலே பல தொடர் நோய்கள் உண்டாகின்றன.

கண்நோய், நாக்குப்புண், வயிற்றுப் புண், மூலம், மலச்சிக்கல் போன்ற பல வாறான நோய்கள் உருவாகச் சினம் ஏதுவாகின்றது.

ஏனெனில் சினம் எழும்போது நமது ஜீவகாந்தசக்தியானது அதிகமாக வெளியேற்றப்படுகிறது.

ஜீவகாந்த சக்தி அதிகமாக வெளியேற்றப்பட்டால் அது உடலையும் தாக்கும், மனதையும் கெடுக்கும்.

சினம் உடலை ஒருமுறைதான் கெடுக்கும் என்பதல்ல.

ஒரு தடவை கோபம் கொண்டால், அது பதிவாகிவிடும் காரணத்தால் மீண்டும் அந்த அளவுக்குச் சூழ்நிலை இல்லை என்றாலும் ஒரு சிறிய குற்றத்திற்குக்கூட அதே அளவு சினம் எழலாம்; அதை விட வேகமாகவே சினம் எழலாம்.

இவ்வாறு அடிக்கடி சினம் எழுந்தால் உடலும் உள்ளமும் என்னவாகும்?

நலம் கெட்டுவிடும் அல்லவா? இதுவா நாம் வேண்டுவது?

நாம் மகிழ்ச்சியாக வாழ விரும்புகிறோம். அதற்கேற்றவாறு நடந்து கொள்ளவேண்டுமல்லவா?

எனவே தனக்கும் பிறர்க்கும் தீமை தருகின்ற இந்தச் சினத்தை ஒழிக்கத்தான் வேண்டுமென்று முடிவுகட்ட வேண்டும்.

முதலில் அந்த முடிவைப் பலமுறை எண்ணி எண்ணி அழுத்தமாக மனதிலே பதிவு செய்துகொள்ள வேண்டும்.

(தொடரும்)




# குங்குமம்

19-12-2003
சிமிழ் - 26
பொட்டு -52

குங்குமம்
பப்ளிகேஷன்ஸ் (பி)
லிமிடெட்டிற்காக

கலையகம் அச்சகத்தில்
அச்சிட்டு வெளியிடுபவர்
**எஸ்.செல்வம்**

ஆசிரியர்
**பராசக்தி**

பொறுப்பாசிரியர்
**சாருப்ரபா சுந்தர்**

182, கோடம்பாக்கம்
நெடுஞ்சாலை,
சென்னை- 600 034.

தொலைபேசி: 28179191,
தொலைநகல்: 28179292


கதைகளில் வரும்
பெயர்களும்
நிகழ்ச்சிகளும்
கற்பனையே

இப்போது ஒரு கேள்வி கேட்கலாம்.

"ஒருவர் ஒரு பெரிய கொடுமையைச் செய்கிறார். அவருக்கு எதிராகக்கூடச் சினம் கொள்ளக் கூடாதா?'' என்று நீங்கள் கேட்கலாம்.

சினத்தினால் எங்கும் எப்போதும் ஒரு நன்மையும் வந்ததாக இதுவரை வரலாறு இல்லை.

தீயவர்களையும் கொடியவர்களையும் கூட மன்னித்தல்தான் சிறந்தது.

அதில்லாமல், பதிலுக்குப் பதில் அல்லது பழிக்குப்பழி என்று இறங்கினால் அதற்கு முடிவு எங்கே?

நமக்கு ஒருவர் கெடுதல் செய்தாலும் நாம் நம்வயம் இழக்கலாமா? நம் வயம் இழந்தால் தானே சினம் வரும்?

நாம் நாமாகவே இருந்தால் அதுவே அவருக்கு ஒரு பாடமாகி மீண்டும் இத்தகைய தீங்கு செய்யாதிருக்க ஒரு நல்வாய்ப் பாகுமே?!

இன்னும் ஒரு படி மேலே சென்று 'தீங்கு செய்தவருக்கும் நன்மை செய்துவிடவேண்டும்' என்றும் நமது பெரியோர்கள் கூறியிருக்கிறார்கள்! அவ்வாறு செய்தால் சினத்திற்கு அங்கே இடமே இல்லை.

அப்படி நமக்குத் துன்பம் செய்தால் மேலும் சினம் கொள்ளாததோடு அவருக்கு நன்மையும் செய்யவில்லை என்றால் அருள் துறையில் இருந்து என்ன பயன்?

சினம் ஒழிந்த இடத்தில்தான் இந்தப் பெருந்தன்மை வரும்!

"நான் எவ்வளவோ பொறுமையாகத்தான் இருந்தேன். எனக்குச் சினம் வரும்படியாகச் செய்துவிட்டார்கள்'' என்று சொல்லித் தப்பிக்க முயல வழியில்லை.

பொறுமைக்கு எல்லை உண்டு என்பது சுத்தத் தவறு. பொறுமைக்கு எல்லை வரையறை செய்தால் அதுதான் வஞ்சம். ஏன், பொறுமை கடலினும் பெரிது எனும் கருத்து கூடத் தவறுதான். பொறுமையை எந்த அளவுக்கும் உள்ளடக்க முடியாது. எல்லை என்பதே இல்லா இறைநிலையைப் போலவே, எல்லை என்பதே இல்லாதது பொறுமை.

வாழ்க வளமுடன்!

வேதாத்திரி மகரிஷி

'நீத்தார் பெருமை' என்ற அதிகாரத்தில் வள்ளுவர் எழுதியிருக்கிறார்: நற்குணங்களின் உச்சத்தை அடைந்தவர்களுக்கு வரும் கோபத்தை, அக்கோபத்திற்குப் பாத்திரமாகின்றவர்களால் ஒரு கணம்கூடத் தடுக்க முடியாது, தாங்க முடியாது என்று பொருள் கூறுவார்கள்.

ஒரு கணமானாலும் ஒருவருக்கு வெகுளி வருமானால் அவர் குண




மென்னும் குன்றேறவில்லை என்றுதான் சொல்ல வேண்டும்.

எனவே இக்குறளுக்குப் பொருள் வேறு விதமாகக் கொள்ள வேண்டும்.

குணமென்னும் குன்றேறி விட்டார்களென்றால் அவர்களால் வெகுளியை ஒரு கணம் கூடக் காக்க முடியாது, கைக்கொள்ள மாட்டார்கள்; ஒரு கணம் கூட அவர்கள் கோபமாக மாற்றம் பெறமாட்டார்கள் என்ற பொருளில்தான் வள்ளுவர் அந்தக் குறளை எழுதியிருக்க வேண்டும்.

அதேபோல பொறுமையால் கை கூடிவரும் நன்மைகள் பற்றிக் கூறிக் கொண்டே போகலாம்.

சினத்தால் வரும் கேட்டினைப் பற்றியும் கூறிக் கொண்டே போகலாம்.

ஒருவனுக்குச் சினம் வந்தது என்று வைத்துக் கொள்வோம். அது அவனுக்குச் செய்யும் தீமையைத்தான் இது வரை ஆராய்ந்தோம்.

அவன் சினத்தினால் பிறருக்குச் செய்துவிடக் கூடிய தீங்குகள், துன்பங் களைப்பற்றி எவ்வளவு

கூறினாலும் அடங்குமா?

விலங்குகளுக்குச் சினம் வந்தால் அவை பல்லையும் நகத்தையும் மட்டுமே பயன் படுத்தும். மனிதனுக்குச் சினம் வந்தால் கால்கள் மட்டும் அன்றி அறிவாலும் செயல்படுவான்.

அது மட்டுமா?

அறிவினால் படைத்துள்ள அணுகுண்டு உட்பட பல வகை ஆயுதங்களையும் உபயோகிப்பான்.

ஒரு குடும்பத் தலைவனுக்கு அடிக்கடி சினம் வருகிறதென்று வைத்துக்கொள்வோம்.

அதனால் என்னென்ன விளைவுகள் ஏற்படும்?

அவனது மனைவி மக்கள் மனநிலைகள் அதனால் பாதிக்கப்படும். அவர்கள் சோகம் கப்பிய முகத்தினராவார்கள். அவர்களது மன வலிமை குன்றிப் போகும். தோல்வி மனப்பான்மை அவர்களிடத்தில் தோன்றும். அவர்கள், மறைவாகத் தீங்கு செய்யும் குணமுடையவர் ஆவார்கள். அவர்களும் சிடுமூஞ்சிகளானாலும் ஆவார்கள். எளிதில் சினம் வயப்படும் பலவீனத்தையும் அவர்கள் பெற்று விடுவார்கள்.

விஷயம் அத்தோடு போகுமா? போகாது!

சினம் ஒரு சங்கிலி போன்றது. தொற்றுநோய் போன்றதென்றும் சொல்லலாம்.

ஒரு அதிகாரியின் வீட்டுக் குழந்தை அதன் தாயாருக்குத் தன் பிடிவாதப் போக்கினால் கோபமூட்டுகிறது என்று வைத்துக் கொள்வோம்.

அதன் விளைவினால் அந்த அம்மாள் தன் கணவனிடம் எரிந்து விழுகிறாள். அந்த அதிகாரி இந்தக் கோபத்துடன் தன் அலுவலகத்திற்குச் சென்று தன் பணியாளரிடம் சிடுசிடுவெனப் பேசுகிறார்.

மனம் புண்பட்ட பணியாளர் வீட்டுக்குப் போய்த் தன் மனைவியிடம் காரணமில்லாமல் கோபித்துக்கொள்கிறார்.

அந்த அம்மாள் உள்ளக் குமுறலுடன் இருக்கும் சமயம் அவள் குழந்தை வந்து ஏதோ கொடுக்கும்படி அவளை நச்சரிக்கிறது. பலன்? அவள் ஆத்திரம் தீர அந்தக் குழந்தையை அடித்துவிடுகிறாள்.

இப்படிச் சினமானது சங்கிலித்தொடர் போலச் சென்று பலருக்கும் துன்பத்தை விளைவிக்கும்.

"எந்தச் சந்தர்ப்பத்திலும் சினம் நன்மை

**தக்காளி, காபேஜ், லெட்டூஸ், காலிபிளவர் முதலியவைகளுக்குள்ளே சிறு சிறு பூச்சிகள் இருக்கும். ஆகையால் அவைகளை உப்புக் கலந்த தண்ணீருக்குள்ளே கொஞ்ச நேரம் மூழ்கி இருக்கச் செய்து விட்டுப் பிறகு பயன்படுத்தலாம்.**

**தூங்கும்போது பயங்கரக் கனவுகள் காணுகிறீர்களா? தலையணைக்கு அடியில் சிறிது படிகாரத்தை வைத்துக்கொண்டு தூங்குங்கள். திகில் கனவுகள் வராது.**

-ஆர். மீனாட்சி

விளைவிக்காது என்றால் அடம் பிடிக்கும் குழந்தையையும் நல்லவர்களை ஏமாற்றும் கபட மனம் படைத்த வேலையாளையும் எப்படித் திருத்துவது? கோபத்தைக் காட்டினால்தானே அவர்கள் ஒழுங்குக்கு வருகிறார்கள்?"- என்ற கேள்விகள் எழலாம்.

சினத்தைப் பயன்படுத்தா விட்டால் நற்பயன் விளையவே விளையாது என்று காணும் இடத்தில் சினம் தேவைதான்.

ஆனால் இந்தச் சினமானது யார்மீது செலுத்தப்படுகிறதோ, அவர்களுக்கு மட்டும்தான் அது சினமாகத் தோன்றவேண்டும்.



## கனவு காண்கிறீர்களா?

மற்றபடி அது நமக்குச் சினமாகவே இருக்கக்கூடாது.

சினம் உதட்டில் இருக்கலாம், உள்ளத்தில் இருக்கக் கூடாது!

சினம் வந்ததுபோல் வேண்டிய அளவு நடிக்கலாம். ஆவேசத்தை வேண்டுமானாலும் காட்டலாம். ஆனால் அது போலியாக இருக்க வேண்டும்.

மனம் மட்டும் நீர்த்தளம் போல் சமமாகச் சலனமற்று இருக்கட்டும்.

அது எப்படிச் சாத்தியம் என்றால்... சினிமாவில் பார்க்கிறோமே, வில்லனுக்குக் கதாநாயகன் மேல் என்ன கோபம் வருகிறது? அது உண்மையான கோபமா? உண்மையானது என்றால், கதாநாயகன் அல்லவா இறந்து போவான்?

நம்மால் நடிக்க இயலாமல் இருக்கலாம். ஆனால் உண்மைச் சினத்தின் அபாயத்திலிருந்து தப்ப, நடிக்கக் கற்றுக்கொண்டு தான் ஆகவேண்டும்.

சினம் கொடியது என்பதை அறியாதவர் யாரும் இருக்க முடியாது. இருந்தாலும் சினத்தை விட்டொழிக்க அவர்களால் முடியவில்லை.

இதற்கான காரணங்களில் முக்கியமானவை இரண்டு.

1. சினத்தை ஒழிக்க நடைமுறைத் திட்டம் ஒன்றை இதுவரை யாரும் வகுத்ததில்லை. 2. பரம்பரைப் பழக்கமாகப் பல்லாயிரக் கணக்கான ஆண்டுகளாக மனித குலத்திடையே இருந்து வரும் இந்தக் கொடிய குணத்தை ஒழிக்கத் தேவைப்படும் அதிகமான பலத்தை மனத்திற்கு அளிக்கக்கூடிய பயிற்சி இல்லாமை.

அதற்கென தனி பயிற்சி உள்ளதா என்ன?

(அடுத்த வாரம்)

மனவளக்கலை என்கிற எளிய முறைக் குண்டலினி யோகத்தின் மூலம் தான் மனத்திற்கு ஆற்றலைக் கூட்ட முடியும்.

முறையோடு பயின்றால் சினத்தை வென்றுவிடக் கூடிய பலம் அதனால் மனத்துக்குக் கிடைக்கும். எவ்வளவு ஊறிப் போன பழக்கமானாலும் எதிர்த்து வெல்லலாம். வேண்டியன வெல்லலாம்.

தேவை: இந்தச் சினத்தை ஒழித் தாக வேண்டுமென்ற திட சித்தமும், தனக்குத்தானே காவலாகும் விழிப்பு நிலையும்தான்.

நடைமுறைப் பயிற்சித் திட்டத்தை இனிப் பார்க்கலாம்.

# வாழ்க வளமுடன்!

## இது ஒரு வித்தியாசமான முயற்சி!

29



வேதாத்திரி மகரிஷி

ஓய்வான ஒரு நாளில் அமைதியான ஒரு நேரத்தைத் தேர்ந்து எடுத்துக்கொண்டு அதில் ஒரு கால்மணி நேரம் தவமியற்ற வேண்டும்.

நல்ல துரியத்தில் இருந்து யார் யார்மேல் சினம் வருகிறதென்று ஒரு பட்டியல் தயாரிக்க வேண்டும்.

யார்மேல் அடிக்கடியும் அதிகமாக வும் கோபம் வருகிறதோ அவர் பெயரை முதலில் எழுதிக்கொள்ள வேண்டும். அதற்கு அடுத்தபடி யார் யார் மேல் அதிகமாகக் கோபம் வருகிறதோ அவர்கள் பெயரை முறையாக இரண்டாவதாக, மூன்றாவ தாக எழுதிக் கோபத்தின் அளவு வாரியாகப் பட்டியலைப் போட்டுக் கொள்ள வேண்டும்.

பட்டியலில் முதல் பெயர் யாருக் குமே அவர்களுடைய வாழ்க்கைத் துணையாகத்தான் இருக்கும்.

அதாவது ஆணுக்கு மனைவியாக வும் பெண்ணுக்குக் கணவனாகவும் தான் இருக்கும். அடுத்தடுத்த பெயர் கள் முறையே பிள்ளைகள், பெற்றோர், அலுவலகத்தில் மேலாளர் அல்லது பணியாளர், பால்காரர், பஸ் கண் டக்டர் என்று இப்படி இருக்கும். யாருக்கும் ஒரு பத்து அல்லது பதினைந்து பேருக்குமேல் பட்டியல் நீளாது.

இப்போது முதல் நபரை எடுத் துக்கொள்வோம். அது மனைவி என்றே வைத்துக்கொள்வோம். மனைவியிடம் கோபம் வருவதற்கு யார் காரணம்? "அவர்களுடைய பேச்சு அல்லது செயல் மட்டும் தானா காரணம்?'' இதில் "என் பொறுப்பு, என் தவறு எந்த அளவு? நான் ஏன் என் பங்குத் தவறைச் செய்யாதிருக்கக் கூடாது?'' என்று ஆராய வேண்டும்.

ஓர் உதாரணம்: 8-30 மணிக்கு நீங்கள் அரிசி வாங்கி வந்து கொடுத்தீர்களானால் உங்கள் மனைவி எப்படி 9 மணிக்கு உங் களை அலுவலகம் அனுப்பி வைப்பார்?

பையன் படிக்காமல் ஊர் சுற்றுகிறானென்றால் அவனென்ன பிறக்கும்போதே ஊர் சுற்றிக் கொண்டுதான் பிறந்தானா?

அவன் வீடு தங்கிப்படிக்க நாம் இதுவரை எடுத்துக்கொண்ட முயற்சி என்ன?

நல்ல பழக்கங்கள் அவனிடத் தில் உருவாக நாம் முன்னுதாரண மாக இருந்திருக்கிறோமா?

நாம் அலுவலகத்தில் இருந்து நேரே வீடு வந்து சேருகிறோமா? வந்து அவனது அன்றன்றைய நடவடிக்கையை விசாரித்தோமா? அவனது படிப்பைக் கண்காணித் தோமா?

இப்படி ஆராய்ந்து பார்த்தால் அவன் படிக்காமல் ஊர் சுற்றுவதற்குப் பெரும்பாலும் நாமேதான் காரணம் என்று வந்தாலும் வரும்.

இன்னொரு ஆராய்ச்சியும் செய் தாக வேண்டும். அவர்களிடம் உள்ள குறைகளுக்கு முழுக்க முழுக்க அவர் களேதான் காரணம் என்றாலும்கூட, அந்தக் குறைதான் நம் சினத்திற்கும் காரணம் என்றாலும்கூட, சினத்தினால் அவர்களை இதுவரை எவ்வளவு திருத்தியிருக்கிறோம் என்று பார்த்தால் ஓர் அங்குலம்கூட இருக்காது.

அல்லது ஒருவேளை அவர்கள் நமக்குப் பயந்து கொண்டிருக்கலாம். ஆனால் திருந்தி இருக்க மாட்டார்கள்.

''நானும் முதலில் கோபம் கொண்டதில்லை. தவறு செய்யும் போது நல்ல விதமாக எடுத்துச் சொல்லியிருக்கிறேன். ஆனால் அந்த முறை சரிப்பட்டு வரவில்லையே! இனி கோபமும் கூடாதென்றால் அவர்களை எப்படித்தான் திருத்துவது?'' என்று ஒருவர் கேட்பதாக வைத்துக் கொள்வோம்.



அவருக்குச் சொல்வதெல்லாம் இதுதான்; சினத்தினால் திருத்தம் வரவே வராது.

''உயிலை மாத்தி எழுதணும்னு எங்கப்பா சொல்றார்..''

''ஏன் ?''

''பாதி சொத்தை அவரே கரைச்சிட்டாராம்!''

— பம்மல் நாகராஜன்.

சினத்தினால் ஏதாவது வரும் என்றால் அது வருத்தமாகத்தான் இருக்கும்.

மாறாக, அன்பாய் முறையோடு பல முறை கனிவாகக் கூறினோம் என்றால் அவர்கள் திருந்தவும் வழியிருக்கிறது.

முக்கியமாக அவர்கள் மனம் புண்படும்படியாகக் கூறக் கூடாது. தவறு செய்யப்பட்ட கையோடு புத்தி சொல்லக்கூடாது. குத்திக் காட்டுவது போல் அறிவுரை இருக்கக்கூடாது. ஏன், தவறைச் சுட்டிக்காட்டுவது போலவும் கூட இருக்கக்கூடாது.

''அப்படிச் செய்ததை இப்படிச் செய்திருந்தால் இன்னும் நன்றாக இருந்திருக்கும்; இனிமேல் இந்தக் காரியத்தை இந்த விதமாகவே செய்து நன்மை அனுபவிப்போம்,'' என்ற விதமாகத்தான் அறிவுரை இருக்க வேண்டும்.

கூடவே உங்கள் தவங்களில் அவர்கள் திருத்தத்திற்கான வாழ்த்தையும் சங்கற்பத்தையும் சேர்த்துக் கொள்ளுங்கள்.

இந்த முறையில் சிறிது கால நீடிப்பு ஏற்பட்டாலும் நிச்சயமாக வெற்றி கிடைக்கும். பலர் ஏற்கனவே இம்முறையால் வெற்றி கண்டாயிற்று. எனவே பிறரைத் திருத்துவது எப்படி என்பது இங்கு முக்கியமில்லை. நமது திருத்தந்தான் முக்கியம். இவ்வளவு காலமாக நம்மிடம் வாசம் செய்து விட்டு அனுபோக பாத்யதை கொண்டாடிக் கொண்டிருக்கும் இந்தச் சினத்தை எப்படி ஒழிக்கப் போகிறோம் என்பதுதான் முக்கியம். அதை எவ்வளவு சீக்கிரம் ஒழிக்கப் போகிறோம் என்பது தான் முக்கியம்.

ஒருவாரம் எடுத்துக்கொண்டு பட்டியலில் அந்த முதல் ஆளோடு மட்டும் நம் பயிற்சியை ஒருமுகப் படுத்திக்கொள்ள வேண்டும்.

''அவருக்கும் நமக்கும் என்ன உறவு? எத்தகைய உறவு? அவர் நமக்காக, நம் நலனுக்காக எவ்வளவு நல்லகாரியங்கள் செய்திருக்கிறார்?'' என்று எண்ணி எண்ணிப் பார்க்க வேண்டும்.

பலமுறை, பலநாட்கள் நமது மகிழ்ச்சிக்காக அவர் ஆற்றிய தொண்டினை உற்று நோக்கினால், இத்தகைய அன்பு உருவத்தின் மீது,

அன்புகொண்ட நண்பர்மீது, உறவினர்மீது நான் சினம் கொள்வது தகாது; எனவே இன்று முதற் கொண்டு அவர்மீது சினம் கொள்ள மாட்டேன் என்ற எண்ணம் உண்டாகும்.

இந்த எண்ணத்தோடு அவரது உருவத்தை மனத்தில் நினைத்து இம்முடிவை எடுத்துக் கொள்வோம்.

இன்று முதற்கொண்டு ஏழு நாட்கள் இந்தப் பயிற்சிக்கு ஒதுக்கிக் கொண்டு காலையிலே எழுந்தவுடனே "இன்று இவரோடு தொடர்பு கொண்டு பேசப் போகிறேன். இன்னின்ன வேளையில் செயலில் ஈடுபடப் போகிறேன். அவர் இன்னது சொன்னால் எனக்குச் சினம் எழுவது இயல்பாக இருந்து வந்திருக்கிறது. ஆனால், இன்று இவர் என்ன சொன்னாலும் சரி, சினம் எழாது காப்பேன். சினம் வருமேயானால் அந்த இடத்திலே விழிப்பு நிலை கொண்டு என்னைத் தடுத்துக்கொள்வேன் என்று உறுதி கொண்டு, அவர் என்ன சொல்வார் என்று தெரிந்து கொண்டு அதற்கும் நாமே அமைதியாகப் பதில் சொல்ல வேண்டும், அல்லது பதில் பேசாமல் இருக்கவேண்டும்,'' என ஒரு மானசீக நாடகமே தயார் செய்து கொள்ளவேண்டும்.

"மீண்டும் அந்த நாளிலே அவரோடு பலமுறை சந்தித்துப் பேச, செயலாற்ற வேண்டியிருக்கும். அப்போதெல்லாம் விழிப்போடு இருந்து இவரோடு சினம் கொள்ளாது நாம் இந்த நாளைக் கழிக்க வேண்டும்,'' எனவும் பழகிக்கொள்ள வேண்டும்.

நல்லது நடக்கும்!

எங்கே ஒரு வாரம் வரை இதை முயற்சி செய்து பாருங்களேன்.

*(அடுத்த வாரம்)*


**குங்குமச் சிமிழ்**

15-12-2003 இதழில்

**புனிதன்**

**எழுதிய**

**அவள் நினைவில்**




*உங்களின் உள்ளம் தொடும் குடும்ப நவீனம்

* கலீல் கிப்ரான் குட்டிக்கதை
* ஏராள துணுக்குகள்

**விலை ரூ. 4**

# 'குடி' நீர்!

இந்த விஷயம் வெளிய தெரிஞ்சா இங்கயும் வரிசை போட்ரு வாங்க..!
இப்படியே குளிச்சுட்டு வந்துரட்டுமா மம்மி?
என்னைக் கண்டா படையே நடுங்குது.. இங்க என்னடான்னா என்னசையக்கூட அசையமாட்டேங் கறாங்க..
நீ குடத்தை வெச்சு தண்ணி புடிக்கச் சொன்னியா.. அடிக்கச் சொன்னியா? சரியா கேக்கலை..
உன் பொண்ணு பக்கத்து வீட்டுப் பையனோட பெட்டியோட போறான்னு கூட சொல்லிப் பார்த்தாச்சு... இடத்தை விட்டு அசைய மாட்டேங்கறா..
ஒரு குடம்தானே வெச்சிருக்கேன்.. முதல்ல பிடிக்க விட்டா என்ன?
குடிநீர்

–பில்கேட்ஸ்

'சினம்' - எந்த அளவுக்கு ஆபத்தானது, தேவையற்றது, தீங்கு விளைவிக்கக்கூடியது என்பதை உணர்த்தவே இவ்வளவு விவரமாக, தெளிவாக, நுட்பமாக, நீளமாக விவரிக்கிறோம்.

'விழிப்போடிருந்து இவரோடு சினம் கொள்ளாது நாம் இந்த நாளைக் கழிக்க வேண்டும்' - என்று சங்கற்பம் இயற்றிக் கொண்டு பழகிக் கொள்ள வேண்டும்!' என்றோ மில்லையா?

இடையிடையே அப்போதைக் கப்போது மன வலிவைக் கூட்டிக் கொள்ளக்கூடாது என்று இந்தப் பயிற்சியில் ஈடுபட்டுப் பழக்கத்திலே இருக்கிறேன்; ஆகவே சினம் கொள்ள மாட்டேன்'' என்று அமைதியாகவும், விழிப்பாகவும் மனத்தை வைத்துக் கொள்ள வேண்டும்.

எந்த அளவிலே விழிப்புநிலை இருக்கிறதோ அங்கே உணர்ச்சி வயப்பட்ட எண்ணம் எழாது. விழிப்பு நீங்கி மறதி ஏற்பட்டால் தான் உணர்ச்சிவயமான பகை உணர்வுகள் உண்டாகும்.

எனவே, அந்த விழிப்பு நிலையோடு அன்று அவரோடு தொடர்பு கொள்ள வேண்டும்.

# வாழ்க வளமுடன்!

வேதாத்திரி மகரிஷி

தவங்களில் அவர்கள் உருவத்தை நன்றாக நிறுத்திக் கனிவோடு வாழ்த்த வேண்டும்.

சினத்திலிருந்து திருந்தவும் சங்கற்பம் செய்யவேண்டும். இந்தச் 'சின மொழிப்புப் பயிற்சி' நமது குடும்ப உறுப்பினர்களுக்கும் வெற்றியாக முடிய வேண்டும் என்றும் சங்கற்பம் செய்து கொள்ள வேண்டும்.

ஏதோ ஒரு சமயம் சிறிது மறதி ஏற்படலாம் என்றாலும் உடனடியாக நினைவுகொண்டு விழிப்பு நிலைக்கு வந்து, "நான் சினம் கொண்டு செயலாற்றி அந்த நாளைக் கழிக்கவேண்டும்.

இரவிலே அமைதியாக உட்கார்ந்து, "இன்று என்னவாயிற்று? நான் சினமே கொள்ளவில்லை, ஆனால் வேலை நடக்கவில்லையா? சினம் கொண்டிருந்தால் என்னென்ன ஆகியிருக்கும்? சினம் கொள்ளாததால் என்னென்ன நிகழ்ந்தது?'' என்றெல்லாம் சிந்தித்துப் பார்த்தால், ஏற்பட்ட மாறுதலால் உள்ளம் பூரிக்கும்.

யார்மீது நேற்று வரை சினம் கொள்ளாது வாழ்க்கையை நடத்திய

வாழ்க்கைக்கு உதவும் உன்னதத் தொடர்!




தனால் ஏற்பட்ட அவர்களது மன மகிழ்ச்சியை, முகமலர்ச்சியை நினைத்துப்பார்த்து மறுநாளும் இதே பயிற்சியைத் தொடரவேண்டும்.

இவ்வாறு ஏழு நாட்கள் காலையிலும் மாலையிலும் சிறிதுநேரம்

சிந்தித்து இப்பயிற்சியைத் தொடர்ந்து செயலாற்றினால் ஒரு வார காலத்திற்குள்ளாக இந்தப் பயிற்சி பழக்கமாகிவிடும்.

அவர் முகத்தைப் பார்க்கும்போதே இந்த நல்ல எண்ணம் உண்டாகும்; சினம் தவிர்க்கப்படும்.

ஏதோ ஒரு சமயம் மறந்து சினம் எழுந்துவிட்டால் அன்று உடனே உட்கார்ந்து "நான் இன்று மறந்துவிட்டேன், இனி மறக்கமாட்டேன்", என்று பலமுறை மனத்தாலும் வாயாலும் சொல்லித் திடம் கொள்ள வேண்டும். அதற்கு மேலாகவும் தவறு நேர்ந்தால், "மறதியினால் இன்று தவறிவிட்டேன்; இதற்காக எனக்கு நானே பிராயச்சித்தம் செய்துகொள்ள வேண்டும்", என்று ஒருவேளை உணவை அதற்காக விட்டுக்கொடுத்துச் சிந்தனையில் இறங்குவோமானால், சினம் தவிர்ப்பதற்காக ஒரு வேளை உணவை விட்டுவிட்டதனால் அந்த ஒரு வேளை சுமார் ஏழு மணி நேரம் ஒரு பெரிய ஆராய்ச்சியின் ஆழத்திற்கே மனம் செல்லும்.

இது வாழ்நாள் முழுவதும் மறக்க முடியாத நினைவை உருவாக்கி வைக்கும்.

இந்த முறையிலே ஒரே ஒருவர் மீது சினம் கொள்ளாதிருக்கப் பழகிக் கொண்டால் அதுவே மிகப் பெரிய வெற்றியாகும்.

இம்முறையில் பயின்றால் ஒரு வாரத்திலோ அல்லது இருவாரத்திலோ அந்த முதல் நபரைப் பொறுத்தவரை சினம் வராத அளவுக்கு மனதின் விழிப்பு நிலையையும், உறுதியையும் பெற்று விடலாம்.

பிறகு பட்டியலின் இரண்டாவது நபரை எடுத்துக் கொண்டு அவரோடு இதே முறையில் பயிற்சியைத் தொடர வேண்டும்.

முதற்பயிற்சி அனுபவத்தாலும், அதில் கிடைத்த வெற்றியாலும் மனதிற்கு இப்போது சினம்காக்கும் வல்லமை பெருகி விட்டது. எளிதாக இரண்டாவது நபரிடம் வெற்றி காணலாம்.

மூன்றாவது நபருக்கப்புறம் இந்தப் பயிற்சியே தேவை இல்லை. யாரிடமும் சினம் எழாத தகைமையை இப்போது நாம் பெற்று விட்டிருப்பதுதான் காரணம்.

மாதமொருமுறை உலக அமைதி அகத்தாய்வு



19.12.03 இதழில் யூகலிப்டஸ் மரங்கள் பற்றி கௌதர் அஜீஸ் தெரிவித்த கருத்துக்களை என்னால் ஏற்றுக்கொள்ள முடியவில்லை. யூகலிப்டஸ் மரங்கள் பரவி உள்ள இடங்களில்தான் நீரோடைகளும் சின்னஞ்சிறு நீர் வீழ்ச்சிகளும் அதிகம் உள்ளன. மலைச்சரிவுகளில் வளரும் இந்த மரங்களால் எப்படி நிலத்தடி நீர் பாதிக்கும்? குளிர்பகுதியில் உருளைக்கிழங்கு, காபி, டீ, கேபேஜ்

## யூகலிப்டஸ்

மௌன நோன்பு இருக்கிறோம் அல்லவா? அப்போது, அல்லது வாரம் ஒருமுறை ஏற்படுத்திக்கொள்ளும் ஒருமணி நேரத்தில் அகத்தாய்வு செய்து ஆராய வேண்டும். சினம் தோன்றும் காரணம், சினத்தின் தீமை, சினத்தை ஒழிக்க எடுத்த முயற்சி, அடைந்த வெற்றியின் அளவு, இனியும் எடுக்க வேண்டிய முயற்சிகள் என்ற முறையிலே ஆராய வேண்டும்.

மீண்டும் சங்கற்பம், மீண்டும் வாழ்த்து என்று முயற்சி எடுத்துக் கொண்டே இருக்கவேண்டும்.

ஏன், ஒவ்வொரு கணமும்கூடத் தற்சோதனையாகவே இருக்க வேண்டும்.

''சென்ற கணம் நான் பேசியது சரியா? சென்ற கணத்தில் எனக்கு ஏற்பட்ட மனநிலை சரிதானா?'', என்று ஒவ்வொரு கணமும் சோதனையாகவும் ஆராய்ச்சியாகவும் கழிய வேண்டும்.

தவத்தினால் ஏற்பட்டிருக்கும் மனத்தின் விழிப்பு நிலை இந்த வழியில் பெரிதும் துணையாக இருக்கும்.

இவ்வாறு செய்துவந்தால் ஓர் ஆறு மாதங்களுக்குள்ளாக சினம் அழிந்து பொறுமையின் திருவுருவாகவே திகழலாம். சினம் எழாத மனம் பிரகாசமாக இருக்கும்.

சினம் அகன்ற ஒருவரிடம் அவர் மனைவியும், மக்களும் மற்றவர்களும் எவ்வளவு இனிமையோடும் அன்போடும் பழகுகிறார்கள். அவர் குடும்பம் எவ்வளவு மகிழ்ச்சியாக இருக்கிறதென்று கவனித்துப் பார்க்க வேண்டும்.

அவரது குடும்ப உறுப்பினர்கள் அனைவருமே வெற்றி மேல் வெற்றியாக எல்லாத் துறைகளிலும் பிரகாசிப்பார்கள்.

இதுதான் சினத்தை ஒழிக்கும் முறை. இதில் வெற்றி அடைந்த மகிழ்ச்சியில் நாம் நமது நண்பர்களுக்கும் மற்றையோருக்கும் இந்த முறையைப் பரிந்துரை செய்யவும் வேண்டும்.

சினத்தை ஒழிப்பதாக நினைத்துச் சிலர் அதை அடக்குவார்கள்.

அதாவது சினத்தை எழவிட்டு அதனை வெளிப்படுத்தாமல் தம் மனதிலேயே அடக்கிவிடுவார்கள்.

அது குளிப்பதாக நினைத்துச் சேறு பூசிக்கொள்வதாகும்.

எழுந்த சினம் வெளிப்படுமானால் எழுந்த இடத்திலும், செல்லும் இடத்திலும் ஆக இரண்டு இடங்களிலும் தீமை செய்யும்.

எழுந்த பிறகு அடக்கப்படும்

தான் விளைகின்றன. இவைகள் அங்குள்ள குளிர் சூழ்நிலையால் தான் விளைகின்றனவே தவிர மண் வளத்தினால் அல்ல. அப்படியிருக்கும்போது இந்தியாவே யூகலிப்டஸ் மரங்களால் தன் மண் வளத்தை இழந்து கொண்டிருக்கிறது என்பது சரியல்ல. மேலும், யூகலிப்டஸ் தைலம் தயாரிக்கும் தொழிற்சாலைகளில் பணிபுரியும் தொழிலாளர்கள் இதனால் பாதிக்கப்பட்டதாகத் தகவல் இல்லை. யூகலிப்டஸ் மரங்கள் ஏராளமாக உள்ள உதகையில் வாழும் படுகர், தோடர் இன மக்கள் இதனால் எந்த நோய் நொடியும் இல்லாமல் நிம்மதியாகத்தான் வாழ்ந்து வருகிறார்கள்.

-மாயா கிருஷ்ணமூர்த்தி

# பதிலடி!

சினமோ அந்த இரண்டு பங்குத் தீமைகளையும் எழுந்த இடத்திலேயே, சினம் கொண்டவருக்கே செய்து விடும்.

அதுமட்டுமல்ல!

சினத்தை அடக்குவதனால் சீக்கிரம், அடிக்கடி சினம் கொள்ளுகின்ற கேடு வந்து விடும்.

மனம் இருண்ட குகையாகும். வாழ்க்கையோ வறண்ட பாலையாகும்.

நரம்புத் தளர்ச்சி, இதய பலவீனம், இரத்த அழுத்தம் இன்னும் தொடர்புடைய நோய்களெல்லாம் சினத்தை வெளிப்படுத்துபவரை விட அடக்குபவருக்கு அதிக அளவிலும் அடிக்கடியும் வரும்.

சாதாரணமாக, ஒருவர் சட்டென்று சினம் வயப்படாதவர் என்றாலும், அடுத்தவருடைய சினம் இவரைத் தூண்டி விட்டுவிடக் கூடும்.

கணவரின் சினம் மனைவியின் சினத்தைத் தூண்டும்.

இங்கே அவர்கள் கொஞ்சம் நிதானிக்க வேண்டும்.

எதிர்ச் சினத்தால் ஏற்பட்ட விளைவு என்ன? பொறுத்துப் போயிருந்தால் ஏற்பட்டிருக்கக்கூடிய விளைவு என்னவாக இருக்கும்?

(அடுத்த வாரம்)

# லைட்டா? ஸ்ட்ராங்கா?



"நம்ம ராமசாமி மாதிரி ஒரு சிக்கனப் 'பேர்'வழியைப் பார்க்கவே முடியாது.."

"எதுக்கு அப்படிச் சொல்ற?"

"அவரோட ரெண்டு குழந்தைக்கும் ஒரே பேரையே வைச்சிருக்காரு!"

- எஸ். எஸ். பூங்கதிர்



"டிவி. சீரியல் எல்லாத்துலேயும் ஏதாவது ஒரு பொண்ண கர்ப்பமா இருக்கிறமாதிரி காட்றாங்களே, ஏன்?"

"சீரியல்ல 'கரு' இல்லைனு யாரும் சொல்லிடக்கூடாதாம்!"

- சீர்காழி வி. ரேவதி.





"இவரு அரைகுறை பாகவதர்னு நினைக்கறேன்."

"எப்படிச் சொல்றீங்க?"

"காபி ராகம் பாடுங்கன்னா.. லைட்டா? ஸ் ட் ரா ங் கா ? அப்டிங்கறாரே?"

- சி.பி. செந்தில்குமார்

"கல்யாண மண்டப வாசல்ல சீரியல் லைட்டுக்குப் பதிலா சிக்னல் லைட்டா எரியுதே?"

"டிராஃபிக் சார்ஜண்ட் வீட்டு கல்யாணமாச்சே?"

- சி.பி. செந்தில்குமார்



"அந்த டைரக்டருக்கு இப்படி ஒரு சென்டிமென்டா?"

"என்ன ஆச்சு?"

"அடுத்த படத்துக்கு ஸ்டோரி டிஸ்கஷனுக்காக எல்லாரையும் சுடுகாட்டுக்கு வரச்சொல்லியிருக்கார்."

- எஸ். மோகன்.





வேதாத்திரி மகரிஷி

# வாழ்க வளமுடன்!

வாழ்க்கைக்கு உதவும் உன்னதத் தொடர்!

31

"சினம் என்றால் என்ன? அது எங்கு எழுகிறது? அதன் விளைவு என்ன?"

## மண்ணாசை பொன்னாசை பெண்ணாசை

"ஆ! என்னையே எதிர்த்துப் பேசுவதா? என்றோ, என் மேலேயே கோபத்தைக் காட்டுவதா?'' என்றோ அவர்களிடம் எழும் தன்முனைப்புத் தான் இதற்குக் காரணம். தன்முனைப்பு சமநோக்காகும்போது சினம் மட்டும் தான் மிஞ்சும். அதையும் மேற்சொன்ன முறையில் பொறுமை கொண்டு வெற்றி கண்டுதான் ஆக வேண்டும்.

இரண்டு கொக்கிகள் மாட்டிக் கொண்டு ஒன்றையொன்று இழுத்துக் கொள்ளும் இந்தப் போராட்டத்திற்கு முடிவே இருக்காது.

இதில் ஒரு கொக்கியாக மனைவியோ கணவனோ அல்லது வேறு யாரோ இருக்கிறார்கள்.

ஒரு கொக்கியை, அதன் வளைவை நீக்கி நீட்டி விட்டு, கம்பியாக மாறப் போகும் கொக்கி யார்?

இரண்டு பேரில் யார் அதிக அறிவாளியோ அவர் தான்!



மறதி நிலையாகி உணர்ச்சிவயத்திலேயே செயல்பட்டுச் சினம் கொள்வது வாழ்க்கையை அழித்துக்கொண்டு பிறவியின் லட்சியத்திற்கு எதிர்த்திசையில் செல்வதாகும்.

மேலும் மேலும் கடன்பட்டு திவாலாவதற்கு ஒப்பாகும்.

மாறாக, இத்தகு ஆன்ம ஆராய்ச்சியில் ஈடுபட்டு, விழிப்பு நிலை நின்று சினம் ஒழிப்பது வாங்கிய கடனைத் திருப்பிக் கொடுத்துப் பொருளாதாரத்தை உறுதிப்படுத்துவதற்கு ஒப்பாகும்.

"இந்தச் சினம் ஒழிப்பு முறை உபதேசிக்க எளிதாக உள்ளது. ஆனால் நடைமுறையில் இது பயன்படாது'' என்று ஆழமான ஆராய்ச்சியில்லாதவர்கள் சட்டென்று சொல்லி விடக் கூடும்.

கடந்த பகுதிகளைப் படித்து-

"சினம் என்றால் என்ன? அது எங்கு எழுகிறது? எப்படி இயங்குகிறது? அதன் விளைவு என்ன?'' என்றெல்லாம் முறையாக ஆராய்ந்தால் அப்படிச் சொல்ல மாட்டார்கள்.

மாற்றிக் கொள்வார்கள்.

அடுத்ததாய் நாம் பார்க்கப் போவது ஆசையைச் சீரமைத்தல்!

ஆசையை, விருப்பம், அவா, பற்று, இச்சை, வேண்டுதல், வேட்பு, காமம், காமியம் எனப் பல வாறாகக் கூறுகிறோம்.

பழங்கால அருள்துறையினர் ஆசையினைச் சிறிது வெறுத்து ஒதுக்கிப் பேசினார்கள்; ஆசையின் பால் கடுமையான வெறுப்பும் கூடச் செலுத்தப்பட்டது.

அவர்கள் ஆசையை மூன்றாகப் பிரித்து மண்ணாசை, பொன்னாசை, பெண்ணாசை எனப் பெயரிட்டனர்.

மனை, விளைநிலம், வீடு முதலியவற்றின்மேல் கொள்ளும் ஆசையை மண்ணாசை என்றனர்.

துய்ப்புப் (அனுபோக) பொருட்களை, அவற்றைப் பெறுவதற்கான முத்திரையாகப் பயன்படும் பணம், பொன் முதலியவற்றின் பேரில் கொள்ளும் ஆசையினைப் பொன்னாசை என்றனர்.

பெண்ணின் மேல் கொள்ளும் விருப்பத்தை பெண்ணாசை என்றனர்.

ஆசையே அடியோடு கூடாது என்று அவர்கள் கூறி வந்தார்கள். ஆசை ஒழிந்த இடத்தில்தான் ஆன் மீகம் பிறக்கிறது என்றும் அவர்கள் கருதினார்கள்.

அவர்களோடு நாம் முழுமையாக முரண்படுவதாக நினைக்க வேண்டாம்!

ஆசையென்றால் என்ன என்று கொள்ளும் கருத்தில் தெளிவு சேர்த் தால் எல்லாம் சரியாகிவிடும். அவர்கள் ஒழிக்கச் சொன்ன ஆசை- 'முரணான ஆசை, தீய ஆசை, தீய விளைவினைத் தரக்கூடிய ஆசை, ஒழுக்கக் குறைவான ஆசை' என்று விளக்கம் கொண்டால் முரண்பாடு கிடையாது.

பிறவிப் பெருங்கடல் நீந்துதல் என்ற லட்சியத்தை நாம் அடைய வேண்டும் என்பதே ஓர் ஆசைதானே?!

இந்த ஆசையை எப்படி ஒழிப்பது? வாழ்ந்து கொண்டுதானே அந்த லட்சி யத்தை அடைய வேண்டும்!

உண்ணாமல் உடுத்தாமல் மற்ற மற்றப் பொருள்கள் பலவற்றை அனு போகிக்காமல் எப்படி வாழ்வது? அப் போதைக்கப்போது உணவின்மீதும், உடை முதலியவற்றின் மீதும் ஆசை செல்லத்தானே செய்யும்?

உலகில் எல்லோரும் பற்றற்று அறிவின் உயர்விலே நின்று சுமை யற்றும் சிக்கலற்றும் வாழ்க்கையை வாழவேண்டுமானால் அது உலக மக்களின் ஒன்றுபட்ட கூட்டுத் திட்டத் தினால் மட்டுமே முடிவதாகும்.

எனவே ஆசையை அடியோடு ஒழிப்பது என்பது இயலாத செயல். அதற்குத் தேவையும் இல்லை.

மண்ணாசையை எடுத்துக் கொள் வோம்.

நாம் வாழ ஓரளாவாயினும் நிலமும் வீடும் வேண்டும்தானே? மண்ணின் மேல்தானே நின்றும், அமர்ந்தும், நடந்தும், படுத்தும் வாழ்க்கை நடத்து கிறோம்?

பொன்னானது பிரதிநிதியாக விளங்கும் பல விதமான பொருள்களை உபயோகித்தவாறுதானே வாழ்கி றோம்?

மனைவியாக இல்லாவிட்டாலும், தாயாக, சகோதரிகளாக அல்லது சமை யல்காரியாகவேனும் பெண் துணை இல்லாமல் யார் வாழ்கிறார்கள்?



மேலும், பெண்கள் என்றாலே ஆன்மீகத் திற்கு விரோதம் என்ற கருத்து முற் றிலும் தவறானது.

இது ஆன் மீகத்தில் இடைச் செருகல்தான்.

பழங்காலத் தில் இக்கொள்கை இல்லை.

நடுவில் ஒரு காலத்தில் இக் கருத்து பரவியிருக்க வேண்டும்.

ஒரு குறுகிய, அற்பமான நிலப் பரப்பை மட்டும் எனது என்று ஏன் சொல்ல வேண்டும்? இந்த மண்ணு லகம் முழுவதுமே எனதுதானே? அதி லுள்ள அனைத்தும் அனைவருக்கும் பொதுவான உடமைகளல்லவா? பெண் களின், பெண்ணினத்தின் பலதரப் பட்ட மதிப்புமிக்க கடமையும் கூட்டுற வும் இன்றி யாரால் வாழ இயலும்?

உயிருக்கு அதன் செலவின் காரண மாக எழும் தேவைதான் ஆசையை உண்டுபண்ணுகிறது.

உயிர் தனது ஓட்டத்தை உடலில் நடத்தும்போது அதற்குச் செலவு ஏற்படுகிறது. அச் செலவால் ஏற்பட்ட உயிராற்றலின் குறையை நிறைவுசெய்து கொள்ளப் பசியும் தாகமும் ஏற் படுகின்றன.

பசியும் தாகமும் இயற்கைத் தேவை களாகும். உணவைக் கொண்டுதான்

நாம் அவற்றை நிறைவு செய்யமுடியும். எனவே, உணவின்மேல் எண்ணம் செல்கிறது. இதுதான் ஆசை பிறந்த முதல் இடம்.

உடலில் உயிரானது இயக்கம் நடத்தவும், அந்த இயக்கம் சீராக இருக்கவும் சுற்றுச் சார்பின் வெப்ப நிலை ஒரு குறிப்பிட்ட அளவாக இருக்க வேண்டும். இல்லாவிட்டால் துன்பம் தோன்றுகிறது. அங்கும் உயிராற்றலின் செலவேதான் துன்பமாக உணரப்படுகிறது. இன்பமும் துன்பமும் என்ற ஆராய்ச்சியில் இது விளங்கும். ஆக, இங்கும் உயிராற்றலின் செலவுதான் காரணம் என்பதைத் தெரிந்து கொள்ள வேண்டும்.

அதனைச் சரிசெய்ய உடை, வீடு முதலிய சாதனங்கள் தேவைப்படுகின்றன.

எனவே வெப்பமோ குளிரோ தோன்றும்போது உடை முதலியவற்றின் மேல் எண்ணம் செல்லுகிறது. இந்த எண்ணத்தைத்தான் ஆசை என்கிறோம்.

பருவம் வந்ததும் உடலில் ஜீவ வித்துக் குழம்பு முதிர்ச்சியுறும் போதும், கழிவுப் பொருள் உடலில் தேக்கமுறும்போதும் ஒரு விதமான துன்பத்தை அனுபவிக்க வேண்டி வருகிறது.

தேங்கிவிடும் வித்துக் குழம்பின் வெளியேற்ற வேகந்தான் உயிராற்றலின் சீரான இயக்கத்துக்குத் தடையாகித் துன்பமாக உணரப்படுகிறது.

இதனைச் சமன் செய்ய ஆணுக்குப் பெண் துணையும், பெண்ணுக்கு ஆண் துணையும் தேவையாகின்றன.

அப்படி ஆணுக்குப் பெண் மேலும் பெண்ணுக்கு ஆண்மேலும் எழும் ஆசையே, பெண்ணாசை என்று சொல்லப்படுகிறது.

இதைப்போலவே மலஜலம் முதலிய இதர உடற்கழிவுப் பொருள்களும் அவற்றின் உந்து வேகத்தின் காரணமாகச் சில தேவைகளையும் ஆசையையும் உண்டுபண்ணுகின்றன.

உயிர் வாழ்வதால் பசி, தாகம், வெப்பதட்ப ஏற்றத் தாழ்வு, உடற் கழிவுப்பொருள்களின் உந்து வேகம் ஆகிய மூன்று இயற்கைத் துன்பங்கள் வருகின்றன.

அவற்றின் காரணமாகத் தேவையும் ஆசையும் வருகின்றன.

உயிர் வாழ்தல் என்ற காரணந்தான் ஆசைக்கு மூலகாரணமாகிறது. உயிர் வாழ்தல் இன்றேல் ஆசையில்லை.

அதாவது ஆசை அறும் இடம் மரணந்தான்!

யோசித்துப் பாருங்கள் புரியும்–

*(அடுத்த வாரம்)*

## என் கணவர்!

"என் கணவரிடம் நான் பெருமைப்படும் விஷயம் அவருடைய உதவி மனப்பான்மை. பிறருக்கு உதவி செய்து, சந்தோஷப்படுவதில் என்னைப் பொறுத்தவரை அவருக்கு நிகர் அவரே. வெள்ளித்திரையில் கலகலப்பாகத் தோன்றினாலும் உண்மையில் ரொம்ப சாஃப்ட்டான கேரக்டர்.

முக்கியமான விஷயம் அவருடைய ஃபிரண்ட்சிப்தான். அந்த ஒன்றுதான் எனக்கு அவர் மீது காதலை ஏற்படுத்தியது. நண்பர்களிடமே இப்படிப் பழகுபவர் நம்மை நன்றாக வைத்துக் கொள்வார் என்று நம்பினேன். அந்த நம்பிக்கை பலித்து விட்டது என்றார் கருணாஸ் மனைவி

ஆசை என்பது ஓர் எண்ணம்!
எண்ணம் என்பது மனத்தின் இயக்க
நிலையைக் குறிக்கிறது.
மனமோ உயிராற்றலின் படர்க்கை
நிலையாகும். உயிர்தான்
'நான்'என்பது.
எனவே 'ஆசை' என்பதும்
'நான்' என்பதும் ஒன்றேயல்லவா?
ஆசையே நான்
என்னும்போது, நானே
ஆசையாக இருக்கும் போது
ஆசையில்லாமல் நான்
மட்டும் எப்படி
வாழமுடியும்? நான் எப்படி
ஆசையை விலக்க

# ஆசையில் தீவிரம் காட்டல் தவறு!

...படும்?

...என்றால் என்னையே நான் எப்படி விலக்குவது? ஆசை இல்லாத இடம் நானும் இல்லாத இடமாகிறது.

தெய்வ நிலைக்குத்தான் ஆசையே இல்லை. இருக்க முடியாது. சீவன்களுக்கு ஆசை இருந்துதான் தீரும்.

தேவையைக் காரணமாகக் கொண்டு எழுந்த ஆசை தேவை நிறைவோடு நின்றுவிடவேண்டும். பசி, தாகம் முதலிய இயற்கைத் துன்பத்தைப் போக்கிக்கொள்ள எழுந்த ஆசை துன்பத்தைப் போக்குவதோடு நின்றாக வேண்டும்.

உயிராற்றல் செலவைச் சரி செய்ய எழுந்த ஆசை அப்படிச் சரி செய்வதோடு நின்றாக வேண்டும்.

ஆனால் பொதுவாக அப்படி நிற்பதில்லை. தேவை நிறைவின்போது ஏற்பட்ட திருப்தியின் மீது அல்லது இன்பத்தின் மீது உயிர் மயங்கி விடுகிறது.

எந்தக் காரியம் இன்பத்தைத் தந்ததோ, அந்தக் காரியத்தைத் தேவையில்லாமலே செய்ய விழைகிறது.

அதாவது, உண்மையான தேவை இல்லாமலேயே ஆசை எழுகிறது.

எழுகிற துன்பத்தைத் தீர்க்கும் வகையில் ஆசை தோன்றியதுபோக, இன்பத்தைச் செயற்கையாகத் தேடும் முயற்சியிலே இப்போது ஆசை எழுகிறது.

இந்த ஆசையைத்தான் மனிதர்கள் கட்டுப்படுத்த வேண்டும். எழாமலேயே காக்கவும் வேண்டும்.

உயிராற்றல் குறைவை நிறைவு செய்வதற்காக அல்லாமல், இயற்கைத் துன்பத்தைத் தீர்ப்பதற்காக அல்லாமல், உண்மையான உயர்வான தேவையின் காரணமாக அல்லாமல் ஏற்படும் ஆசைகளெல்லாம் அறிவின் மயக்கத்தால் தோன்றுவன. அவை துன்பத்தைத்தான் தரும்.

இன்னொன்று, தகுந்த காரணத்தாலேயே ஏற்பட்ட

இச்சைகளானாலும், அவ்வாசைகளை நிறைவு செய்யும் முயற்சியில் தனக்கோ பிறர்க்கோ துன்பம் தோன்றுமானால், அவ்வாசைகளும் தடுக்கப்பட வேண்டியவையே.

மேலும், நிறைவேறிய பின்னர் தீய விளைவுகளைத் தரக்கூடிய இச்சைகளையும் கட்டுப்படுத்தித்தான் ஆகவேண்டும்.

எனவே, எழும் இச்சையின் காரணத்தை ஆராயவேண்டும். தக்க காரணம் இருந்தாலும் யாருக்கும் பாதகம் இல்லாமல் அந்த ஆசையைச் செயல்படுத்த சூழ்நிலை, வாய்ப்பு, வசதி இருக்கின்றனவா எனப் பார்க்கவேண்டும்.

இருந்தால்தான் செயலாக்க முனையவேண்டும்.

அப்போதும் கூட எதிர்கால விளைவாக இன்பம் தோன்றுமா? துன்பந்தோன்றுமா? என்பதையும் கணித்துத் தனக்கும் பிறர்க்கும் இன்பம் தோன்றும் என்றால் மட்டுமே செயலாக்க வேண்டும்.

ஆனால், நாம் என்ன செய்கிறோம்? தேவைகளை நாமாகப் பெருக்கிக்கொள்கிறோம். அப்படி நாமாகவே செயற்கையாக உற்பத்தி செய்துகொண்ட தேவை வழியாகவும் ஆசைகள் தோன்றுகின்றன.

விளைவு என்ன வரும்?

நாம் வாழ்க்கையில் நிறைய துன்பத்தைச் சந்திக்கிறோம் என்றால் அதற்கு இதுவும் ஒரு முக்கிய காரணம்.

எழும் ஆசைகள் நமது அறிவின் மேம்பாட்டை அடிப்படையாகக் கொண்டதென்றால் அதனை நிறைவு செய்யலாம். நமக்கு முன்னேற்றத்தை ஏற்படுத்தும் என்றால் நிறைவு செய்யலாம். உலக நலத்தைக் கூட்டுவிப்பதானால் நிறைவு செய்யலாம்.

அதைவிடுத்து அதுவேண்டும் இது வேண்டும் என்று இச்சையை விரித்துக்கொண்டே போகலாகாது.

"ஆசை அறுமின்கள்
ஆசை அறுமின்கள்
ஈசனோடு ஆயினும் ஆசை அறமின்கள்
ஆசைப்படப்பட
ஆய்வரும் துன்பங்கள்
ஆசை விட
விட
ஆனந்தமாமே."

"இவரைப் பார்த்தா போதும் அவனவன் கிடுகிடு-னு நடுங்குவான்!"
"அவ்வளவு பெரிய ஆளா?"



வேண்டுவதெல்லாம் என்ன? முறையான தேவைகள் நிறைவு பெற வேண்டும். இயற்கைத் துன்பங்கள் சமன்செய்யப்பெற வேண்டும். நாளுக்கு நாள் அறிவின் மேம்பாடு வேண்டும். ஆன்மீகத்தில் உயர்வடைந்து முழுமைப்பேற்றை அடைந்து வீடுபேறு பெற வேண்டும்.

ஆசையை அடக்கினால் அடங்காது. உணர்ந்து ஆராய்ந்து அதனைப் பிறந்த இடத்திலேயே ஒடுங்கச் செய்யவேண்டும்.

தேவையா? வசதி இருக்கிறதா? பின்விளைவு என்ன? என்று ஆராயும்போது நிறைவு செய்யக்கூடாத தீய ஆசைகள் அப்போதே அமைதிபெறும்.

பிறந்த இடத்திலேயே-அதாவது மனதிலேயே தானாகவே மாய்ந்துவிடும்.

அப்படியின்றி ஆராய்ச்சி, தெளிவு, திடசங்கற்பமின்றி ஆசையை அதன் இயக்கத்திற்கு விட்டுவிட்டால், அனு போகத்தைப் பெறாதவரை அதற்கும்



"இல்ல! இவர், யாரைப் பார்த்தாலும் கடன் கேட்க ஆரம்பிச்சுடுவாரு!"
- சி.பி. செந்தில்குமார்.

மனத்திற்கும் அமைதி இல்லை.

முறையான தேவையான ஆசையேயானாலும் அதை நிறைவு செய்யும்போதும், நிறைவுசெய்து விளைவை அனுபவிக்கும்போதும் அதன் மீது தீவிரமான பற்றினை வைக்காமல் அதனை ஒரு கடமையாகவே கொள்ள வேண்டும்.

தேவையான ஆசையானாலும், நன்மையே பயப்பதானாலும் தன்வயம் இழந்து அதன் மேல் ஒன்றுதல் முழுமையான நன்மையைத் தராது; மனமும் மாசுறும்.

பொருட்கள் துன்பத்தைக் குறைக்கின்றன, தீர்க்கின்றன என்பதால் அப்பொருட்கள்மேல் மனம் செல்லல், இச்சித்தல், இயற்கையே என்றாலும், பொருட்கள்மீது எண்ணத்தால் பிடிப்புக்கொள்ளல், ஆசையில் தீவிரம் காட்டல் தவறு.

அப்பொருட்களுக்கும் நமக்கும் கடமையில் உள்ள தொடர்பையும், அப்பொருட்களோடு நாம் கொள்ள வேண்டிய உறவின் அளவையும், முறையையும் திட்டவட்டமாக வரையறுத்துக் கொள்ளவேண்டும்.

அப்படியின்றி அப்பொருளை எண்ணமானது பிடித்து வைத்திருத்தலைத்தான் பற்று என்று கூறினார்கள். இந்தப்பற்று நீங்கத்தான் வேண்டும்.

பொருட்களை விட்டுவிட வேண்டிய தில்லை. அந்தப் பொருட்களில்தான் எல்லாம் இருக்கிறது, இன்பம் இருக்கிறது என்ற எண்ணத்தின் இறுக்கத்தை, பற்றை விட வேண்டும். இப்பற்றை விடாதவரை உயிருக்கு விமோசனமில்லை.

காரண காரிய விளைவுக் கணக்கு தப்பாத விழிப்பு நிலையில் பொருட்களோடு கொள்ளவேண்டிய தொடர்பின் இன்றியமையாமையையும், வைத்துக்கொள்ள வேண்டிய உறவின் தன்மை மற்றும் அளவினையும் சரியாக எடை போட்டு ஆசையினை ஏற்று நிறைவு செய்துகொள்கையில் ஆசை தேவைதான்.

அப்படி இல்லாத ஆசைகள் நல்விளைவையே மற்றவர்களுக்குத் தந்தாலும் மனம் அதில் சிக்கிக் கொண்ட காரணத்தால் அது நமக்குத் தீங்காகவே அமையும்.

*(அடுத்த வாரம்)*

# பொறுமை எந்த அளவு பெரியது?

## வேதாத்திரி மகரிஷி

"ஒருவர் ஒரு பெரிய கொடுமையைச் செய்கிறார். அவருக்கு எதிராகக் கூடச் சினம் கொள்ளக்கூடாதா?" என்று நீங்கள் கேட்கலாம்.

சினத்தினால் எங்கும் எப்போதும் ஒரு நன்மையும் வந்ததாக இதுவரை வரலாறு இல்லை. தீயவர்களையும் கொடியவர்களையும் மன்னித்தல்தான் சிறந்தது. அதில்லாமல், பதிலுக்குப் பதில் அல்லது பழிக்குப் பழி என்று இறங்கினால் அதற்கு முடிவு எங்கே?

நமக்கு ஒருவர் கெடுதல் செய்தாலும் நாம், நம்வயம் இழக்கலாமோ?

நம்வயம் இழந்தால்தானே சினம் வரும்? நாம் நாமாகவே இருந்தால் அதுவே அவருக்கு ஒரு பாடமாகி மீண்டும் இத்தகைய தீங்கு செய்யாதிருக்க ஒரு நல்வாய்ப்பாய்தானே ஆகும்?

இன்னும் ஒருபடி மேலே சென்று, தீங்கு செய்தவருக்கும் நன்மை செய்துவிட வேண்டும் என்றும் நமது பெரியோர்கள் கூறியிருக்கிறார்கள். அவ்வாறு செய்தால் சினத்திற்கு அங்கே இடமே இல்லை!

இது காலத்திற்கு ஒவ்வாதது இல்லை! இன்றும் என்றும் நடைமுறைப்படுத்திப் பார்த்தால் அற்புதங்கள் மலரும் மேன்மை!

அப்படி நமக்குத் துன்பம் செய்தார் மேலும் சினம் கொள்ளாததோடு அவருக்கு நன்மையும் செய்யவில்லை என்றால் மனிதராக இருந்து, அருள் துறையில் இருந்து என்ன பயன்?

சினம் ஒழிந்த இடத்தில்தான் இந்தப் பெருந்தன்மை வரும்?!

"நான் எவ்வளவோ பொறுமையாகத்தான் இருந்தேன். எனக்குச் சினம் வரும்படியாகச் செய்துவிட்டார்கள்" என்று சொல்லித் தப்பிக்க முயல வழியில்லை. பொறுமைக்கு எல்லை உண்டு என்பது சுத்தத் தவறு. பொறுமைக்கு எல்லை வரையறை செய்தால் அதுதான் வஞ்சம்! ஏன், பொறுமை கடலினும் பெரிது எனும் கருத்துக்கூடத் தவறுதான்!

பொறுமையை எந்த அளவுக்கும் உள்ளடக்கமுடியாது. எல்லை என்பதே இல்லா இறைநிலையைப் போலவே, எல்லை என்பதே இல்லாதது பொறுமை.

'நீத்தார் பெருமை' என்ற அதிகாரத்தில் வள்ளுவர் இதுபற்றி எழுதியிருக்கிறார். அத்தகைய நற்குணங்களின் உச்சத்தை அடைந்தவர்

களுக்கு வரும் கோபத்தை, அக் கோபத்திற்குப் பாத்திரமாகின்றவர்களால் ஒரு கணம்கூடத் தடுக்க முடியாது, தாங்க முடியாது என்று பொருள் கூறுவார்கள்.

ஒரு கணமானாலும் ஒருவருக்கு வெகுளி வருமானால் அவர் குணமென்னும் குன்றேறவில்லை என்று தான் சொல்ல வேண்டும். எனவே இக்குறளுக்குப் பொருள் வேறு விதமாகக் கொள்ள வேண்டும். குணமென்னும் குன்றேறிவிட்டார்களென்றால் அவர்களால் வெகுளியை ஒரு கணம் கூடக் காக்க முடியாது; கைக்கொள்ள மாட்டார்கள்; ஒரு கணம்கூட அவர்கள் கோபமாக மாற்றம் பெறமாட்டார்கள் என்ற பொருளில் தான் வள்ளுவர் அப்படிக் குறளை எழுதியிருக்க வேண்டும்.



"விலங்குகளுக்குச் சினம் வந்தால் அவை பல்லையும் நகத்தையும் மட்டுமே பயன்படுத்தும். மனிதனுக்குச் சினம் வந்தால் கால்கள் மட்டும் அன்றி அறிவாலும் செயல்படுவான்!"

மற்றெவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டொழுகும் அறவோராகிய அந்தணர்கள் துறவு, மெய்யுணர்வு, அவாவறுத்தல் முதலிய நற்குணங்களாகிய குன்றின் முடிவின்கண் நின்றவர்களாகத் திகழும்போது அவர்களிடத்தில் வெகுளியானது ஒரு கணம்கூடத் தங்காதுதானே!

**பொ**றுமையால் கை கூடிவரும் நன்மைகள் பற்றிக் கூறிக் கொண்டே போகலாம்!

சினத்தால் வரும் கேட்டினைப் பற்றியும் கூறிக்கொண்டே போகலாம்.

ஒருவனுக்குச் சினம் வந்தது என்று வைத்துக்கொள்வோம். அது அவனுக்குச் செய்யும் தீமையைத் தான் இதுவரை ஆராய்ந்தோம்.

அவன் சினத்தினால் பிறருக்குச் செய்துவிடக்கூடிய தீங்குகள், துன்பங்களைப்பற்றி எவ்வளவு கூறினாலும் அடங்குமா?

விலங்குகளுக்குச் சினம் வந்தால் அவை பல்லையும் நகத்தையும் மட்டுமே பயன்படுத்தும். மனிதனுக்குச் சினம் வந்தால் கால்கள் மட்டும் அன்றி அறிவாலும் செயல்படுவான்!

அது மட்டுமா?

அறிவினால் படைத்துள்ள அணுகுண்டு உட்பட பலவகை ஆயுதங்களையும் உபயோகிப்பான்.

ஒரு குடும்பத் தலைவனுக்கு அடிக்கடி சினம் வருகிறதென்று வைத்துக் கொள்வோம்.

அவனது மனைவி மக்கள் மன நிலைகள் அதனால் பாதிக்கப்படும்.

அவர்கள் சோகம் கப்பிய முகத்தினராவார்கள். அவர்களது மனவலிமை குன்றிப்போகும். தோல்வி மனப்பான்மை அவர்களிடத்தில் தோன்றும்.

மறைவாகத் தீங்குசெய்யும் குணமுடையவர் ஆவார்கள். அவர்களும் சிடுமூஞ்சிகளானாலும் ஆவார்கள். எனவே யோசியுங்கள்! சினம் ஒழியுங்கள். பொறுமை கைக் கொள்ளுங்கள்!

சரியா?

*(அடுத்த வாரம்)*

# பால் உறவும் ஆன்மீக வளர்ச்சியும்...

பால் உறவு என்ற ஒன்று, அதை ஒட்டிய அறிவு, ஒரு சமுதாயத்தில் எவ்வளவுக்கு எவ்வளவு தெளிவாக இருக்கின்றதோ, அந்த அளவுக்குத்தான் சமுதாயம் நல்ல முறையிலே மகிழ்ச்சியாக, உடல் நலத்தோடும், மன வளத்துடனும் இருக்க முடியும்.

உடலை நலமாக வைத்து கொள்வதற்கும் மனத்தை நலமாக வைத்து கொள்வதற்கும் சமுதாய அமைப்பிலே இந்தப் பொருள் மிக மிகத் தொடர்புடையதாகும்.



# வாழ்க வளமுடன்!

**வாழ்க்கைக்கு உதவும் உன்னதத் தொடர்**

தொடர்ந்து வரக்கூடிய குழந்தை உற்பத்தி இவைகளையெல்லாம் எடுத்துப் பார்த்தீர்களேயானால் இது ஒவ்வொருவர் வாழ்க்கையிலே யும் பிரிக்க முடியாத தொடர்புடைய ஒன்று என்பது தெரிய வரும்.

ஆனால் இந்தப் பொருள் இன்றைய சமுதாய அமைப்பிலே இருட்டடிப்புத்தான் செய்யப்பட்டு இருக்கின்றது என்பது என்னுடைய கருத்து.

மற்ற எல்லாவிதமான கல்வியும் சாதாரணமாக விரைவாக அளிக்கப் பட்டு வரும் இந்தக் காலத்திலே மனித இனத்திற்கு அதிமுக்கியமான இந்தப் 'பால் உணர்வு' என்பதைப் பற்றி மட்டும் இன்னும் சரியான முறையில் வரவில்லை என்பது என் கருத்து.

சில புத்தகங்கள் வெளி வந்திருக் கின்றன. ஆனால், அவை வியாபார நோக்கத்தோடு ஊக்கமூட்டி அல் லது உணர்ச்சியைக் கூட்டி வெளி யிடப்பட்டதாகத்தான் உள்ளன.

உண்மையான மனிதனுடைய வாழ்கை நலனையொட்டி எழுதப் பட்ட நூல்கள் முற்காலத்திலே ஆயுர்வேத இலக்கியத்திலேதான் பார்க்க முடியுமே தவிர இக்காலத்து நூல் வெளியீடுகளில் அல்ல.

மக்களிடையே பரவலாக விநியோகிக்கப்படுகின்ற பத்திரிகை, சஞ்சிகை, சமுதாய அமைப்பை ஒட்டிப் பார்த்தால் இரண்டே இரண்டு கருத்துக்களைத்தான் அவர் கள் அதிகமாக எடுத்துக் கொள் கிறார்கள். ஒன்று 'ஏழ்மை' அடுத்தது காதல்.

முதலாவது பொருளாதாரத்தைப் பற்றிய ஏற்றத் தாழ்வுகளைக் கற்பித்து அதனால் உணர்ச்சியூட்டக் கூடியது.

அடுத்தது ஆண்- பெண் உறவு களை எடுத்துக் கொண்டு அதனால் உணர்ச்சி ஊட்டுவது.

இந்த இரண்டு விதமான பொருள் கள்தான் எல்லா வார, மாத இதழ் களில் இடம் பெறக் காண்கிறோம்.

வேதா



இவைகள் எல்லாம் மனிதனுடைய மனத்தைக் கொடுப்பதோடு உண்மையை உணரா விடாமலும் உணர்ச்சி வயப்படும் படியாகவும் செய்து விடுகின்றன.

எனவே-

பால் உறவு என்ற பொருளைப் பற்றி ஒவ்வொருவரும் எவ்வளவு தெரிந்துக் கொள்ள வேண்டுமோ அவ்வளவையும் தெளிவாகத் தெரிந்து கொண்டு விட்டால் வாழ்க்கையிலே ஒரு பெரும் பொறுப்புணர்ச்சி ஏற்படும்.

எந்தப் பொருள் பற்றி மனிதன் நன்றாகத் தெரிந்து கொள்கின் றானோ அந்த அளவுக்குத் தான் பொறுப்புணர்ச்சி உண்டாகுமே தவிர, தெரிந்து கொள்ளாத வரையிலே வாழ்வில் பொறுப்

புணர்ச்சி ஏற்படாது.

நம் முன்னோர்கள் நல்லது கெட்டது என்பதைத் தீர்மானித்து சிலவற்றை செய்யலாம். சிலவற்றைச் செய்யக்கூடாது என்னும் முறையிலே அனுமதி கொடுத்தும், தடைவிதித்தும் வந்துள்ளார்கள்.

அவைகளெல்லாம் அந்தக் காலத்தை ஒட்டிய வாழ்க்கை முறைக்குப் பொருத்தமாக இருந்திருக்கும்.

## த்திரி மகரிஷி

"நாம் நல்ல முறையிலே இருக்க வேண்டுமென்றால் உயிர்ச் சக்தியைச் சரியாக வைத்துகொள்ள வேண்டும். உயிர்ச் சக்தி உடலிலே சரியாக இருக்க வேண்டுமானால் அதைத் தாங்கக் கூடிய சக்தி அதாவது வித்து சக்தியானது போதிய அளவிலேயும் போதிய அழுத்தத்துடனும் இருக்க வேண்டும்!"

இன்னும் சற்றே அதிகமாக ஆழமாகப் போனால் அந்தக் காலத்தில் 'இதைச் செய், அதைச் செய்யாதே' என்று சொல்வதற்கு அவர்கள் எடுத்துக் கொண்டது- 'சொர்க்கம், நரகம்' என்ற இரண்டு கற்பனைகளே!

நல்லதைச் செய்தால் கடவுள் ஒருவனுக்கு நல்லதைத் தருவார். தீயவை செய்தால் தண்டிப்பார் என்று ஆசை காட்டியும் அச்சுறுத்தியும் நல்லன செய்யவும், தீயன தடுக்கவும் வேண்டிய அளவிற்கு மக்களுக்குப் போதித்து வந்தார்கள்.

விஞ்ஞான அறிவு வளர்ச்சி பெற்று வரும் இந்தக் காலத்திலே அந்த முறை எவ்வளவு நாட்களுக்குத்தான் தொடர்ந்து பயன்படும்?

இன்றைக்கு என்ன வேண்டுமென்றால்_ ஒவ்வொரு செயலுக்கும் விளைவு உண்டு' என்ற இயற்கையின் நியதியை மனிதன் உணர்ந்து கொள்ளக் கூடிய அளவிற்குச் சிறு வயதிலேயிருந்து படிப்படியாக விளக்கி, அந்த உணர்வு ஒவ்வொருவருக்கும் வந்து விட வேண்டும்.

'இதைச் செய்தால் அதன் விளைவு இதுவாகத்தான் இருக்கும். அந்த விளைவைத் தாங்கிக் கொள்வதற்கு நான் தயாரா?' என்ற அளவிற்கு ஒவ்வொருவரும் அவர்களுடைய செயலிலே விளைவாகத் தொக்கி நிற்கக் கூடிய ஓர் உண்மையை, இயற்கை அமைப்பை உணர்ந்து கொள்ளக்கூடிய முறையிலே உள்ள கல்விதான் இன்றைக்கு அவசியம்.

'பால் உறவும் ஆன்மீக வளர்ச்சியும்' என்ற பொருள் எந்த அளவுக்கு அவசியமாகின்றது என்றால் மனிதனுடைய ஜனனம் மரணம் இரண்டுமே அதைச் சார்ந்துள்ளன.

எனவேதான், 'பிறப்பும் இறப்பும் வித்துக் கழிவினால்தான்' என்று குறிப்பிட்டுள்ளேன்.

அது எப்படி?

(அடுத்த வாரம்)

# இதுவும் ஒரு வகை பெண் சுதந்திரமே!



"நமது பழமையான சமுதாயச் சூழல் மாறி இன்று நல்லதொரு சமுதாய மாற்றம் ஏற்பட்டிருப்பதாகவே இந்த காதலர் தினத்தைக் கொள்ள வேண்டும்.

பெண்கள் தங்கள் கணவனைத் தேர்ந்தெடுக்கும் உரிமை இல்லாதிருந்தார்கள். ஆனால் அது இன்று மாறி இருப்பது சந்தோஷமான விஷயம். எனவே பெண்களுக்கு சுதந்திரம் கிடைக்கச் செய்துள்ள இந்த காதலர் தினத்தை சந்தோஷமாக ஏற்றுக் கொள்ளலாம்.

கல்லூரி மாணவர்களைப் பொறுத்த அளவில் இது ஒரு தேசிய வியாதியாகப் பீடிக்கப்பட்டு விட்டது. கல்லூரி மாணவர்களுக்குத் தேர்வு எப்படி கட்டாயமாக இருக்கிறதோ அது போலவே காதலிப்பதும் கட்டாயம் என்கிற மனோபாவம் ஏற்பட்டிருக்கிறது.

ஆனால் இப்படிப்பட்ட காதல் கடைசி வரை நீடித்து நிற்கிறதா என்பது கேள்விக்குறிதான்.

ஆத்மார்த்தமான காதல் என்பது சற்று குறைவாகவே இருக்கிறது. காதலர் தினம் கொண்டாட வேண்டும் என்பதற்காகவே காதலிப்பது என்கிற போக்கு தான் கவலையளிப்பதாக இருக்கிறது.

காதல் என்பது இன்று நேற்றல்ல, ஆதாம், ஏவாள் காலத்திலிருந்தே இருந்துதான் வருகிறது. ஆனால் நாளுக்கு நாள் பலமாதிரியாகக் கொண்டாடப்பட்டு வருகிறது. அதில் ஒரு நிலைதான் இந்த காதலர் தினம். அது காலப்போக்கில் இன்னும் பல நிலைகளில் உருவாகலாம்.

ஆனால் உண்மையான காதல் சிதைவது என்பதுதான் ஏமாற்றத்திற்குரியது. எனவே, உண்மையான நேசத்திற்குப் பரிசு உண்மையான நேசமே என்பதுதான் இன்றைய தேவை.

எனவே, இன்றைய காதலர்களுக்கு அவசியம் தேவை முதிர்ச்சியான நிலை. அதாவது மண முதிர்ச்சிக்கு மன முதிர்ச்சி மிகவும் அவசியம். அப்பொழுதுதான் உண்மையான காதல் காதலர் தினத்தோடு மட்டும் நிற்காமல் திருமணம் வரை செல்லும்'' என்றார் ஆண்டாள் ப்ரியதர்ஷினி.

-குன்றில் குமார்.

**ஆண்டாள் ப்ரியதர்ஷினி**



# வாழ்க வளமுடன்!–35

## வாழ்க்கைக்கு உதவும் உன்னதத் தொடர்

# உயிர் சக்தி உன்னத சக்தி!

விந்துவானது கழிந்த இடத்திலேதான் பிறப்பு உண்டாகிறது. அவ்வாறே விந்து கழிந்த இடத்திலேதான் மனிதன் இறக்கின்றான்.

உயிர் என்பது உடலையொட்டி இருக்கின்றபோதிலும் வித்துதான் அந்த உயிரைத் தாங்கிக் கொண்டிருக்கக் கூடிய ஒரு பொருள்.

உடல், விந்து, உயிர், மனம் என்ற நான்கை எடுத்துக் கொண்டீர்களேயானால் அணுக்களால் அடுக்கப்பட்ட சிற்றறைகள் உடையதுதான் இந்த உடல்.

இந்த அணு அடுக்கோ ஏழு தாதுக்களுக்கு ஏற்றவாறு ஒவ்வொரு விதமான சிற்றறைகள் அமைந்திருக்கின்றன.

அவை வடதுருவம், தென் துருவம் என்ற முறையிலே ஒன்றோடொன்று ஈர்த்துப் பிடித்துக் கொண்டு ஒழுங்காகச் செயல்பட்டுக் கொண்டு இருப்பதினாலேதான் அது உடலாக இருக்கின்றது.

இந்த ஒழுங்கு முறையைக் காத்து வர வேண்டும் என்றால் உயிர்ச் சக்தி வேண்டும்.

இந்த உயிர்ச் சக்தியைத்தான் 'மனித காந்த சக்தி' என்றும் 'ஜீவ காந்த சக்தி' என்றும் சொல்கின்றார்கள். இந்த உயிர்ச் சக்தி எந்த அளவிற்கு வேண்டும் என்றால் இந்த உடலிலே இருக்கின்ற சிற்றறைகள் எல்லாம் ஒன்றோடு ஒன்று இணைந்து கொண்டு இருக்கக்கூடிய அளவிற்கு வலு கொடுக்கக் கூடியதாகவும், அது ஏதேனும் மோதுதலினாலே சிறிது பாதிக்கப்பட்டால் அதைச் சரிப்படுத்திக் கொள்ளக் கூடிய அளவிற்கும் உயிர்ச் சக்தி இருக்க வேண்டும்.

"The life energy is subject to get acceleration and aggravation according to its atmospheric disturbance" என்று அதை நான் சொல்லுவேன்.

வெளியிலிருந்து வரக்கூடிய தாக்குதலினாலும் கூட உடலிலுள்ள அணு அடுக்கு சீர் குலையக் கூடும்.

மனிதன் தனக்குள்ளேயே செய்யக்கூடிய செயல்களாலேயும் சீர் குலையும். அந்தச் சீர்குலைவை அவ்வப்போது சரிப்படுத்த, முறையாக வைத்துக்கொள்வதற்கு உயிர்ச் சக்தி போதிய அளவு இருக்க வேண்டும்.

உதாரணமாக ஒரு காந்தக் கல்லை எடுத்துக் கொள்வோம்.

அதனுடன் ஒன்றன்பின்

வேதாத்திரி மகரிஷி

உயிர் என்பது
உடலையொட்டி
இருக்கின்றபோதிலும்
வித்துதான் அந்த
உயிரைத் தாங்கிக்
கொண்டிருக்கக் கூடிய
ஒரு பொருள்!

ஒன்றாக ஐந்து ஊசிகளைத் தொங்க விட்டால் எல்லா ஊசிகளும் காந்த சக்தியினாலே ஒட்டிக் கொண்டு ஒன்றோடு ஒன்று பிடித்துக் கொண்டு தொங்குவதைக் காணலாம். காந்தக் கல்லில் முதலாவதாக ஒட்டிக்கொண்டிருக்கும் ஊசியைக் கையால் பிடித்துக்கொண்டு கல்லை அகற்றி விட்டால் என்ன ஆகும். ஒவ்வொரு ஊசியும் தனித்தனியாகப் பிரிந்து உதிர்ந்து விடும்.

காந்த சக்தியின் வேகம் இருந்ததினால் எல்லா ஊசிகளும் ஒன்றோடொன்று இழுத்துப் பிடித்துக் கொண்டிருக்கின்றன. காந்தக் கல்லை எடுத்தவுடன் எல்லா ஊசிகளும் விழுந்து விட்டன.

அதுபோல இந்த உயிர்ச் சக்தி உடலிலே உள்ள சிற்றறைகள் அனைத்தையும் ஒன்றோடொன்று ஒட்டிக் கொண்டிருக்கக் கூடிய அளவிற்கு அழுத்தம் கொடுக்கவும். அது வேறு எந்தக் காரணத்தாலோ சிறிது முறை பிறழ்ந்தாலும் அதைச் சரிப்படுத்திக் கொள்ளக்கூடிய அளவிற்கும் இருக்க வேண்டும்.

ஈடு செய்யும் அளவிற்கு சக்தி இருந்தால் தான் உடல் நலம் நன்றாக இருக்கும். ஏனென்றால் இந்த உயிர்ச்சக்தியின் ஒவ்வொரு துகளும் தன்னைத் தானே வேகமாகச் சுற்றிக்கொண்டு இருப்பதினாலே, அதிலிருந்து வீசக் கூடிய விரிவு அலையானது சுழன்று கொண்டே இருக்கும். அந்த அலை தான் Charged Magnetism. அதைத்தான் bio-current என்று சொல்கின்றோம்.

அது உடல் முழுவதிலும் இருக்கின்றது.

அது ஒருபுறம் அழுத்தம், ஒலி, சுவை, மணம் இவைகளாக மாறிக் கொண்டு இருக்கிறது.

இந்த உடலிலுள்ள எல்லாச் செயல்களையும் செய்து, தள்ள வேண்டியதைத் தள்ளி, கொள்ள வேண்டியதைக் கொண்டு உடலை இயக்கி வருகிறது.

அது நாம் உண்ணும் உணவினை ரசமாக்கி, ரசத்திலிருந்து ஒரு பகுதியைக் கொழுப்பாக்கி, அந்த ஒரு பகுதி கொழுப்பில் இருந்து கால்சியம் எடுத்து எலும்பாக்கி, எலும்பிற்கு ஊடே மஜ்ஜையாக்கி, அந்த மஜ்ஜையிலிருந்து ஒரு பகுதியை சுக்கிலமாக்குகிறது.

அந்தச் சுக்கிலத்திற்குப் பெயர்தான் விந்து என்றும் சுரோணிதம் என்றும் வழங்கப்படுகின்றது. அதுதான் Sexual vital fluid.

இந்த எழுச்சியாக வந்திருக்கக் கூடிய விந்து நாதத்திலிருந்து உருவாகக் கூடிய ஒரு சுத்த சக்தியைத்தான் Ecto-plasm என்று சொல்கின்றார்கள்.

அதுதான் ஒவ்வொரு சிற்றறைக்கும் காந்த சக்தி, மின்சார சக்தியாக மாறுகின்ற



போது அது தாக்காத அளவிற்குத் தன்னைக் காத்துக் கொள்வதற்கும், அதே நேரத்தில் இந்த உயிர்ச் சக்திக்கு பூச்சு வேறு கொடுத்துப் பதிவுகள் எல்லாம்... அதாவது, என்னென்ன செயல்கள் செய்கிறோமோ அவையெல்லாம் உடலின் சிற்றறைகளிலே விரிவு, சுருக்கப் பதிவுகளாகவும் மூளையின் சிற்றறைகளிலே நினைவுப் பதிவுகளாகவும் ஏற்பட வகை செய்கிறது.

ஆகவே, இந்த விந்துவானது போதிய அளவிலே இருந்தால்தான் அந்த

அளவிற்கு உயிர்ச் சக்தி இருக்க முடியும்.

உயிர்ச் சக்தி சரியான அளவிலே இருந்தால்தான் உடல் முழுவதிலும் உள்ள சிற்றறைகள் எல்லாம் ஒன்றோடொன்று கவர்ந்து பிடித்துக் கொண்டு அந்த அணு அடுக்கு சீர்குலையாமல் இருக்கும்.

அப்படி உள்ளமும் உடலும் சரியாகச் செயல்பட வேண்டுமென்றால் போதிய அளவு உயிர்ச் சக்தி வேண்டும்.

உயிர்ச் சக்தியிலே ஒரு பகுதி குறைந்து விட்டதானால்... அதாவது குறைந்த பட்ச அளவு என்று ஒன்று உண்டு; அதை விட அளவு குறைந்து விட்டதென்றால், அதை உடனடியாகச் சரிப்படுத்த வேண்டும்!

வேண்டிய அளவிற்கு மாற்றம் பெற்று அழுத்தமாக, ஒலியாக, ஒளியாக, சுவையாக, மணமாகச் செயல்படும் போது அபரிமிதமான மாற்றம், தேக்கம் ஏற்பட்டு அதனாலே மின்சாரத் தடை வரும்.

அப்படி வருகின்ற போது அதை வலியாக உணருகிறோம்!

உடலிலே எந்த இடத்தில் வலி என்ற உணர்வு இருந்தாலும் அது நம்முடைய உயிர்ச் சக்தியின் ஓட்டத்திற்குத் தடை ஏற்பட்டுள்ளது என்பதைத்தான் குறிக்கிறது.

அந்த வலி நீடித்து இன்னும் பரவிக்கொண்டே இருக்குமானால் அதாவது அந்த அணு அடுக்குச் சீர்குலைவு பல நாட்கள் நீடித்தால்

**செலவைக் குறைத்தோ அல்லது வரவைக் கூட்டியோ சரிப்படுத்த வேண்டும். அப்படிச் சரிப்படுத்தாவிட்டால் அப்பகுதியில் இருக்கக் கூடிய அணு அடுக்குகளுக்குச் சீர் குலைவு ஏற்படும். இதைத்தான் நோய் என்று சொல்கிறோம்.**

செலவைக் குறைத்தோ அல்லது வரவைக் கூட்டியோ சரிப்படுத்த வேண்டும். அப்படிச் சரிப்படுத்தா விட்டால் ஒரு பகுதி உடலுக்கு உயிர்ச் சக்தி எட்டாது. அப்பகுதியில் இருக்கக் கூடிய அணு அடுக்குகளுக்குச் சீர் குலைவு ஏற்படும். இதைத்தான் நோய் என்று சொல்கிறோம்.

அப்படிச் சீர்குலைவு ஏற்படுகின்ற போது இரத்த ஓட்டத் தடை, வெப்ப ஓட்டத் தடை, காற்றோட்டத் தடை இவைகளெல்லாம் ஏற்படும்.

அல்லது துணைப்பட்டதனாலே காற்று, வெப்பம், இரத்தம் இவை மூன்றிற்கும் தடை ஏற்பட்டது என்றால் அந்தத் தடையை நீக்குவதற்கு நம்முடைய உடலின் உள்ள உயிர்ச் சக்தி அந்த இடத்திற்கு அதிகமாகச் சென்று அந்தத் தடையை நீக்குவதற்கு

அதை 'நோய்' அல்லது 'வியாதி' என்று சொல்கின்றோம்.

அப்படியே நீடித்து ஒரு பகுதி உடலுக்கோ அல்லது அவயவத்திற்கோ பரவி, அதிகமான அளவு சக்தி வெளியேறினால் அதாவது வரவை விடச் செலவு அதிகமாகி அது மீண்டும் சரிக்கட்ட முடியாத அளவிற்கு உயிர்ச் சக்தி அதனுடைய அளவிலே குறைந்து போகும்.

இந்த உயிர்ச் சக்தி அதனுடைய அளவிலே குறைந்து போகும். இந்த உயிர்ச் சக்திக் குறைவினாலே என்ன உண்டாகிறது என்றால் முதலிலே வலி, நோய், பிறகு மரணம் இந்த மூன்றுமே அதனாலே உண்டாகின்றவை தான்.

பயப்படாதீர்கள்! இதற்கு ஒரு வழி இருக்கிறது!

(அடுத்த வாரம்)

# மோகம் ஏன் உண்டாகிறது?

ஆகவே நாம் நல்ல முறையிலே இருக்க வேண்டுமென்றால் உயிர்ச் சக்தியைச் சரியாக வைத்துக் கொள்ள வேண்டும்.

உயிர்ச் சக்தி உடலிலே சரியாக இருக்க வேண்டுமானால் அதைத் தாங்கக் கூடிய சக்தி அதாவது விந்து சக்தியானது போதிய அளவிலேயும் போதிய அழுத்தத்துடனும் இருக்க வேண்டும்.

மின்சாரத்திற்கு மின்கலம் மாதிரி இருக்கக் கூடியது இந்த விந்து சக்தி!

ஆணாக இருந்தாலும் சரி, பெண்ணாக இருந்தாலும் சரி, அதை, Sexual vital fluid என்று சொல்கின்றோம்.

அதை எந்த அளவு பாதுகாத்து, எந்த அளவு சரியான முறையிலே நாம் வைத்துக் கொள்ளுகிறோமோ அந்த அளவிலே உயிர்ச் சக்தியும் இருக்கும்.

உயிர்ச் சக்தியும், விந்துச் சக்தியும் எந்த அளவில் இருக்கின்றதோ, அப்போதுதான் வாழ்க்கையில் உடல் நலம், மன நலம் எல்லாமே நன்றாக இருக்கும்.

இந்த விந்துச் சக்தி ஒரு குறிப்பிட்ட வயதுக்கு மேலே, அதாவது பதினைந்து பதினாறு வயது என்று வைத்துக் கொள்ளுங்கள்... அதற்கு மேலே, உடலிலிருந்து வெளியேற எத்தனிக்கும்.

அதுவரையில் சாதாரணமாகத் தாங்கிக் கொள்ளக் கூடிய அளவிற்கு உடலிலே ஆற்றல் இருக்கின்றது. அதற்கு மேலே மிச்சமாகின்றது. அப்படி உபரியாக உள்ளதை முறைப்படி கழித்து விட வேண்டும். அப்படி கழித்து விடாமல் அடக்கி வைத்தாலும் துன்பந்தான்!

எப்படி என்றால்...

நாம் உணவு உண்கிறோம். சாப்பிட்டதும் ஜீரணமாகி உடலுக்கு தேவையில்லாத பொருட்கள் எல்லாம் கழிவாக வெளியே

வந்துவிடுகின்றன.

அதைப் போன்று தான் விந்துத் திரவமும்! உடலிலே ஒரு குறிப்பிட்ட காலத்திற்கு மேலே வெளியேற வேண்டியது.

அதைக் கட்டி வைத்தால் என்ன ஆகும் என்பதை வைத்திய சாஸ்திரத்திலே தெளிவாகச் சொல்லியிருக்கின்றார்கள்.

''விந்துவை மறிக்குங்
கால் வீக்கம்பிரமேகம்
உந்து வெளி,கல்லடைப்பு
மூடுசுரம்
சந்து கைகால், ஆசனம்
நாபக்கம்
இடுப்பு அவ்வலி நோய்
மார்புவலி
விசன நீர்க்கட்டி
இவையாம்''-

என்ற முறையிலே, அது தடுக்கப்பட்டால்...

சிறுநீரகம் பாதிக்கப்படுகின்றது! விந்துப் பை (sexual gland) பாதிக்கப்படுகின்றது!

அதனாலே உடல் முழுவதும் பலவிதமான துன்பங்கள் உண்டாவதற்கு வழியாகும் என்பதைக் கண்டுபிடித்துள்ளார்கள்.

ஆனால் எவருக்கேனும் 'நான் திருமணமே செய்து கொள்ளப் போவது இல்லை, உடலுறவு வேண்டாம்' என்ற எண்ணம் இருக்குமேயானால் அதற்கு முறையாகச் சில பயிற்சிகள் மற்றும் அதற்குரிய உணவு முறைகள் உண்டு! இவைகளை முறைப்படிக் கையாண்டு வந்தால் சக்தியைச் சமப்படுத்திக் கொள்ள வழியுள்ளது.

இதைத் தெரிந்து கொள்ளாமல் கட்டுப்பாடு மட்டும் செய்ய வேண்டும் என்ற எண்ணத்தை வைத்துக் கொண்டு சிற்றின்பக் கதைகளையும் இன்னும் புலால் உணவு முதலியவைகளையும், அதாவது பால் உணர்வைத் தூண்டக் கூடியவைகளையெல்லாம் செய்து கொண்டே வந்தால் என்ன ஆகும்?

எனவேதான், இந்தக் கல்வி, அதை ஒட்டிய அறிவை... இளம் வயதிலேயே எல்லோருக்கும் வேண்டும்.

**வி**ந்துவினுடைய பெருமை, அதனுடைய மதிப்பு இவற்றை- எல்லோரும் உணரச் செய்ய வேண்டும்.

சிறு வயதிலே அப்படி உணரச் செய்து விட்டால் வெளியேற்றம் அவசியமாகும் பொழுது முறைப்படி வெளியேற்றித் தான் ஆகவேண்டும்.

அதிகமாக வெளியேற்றி விட்டாலும் மனிதன் நஷ்டத்திற்கு ஆளாகி விடுகிறான் என்பதை உணர வேண்டும்.

'வெளியேற்றுவதிலே இன்பம் இருக்கின்றது' என்று அதே மார்க்கத்திலே தொடர்ந்து மனிதன் போகிறான்.

எந்தப் பொருள் உபரியாக இருந்தாலும் கழியும்போது இன்பமாகத்தான் இருக்கும்.

**●● துன்பத்திலிருந்து விடுபடுகின்றோம்: இன்பந்தானே ? அளவிற்கு மேலாக வெளியேற்றம் இருக்குமானால் விளைவு துன்பமே.! ●●**

துன்பத்திலிருந்து விடுபடுகின்றோம்: இன்பந்தானே? அளவிற்கு மேலாக வெளியேற்றம் இருக்குமானால் விளைவு துன்பமே!

சிறுநீர், மலம் எதுவானாலும் சரி, அது கழியும் பொழுது அதிலிருந்து விடுதலை பெறுவதினாலே ஒரு இன்பம் ஏற்படும்.

விந்து கழிவிலே ஒரு தனி இன்பம், கூடுதல் இன்பம் இருப்பதற்குக் காரணம் என்னவென்றால்... அது நேரடியாக ஜீவகாந்த சக்தியையொட்டி இருப்பதனாலே உடல் முழுவதும் ஒரு மின்சார இயக்கம் ஏற்பட்டு, அதனால் ஒரு Trance State மாதிரியாக வருகின்றபோது அது இன்பமாக இருக்கின்றது போல் தெரிகின்றதே தவிர உண்மையில் அது இன்பமல்ல. துன்பத்திற்குத்தான் கூட்டிச் செல்கின்றது - அதிகம் செலவானால்!!

ஆகவே அந்த முறையிலே அதனுடைய இயல்பை மக்கள் உணரும்படிச் செய்ய வேண்டும்.

சரி, வயது வந்தால் எல்லோருக்கும் ஏன் கட்டுப்பாடில்லாமல் அந்தப் பாலுறவுக்கான எண்ணம் உண்டாகின்றது?

அந்த எண்ணம் உண்டாவதே பாவம் என்ற அளவிற்கும், பாலுறவு மற்றும் திருமண வாழ்வே பாவத்திற்கு அடிப்படை என்றும், ஒரு சிலருடைய கருத்தாக இருப்பதைப் பார்க்கின்றோம்.

அது அவசியமில்லை!

ஏனெனில்,

"தகப்பனுடைய ஒரு கழிவை
தாயார் ஏற்று
தன் கழிவை அதனுடனே
சேர்த்துச் சேர்த்து
மிகப் புனித மெனும் இந்த
உடலை ஈந்தாள்



# வேதாத்திரி மகரிஷி

மீண்டும் அவள்
உடல்கழிவைப்
பாலாய் உண்டோம்
சுகப் பிணைப்பின்

அடையாளமான
இந்தச்
சுக்கில சுரோணிதமும்
சேர்ந்து
உருவாய்வந்த
முகப்பினையே உடல்
வளர்ச்சி
பெற்ற பின்னர்
முன் நினைவால்
நாடுவதே
மோகம் ஆகும்"

'ஏன் மோகம் உண்டாகின்றது?' - என்று நீங்கள் கேட்கலாம்.

பதில் இருக்கிறது.

*(அடுத்த வாரம்)*

## வாழ்க வளமுடன்!

## வாழ்க்கைக்கு உதவும் உன்னதத் தொடர்!

வேதாத்திரி மகரிஷி

# குழந்தை பிறப்பில் இவ்வளவு விஷயங்களா?

எந்த உபரி வித்துக் கழிந்து... எந்தச் செயல் மூலமாக இந்த உடல் தோன்றியதோ அந்தச் செயலும் அந்தச் செயலுக்குரிய இடமும் நிலைபெற்று உண்டாயின.

அதாவது, வம்சாவளிப் பதிவுகள் இருக்கின்றன பாருங்கள். அதனாலே, காலத்தாலே, அந்த எண்ணமும் அந்தச் செயலுக்குரிய ஆர்வமும் தானாகவே பிறக்கின்றன.

இது இயற்கை!

இதை உணர்ந்து... 'என்ன செய்ய வேண்டும்? பிறகு எப்படி முறைப்படுத்த வேண்டும்? எவ்வளவு நாளைக்கு அதைக் கட்டுப்படுத்த வேண்டும்?' என ஒவ்வொருவருடைய வாழ்க்கையிலேயும் அதைத் தெரிந்து கொள்ள வேண்டும்.

ஒரு குழந்தை பிறக்கின்றது. நன்றாக இருக்கின்றது. அடுத்த குழந்தை பிறக்கின்றது. வித்தியாசமாக இருக்கின்றது.

'எப்படி?' என்ற கேள்வி எழுப்பப்பட்டது.

அதற்குப் பல காரணங்கள் உண்டு!

ஆராய்ச்சி செய்தபோது பல உண்மைகளை நான் கண்டேன்.

ஒரு குழந்தை உற்பத்தியான காலத்திலே-

சூரியன், சந்திரன் முதலிய நட்சத்திரங்கள், கோள்கள் எல்லாம் எந்தெந்தக் கோணத்தில் எவ்வெவ்வளவு தொலைவில் இருந்து தம்முடைய அலைகளை வீசிக் கொண்டிருந்தன...

ஒவ்வொரு அலையும் ஒவ்வொரு கிரகத்திலிருந்து வீசும்போது அதனுடைய தன்மை எந்த இடத்திலே தாக்குகின்றதோ அதற்கெல்லாம் தகுந்தவாறு விளைவு கொடுத்துத்தான் ஆகும்.

ஆகவே, அந்த நாளிலே எந்தெந்த முறையிலே இருந்ததோ, மீண்டும் இன்னொரு குழந்தை உற்பத்தியாகும்போது அதேமாதிரி இருப்பதற்கு வழியே இல்லை.

அதற்கு மத்தியிலே 'அதே தாய் தந்தையர்களுக்கு... உடல் நலமோ, மன நலமோ எத்தனை முறையிலே வேறு பட்டு இருக்கும்? அதற்குக் காரணம் என்ன?' என்று இப்படி பலதும் பார்க்கின்ற பொழுது-

"கருவமைப்பு, ஆகாரம், காலம்,
தேசம்,
கல்வி, தொழில், அரசாங்கம், கலை
முயற்சி,



பருவம், நட்பு, சந்தர்ப்பம், பல
ஆராய்ச்சி
பழக்கம், வழக்கம், ஒழுக்கம்
இவற்றிற்கேற்ப
உருவமைப்பு குணம் அறிவின்
உயர்வு சீர்த்தி
உடல் வலிவு சுகம் செல்வம்
மனிதருக்குண்டாம்.
தரும் இவற்றில் மாறுதலால்
ஒவ்வொருவர்க்கும்
தனித்தனியே அவ்வ வற்றில்
பேதா பேதம்''

கருவமையும் காலத்திலே... Ovum அந்த முட்டையில் மூன்று நாட்களுக்கு முன்னர்தான் உற்பத்தியாகி இருக்கின்றது.

பூர்த்தியாகும் காலமாகிய மூன்று நாட்களிலே அந்தப் பெண் கடைப்பிடிக்கக் கூடிய செயல்கள்... அவளுடைய மன நிலை, உடல் நிலை, உணவு அத்தனையும் அந்த முட்டைக்கு ஒரு பதிவாக வந்து இதுவரை அந்தப் பெண் எத்தனை ஆண்டுகள் வாழ்ந்திருந்தாலும் அந்த மூன்று நாட்களுக்குரிய செயல்கள் முக்கியத்துவம் பெறுவதை நம்முடைய நூல்களிலே மிக விரிவாக எடுத்தியம்பி உள்ளார்கள்.

அனுபவத்தில் நாம் பார்க்கும் போது அது சரியாகத்தான் இருக்கிறது.

உதாரணமாக-

அந்த நாட்களில் சீப்பு எடுத்து அழுத்தமாகத் தலை வாரினால் ஆண் பிறந்தாலும் பெண் பிறந்தாலும் தலையில் வழுக்கை விழும் என்று நிர்ணயமாகக் கூறியுள்ளார்கள்.

கண்களுக்கு மை இட்டால் கருட பார்வையோ அல்லது கண் கோளாறோ ஏற்படும் என்று நிர்ணயித்துள்ளார்கள்.



கடினமான பொருள் எதையாவது பல்லாலே கடித்தால் சொத்தைப் பல் விழும் என்று கூறியுள்ளார்கள்.

ஒரு பெரிய மரம் இருக்கின்றது வித்திலே அதன் விதையிலே ஒரு சின்ன பொத்தலோ அல்லது ஏதாகிலும் பழுதோ ஏற்பட்டால் அந்த மரத்தையே பாதிக்கின்ற மாதிரி, உற்பத்தியாகின்ற காலத்திலே... அந்த மூன்று நாட்களில் அந்தப் பெண் செய்கின்ற அத்தனை செயல்களுக்குமான விளைவை அந்தக் குழந்தை தாங்க வேண்டியதாக இருக்கும்.

அது மட்டுமல்லாது-

கருப்பையில் இருக்கும் சிசுவின் சரும நிறம், உருவ அமைப்பு இவற்றைப் பார்க்கப் போனால்– அதன் தாய்க்கு யார் யார் அன்பும் நட்பும் உடையவர்களாக இருக்கின்றார்களோ... மாமியார், மாமனாரோ அல்லது கணவனோ அவ்வளவு பேருடைய ஒரு பாகமும் ஒன்று கூடி யாரிடம் அதிகமான பற்றுதலோ, யாரின் நினைவு அடிக்கடி இருக்குமோ அந்த வடிவமைப்பு இருக்கும்.

பத்து மாதம் தாங்கிக் கொண்டிருக்கும் பொழுது தாய்க்கு எந்த மாதிரியான எண்ணம் இருக்குமோ அது மாதிரிதான் குழந்தைக்கு இருக்கும்.

இது மாதிரியான பல விஷயங்கள், கரு அமையும் காலத்திலேயிருந்து உருவாகி– கரு கழியும் காலம் வரையில்– ஒரு பெண்ணின் நடவடிக்கை எப்படி இருக்கின்றதோ அப்படியும்...

அந்தக் கரு அமைந்து வளரும் காலத்திலே... ஆண் அந்தப் பெண்ணுடன் எப்படித் தொடர்பு கொள்கின்றான், எந்த முறையில் பழகி வருகின்றான் என்பதைப் பொறுத்தும் கூட அந்தக் குழந்தை பாதிக்கப்படுகின்றது.

பெண் கருவுற்று இருக்கும்போது முரட்டுத்தனமான இணைப்பு ஏற்பட்டால்

விக்ரமுக்கு, 'கிரிக்கெட் என்றால் என்ன?'- என்று கேட்கிற அளவுதான் அதில் ஈடுபாடு. வீட்டிற்குப் போனால் சினிமாவை மறந்து விடுவார். ஷூட்டிங் ஸ்பாட் வந்துவிட்டால் 'வீடா? என்ன?'- கேட்பார். விரும்பிப் போகும் லொகேஷன் : இவரது பண்ணை வீடு. அங்கே குழந்தைகளோடு மட்டுமல்ல! கிளி, வாத்து, நாய்க்குட்டி, வான்கோழி.. என்று அவற்றோடும்... விரும்பி நேரம் செலவழிப்பார்.

குழந்தைக்கு போலியோ நோய் வரக் கூடும்!

எப்படியென்றால்-

கருப்பையிலே அதிகமான அழுத்தம் விழுகின்ற போது அந்த இடத்திலே ஊறி வரக்கூடிய ஒருவித திரவத்தின் கசிவு அந்தக் குழந்தையின் உருவத்தையே பாதிக்கும்.

கரு அமையும் காலத்திலேயிருந்தே குழந்தையின் வளர்ச்சியை ஆராய்ந்து எழுதி வைத்துள்ளார்கள்.

முதல் மாதத்தில் கம்பம் போலவும் இரண்டாவது மாதத்தில் தலை, முதுகு, முகம்.. மூன்றாம் திங்கள் கைகள், பாதங்களோடு விரல்கள், நான்காம் திங்கள் மூக்கு, முகம் உருவமாம். ஐந்தாம் திங்கள் செவி, நாக்கு, கண்கள், ஆறாம் திங்கள் நகங்கள், ஏழாம் திங்கள் தலை மயிர், நரம்பு, எலும்பு, எட்டாம் திங்கள் இரண்டு பக்கமும் பூர்த்தியாகி விடும். ஒன்பதாம் திங்கள் பிறப்பதற்குத் தயாராகக் குழந்தை கருப்பையிலே நிறைவு பெறுகின்றது.

எவ்வாறு இத்துணை துல்லியமாகக் கண்டுபிடித்தார்கள் என்றால், கர்ப்பமாகிய ஒரு பெண் மரணம் அடைந்தால் சடலத்தை அப்படியே புதைத்து அல்லது எரித்து விட்டால் பாவம் என்று கூறி அதை அறுத்து குழந்தையின் சடலத்தை வெளியே எடுத்து, எந்தெந்த மாதத்திலே உருவம் எப்படி இருக்கின்றது என்று பார்ப்பதற்காக அந்தக்கால ஆராய்ச்சியாளர்கள் சாதுரியமாக இப்படி ஒரு சடங்கை உருவாக்கி குழந்தையின் பல்வேறுபட்ட உருவங்களைக் கண்டுபிடித்தார்கள்.

ஒவ்வொரு அவயவமும் உற்பத்தியாகின்ற காலத்திலே வன்முறைச் சக்தி எந்தெந்த அவயவத்தைத் தாக்குகின்றதோ அது எல்லாம் குழந்தையைப் பாதிக்கத்தான் செய்யும்.

எல்லா விளைவிற்கும் ஒரு காரணம் உண்டு என்பதை மறுக்க இயலாது.

சில இடங்களிலே செயலுக்கும் விளைவிற்கும் நேரடியாக நாம் இப்பொழுதே இணைப்புக் கொடுக்க முடியாது. எங்கேயோ விளைவு இருக்கும். செயல் இங்கே இருக்கும்.

இடைக்காலம் நீண்டதனாலே நாம் தெரிந்து கொள்ள முடியாமல் வேண்டுமானால் போகலாம். ஆனால் ஒரு செயலிருந்தால் அதற்கு ஒரு விளைவு நிச்சயம் உண்டு. அதேபோல விளைவு இருந்தால் அதற்கு ஒரு காரணம் உண்டு என்பது இயற்கை நியதி.

அதைத் தவிர்க்கவே முடியாது.

இந்த முறையிலே வித்துவினுடைய பெருமையை மனிதன் உணர வேண்டும்.

உணர்ந்துகொண்டால் அதை முறைப்படுத்திக் கொள்ளக் கூடிய ஒரு பொறுப்பு உணர்ச்சி அப்போதுதான் உண்டாகும்.

அங்கேதான் உணர்ச்சிகளைக் கட்டுப்படுத்திக் கொண்டு முறையாக நெறியோடு வாழக்கூடிய ஒரு அற உணர்வு உண்டாகும்.

எனவே இந்த முறையில் எல்லாம் இதை விளக்கியாக வேண்டியதாய் உள்ளது விரித்தும் கூற வேண்டியதாய் உள்ளது.

(அடுத்த வாரம்)

# குடும்ப வாழ்க்கை வேண்டுமா? வேண்டாமா?

பாலுறவு பற்றிய கல்வி இன்றைய உலகிற்கு மிக மிக அவசியமான ஒன்று.

தற்போதுள்ள கல்வி முறையில் இரண்டு வகைகளிலே இருட்டடிப்பு வந்திருக்கிறது. ஒன்று பால் உறவில். அடுத்தது ஆன்மீகத்தில்.

'ஆன்மீக உறவு' மனிதனுக்குத் தேவையே இல்லை என ஒரு சாரார் ஒதுக்கி விட்டனர்.

பால் உறவைப் பொறுத்த மட்டிலே அது அவசியம் என்றாலும், அது பாவம், கேவலம் என்ற ஒரு கருத்தும்... அதைத் தவிர வேறு இன்பமே இல்லை என்ற நினைப்பும் நிலவியுள்ளன.

இந்தக் குழப்பங்கள் தீர்ந்து தெளிவான முறையிலே அறிவு வர வேண்டும்.

பால் உறவைப் பற்றி ஒருவன் எண்ணத் தொடங்கி விட்டால் வேறு எதிலேயும் அவன் நினைவு போகாது என்று சொல்லப்படுகிறது.

ஆனால் அந்த ஒரே ஒரு உறுத்தல், நாட்டம் சரியான முறையிலே தீர்க்க முடியாமல் போனால் அந்த நினை




ாழ்க வளமுடன்!

வாழ்க்கைக்கு உதவும் உன்னதத் தொடர்!

வேதாத்திரி மகரிஷி

வைத் தவிர, வேறு ஒரு நினைவும் வராது.

ஏனெனில் உடலினுடைய தேவைகள், பசிக்கு முறைப்படி காலத்தோடு உணவு கொள்ளவில்லையென்றால் எந்தப் பணியைச் செய்ய முடியும்?

அதேபோல

ஒவ்வொரு உணர்ச்சியும் காலத்தாலே அதை முறையாகத் தீர்த்துக் கொள்வதற்கு வழிவகுக்கவில்லையென்றால் என்ன ஆகும்?

சாக்கடைக்குக் கால்வாய் கட்டவில்லை என்றால் வீடு என்னவாகும்? வீட்டிலேதான் எல்லா அசுத்தமும் அழுக்கும் தேங்கும்.

அதேபோல பாலுறவிற்கு ஒரு குறிப்பிட்ட முறைப்படி வாய்க்கால் ஒன்று கட்டாயம் வேண்டும்.

அதே நேரத்திலே- இந்த நாட்டிலே இன்னொரு நம்பிக்கை தொடர்ந்து இருந்து வந்திருக்கிறது. அந்தக் காலத்தில் சொல்வார்கள்:

'குழந்தை இல்லை என்றால் கணவன் மனைவிக்கு மோட்சம் கிட்டாது. அவர்கள் நரகத்திற்குப் போவார்கள்!' - என்ற கருத்து.

இதனை எந்தக் காலகட்டத்தில் சொல்லியிருக்கக் கூடும் என்றால் ஜனத்தொகை வெகு குறைவாக இருந்த போது, ஜனத்தொகையைப் பெருக்கித்தான் ஆகவேண்டும் என்ற நிலையில் அவ்வாறு சொல்லியிருப்பார்கள்

இன்றைக்கு அது பொருந்துமா?

இப்போது அதை மாற்றிக் கொள்ளத்தான் வேண்டும்.

ஒரு குழந்தைகக்கு மேலே இரண்டு குழந்தைகள் பெற்றால் நரகம் அனுபவிக்க நேரிடும் என்று சொல்ல வேண்டும்.

உண்மையிலே, அனுபவத்திலே எப்படி இருக்கிறது? இரண்டு குழந்தைகளல்ல, ஒரு குழந்தையே போதும். நரகம் ஒன்றை உருவாக்குவதை நாம் ஆங்காங்கே காண்கிறோம்.

அந்த ஒரு குழந்தை பிறந்து வளர்ந்து அதற்கு இரவும் பகலும் அதன் தாய் படும் இன்னலும் அதன் பிறகு எங்காவது தூக்கிச் செல்கையில் இரயிலிலும், பஸ்ஸிலும், இடிபடுவதும், வளர்த்த பிறகு அதுவே பெற்றோரைப் பகைத்துக்கொள்வதும். இது எல்லாம் இன்றைக்கும் இருக்கின்றது அல்லவா?

இரண்டு தலைமுறைகளுக்கான இடைவெளி அதிகமாக, ஒவ்வொரு குழந்தையும் வளர்ந்து விட்டபிறகு பெற்றோர்களால் கட்டுப்படுத்த முடியாத ஒரு நிலைக்கு வந்து விடுகிறது.



குங்குமம்
TVS MOTOR COMPANY
இணைந்து வழங்கும்
வாரம் ஒருவருக்கு
ஒரு பைக்!


இன்றைய சமுதாயச் சூழ்நிலையில் குழந்தை பெறுவது பாவம் என்றுதான் சட்டம் வைக்க வேண்டும். ஆனால் இயற்கையை ஒட்டிப் பார்க்கின்ற போது முறையான வழியிலே யார் யார் குடும்ப வாழ்க்கையை மேற்கொள்ள விரும்புகிறார்களோ அவர்களுக்கு முறைப்படி குடும்ப வாழ்க்கையை மேற்கொள்ள வழி வகுக்க வேண்டும்.

அதே நேரத்தில் குடும்ப வாழ்க்கையை விரும்பாதவர்கள் இருக்கின்றார்கள். அவர்களையும் எண்ணிப் பார்க்க வேண்டும்.

நூற்றுக்கணக்கான ஆண்களும் பெண்களும் குடும்ப வாழ்க்கையிலுள்ள இன்னல்களைக் கண்டு அஞ்சி, குடும்ப வாழ்வுக்கு நாட்டம் கொள்ளாது இருக்கின்றார்கள். அவர்களுக்கெல்லாம் போக்கிடமின்றி

ஒரு தவிப்பு, தேக்கம் இளைஞர்கள் மத்தியில் இருப்பதை இன்று நாம் பார்க்கிறோம்.

அவர்கள் எல்லாம் ஒழுங்காக வாழ வேண்டும், சேவை செய்ய வேண்டும். அவர்கள் நல்லபடியாக இருக்க அதற்குரிய பயிற்சிகள், உணவு, உரிய இடம் இவைகளெல்லாம்கூட சமுதாயம் ஏற்படுத்தித் தர வேண்டும்.

அதற்கு எல்லாம் இந்தப் பால் உறவுக் கல்வி பற்றிய கருத்து முறையானபடி உருவாகி சமுதாயத்திலே வளர வளர சமுதாயம் பயனடையும்.

பால் உறவு என்பது இயற்கையின் பாற்பட்டது. அந்த இயற்கைக்கு ஏற்றபடி வாழ்க்கை முறை அமைய வேண்டும்.

எந்த எந்த இடங்களிலே சிக்கல்கள் இருக்கின்றனவோ அந்தச் சிக்கல்களை எல்லாம் தவிர்க்க வேண்டும்.

திருமணத்தில் கூட பல சிக்கல்கள் இருக்கின்றன.

அந்தச் சிக்கல்களை எல்லாம் தவிர்த்துப் புது மாதிரியான திருமணத்திற்கு வழி செய்து -இப்போது எத்தனையோ திருமணங்கள் குறைந்த பொருட் செலவில் நடைபெற்று வருகின்றன! எனக்குத் தெரிந்த வரையில் நம் நாட்டில் 80 சதவீதம் குடும்பங்கள் சொத்தை இழந்து சமுதாயத்தில் சங்கடப்படுவதெல்லாம் திருமணத்தில் பட்ட கடனால்தான். அதுவே ஒரு தலைமுறை, இரண்டு தலைமுறையாக வந்து இருக்கக் கூடியதையெல்லாம் உறிஞ்சிக் கொண்டு போய் விடுகின்றது.

இதுமாதிரி இருக்கின்றதாலே திருமண முறைகளில் சமுதாயத்திலே இப்போது ஒரு விழிப்புணர்ச்சி வேண்டும்.

இப்பொழுது குழந்தைகள் வளருகின்றபோதே, குறிப்பாகப் பெண் குழந்தைகள் வயதிற்கு வந்தபின் படித்துக் கொண்டிருக்கும்போதே "ஐயோ, பெண்ணிற்கு வயதாகி விட்டதே; திருமணம் செய்துவிட வேண்டாமா?'' என்று பேசிப் பேசி அங்கலாய்த்து அங்கலாய்த்து அந்த ஒன்றைத் தவிர இளைய தலைமுறையினருக்கு வேறெந்த நினைவும் வராமல் ஆக்கி வைத்து விடுகின்றார்கள்.



88வது அறிவுத்திறன் போட்டியில் வெற்றி பெற்ற **வி.ராஜேந்திரன்** தனது குடும்பத்துடன்!

அதுமாதிரி அல்லாது திருமணம் செய்து கொள்ளாமலும் இருக்கலாம். அதிலே நன்மை இருக்கின்றது என்பதை விளக்கி, இளமை நோன்பை முறையாக, சரியாகக் கடைப்பிடிப்பதற்கு எல்லோருக்கும் ஒரு நல்ல உடற்பயிற்சி, உளப்பயிற்சி இருக்கின்றது.

அது என்னவென்றால், இந்த உலகம் வேகமாகச் சுற்றுவதாலே அதன் மேற்பரப்பில் வாழும் நமக்கு வயோதிகம் வருகிறது

ஒவ்வொரு நாளும் உடலுக்கும் உயிருக்கும் இடைவெளி அதிகமாகிக் கொண்டே போகிறது.

உலக உருண்டை சுழல்வதாலே மனிதனுக்கு விந்து கசிந்தும் வீணாகியும் இரண்டு வகைகளிலே விந்து கழிவு ஏற்படுகிறது.

அதிர வேண்டாம்!

உண்மை!

(அடுத்த இதழில்)

**உ**யிர்த்திரவம் இப்படி வீண் போவது மட்டுமல்லாமல் கசிவு என்ற அளவிலே கீழே தேங்க விடுகின்ற போதுதான் பாலுணர்ச்சி அதிகரிக்கின்றது.

அதுபோன்று யார் யாருக்கு இருக்கின்றதோ அவர்களுக்கு எல்லாம் ஒரு பயிற்சியை நாம் சொல்லித் தருகின்றோம்.

பத்துநாட்கள் அல்லது ஒரு மாதம் அந்தப் பயிற்சியைச் செய்து பாருங்கள்.

'பால் சக்தி' (Potency) கூடி வரும்!

ஆனால் தீவிரமான ஆசை அதில் ஏற்படாது.

அப்படி அதைச் சரிப்படுத்தி வித்தினைக் கெட்டிப்படச்




# என்ன தேவை?

என்ன தேவை?

39

செய்து விட்டோமேயானால் அந்த அளவிலே உயிர்ச்சக்தியும் அதிகமாகும்.

அதே சக்தியை ஆன்மீக அறிவிற்கு எவ்வளவு வேண்டுமோ அந்த அளவிற்கு உயர்த்தியும் கொள்ளலாம்.

மனிதன் நோய்வாய்ப்படுவது, சங்கடப்படுவது எல்லாமே இந்த விந்துக் கழிவு அதிகமாகப் போவதினாலே தான்.

ஆகவே, அந்தக் கல்வியைச் சரியாகக் கற்றுக் கொடுத்து அந்தப் பயிற்சியையும் சரியாகத் தெரிந்து கொண்டால் இந்தப் பிறப்பு எண்ணிக்கை இன்று அதிகமாக இருக்கிறது பாருங்கள்; அது தானாகவே ஒரு பத்து ஆண்டு காலத்தில் சரியாகி விடும்.

இந்தப் பயிற்சியை முதன் முதலில் இந்தியாவிலே மகளிர் கல்லூரிகளில் தான் தொடங்க வேண்டும். பின்னர் ஆண்கள் கல்லூரியில் ஆரம்பிக்க வேண்டும்.

பெண்கள், ஆண்கள் இரு சாரரும் பயிற்சியைச் செய்து வரவேண்டும்.

திருமணம் வேண்டும் என்கிறவர்கள் செய்துகொண்டு குடும்ப வாழ்க்கையை மேற்கொள்ளலாம்.

வேண்டாம் என்று முடிவெடுத்தவர்கள் அப்படியே நல்ல முறையிலே அமைதியாக இருக்கவும்.

ஜனத் தொகை குறைந்தும், வாழக் கூடிய மக்கள் ஒழுக்கமாகவும், பண்பாளர்களாகவும் வாழ முடியும்.

வாழ்க்கையை விளங்கிக்கொண்டு, காரணத்தையும் உணர்ந்து கொண்டு நடத்தினால் அது வெள்ளத்தில் படகு விடுவதை ஒக்கும். மாறாக, அவ்விளக்கம் இல்லாமல் நடத்தினால் அது வெள்ளத்தில் அகப்பட்ட துரும்பின் நிலையேயாகும்.

வாழ்க்கையோ, இயற்கை, சமுதாயம், தான் என்ற மூன்றின் இணைப்பில் நடைபெறுகிறது. இவற்றில் சமுதாயம் என்ற தத்துவத்தை ஆராய்வதே நாம் இப்போது எடுத்துக் கொண்டுள்ள வாழ்க்கைத் தத்துவ ஆராய்ச்சியாகும்.

வாழ்க்கை வெற்றிமிக்கதாக அமைய வேண்டுமாயின், நாம் இயற்கையையும், சமுதாயத்தையும் உணர்ந்து, மதித்து வாழ வேண்டும். அதோடு எந்தக் காரியத்துக்காக இந்தப் பிறவியை எடுத்து வந்தோமோ, அந்த நோக்கத்திற்கு ஒத்ததாக, அதாவது பிறவித் தொடரை முடித்துக்கொண்டு வீடு பேறு எய்த வேண்டும் என்ற அந்த உயரிய நோக்கத்திற்கு ஒத்ததாக வாழும் முறை அமைய வேண்டும்.

அப்போதுதான் துன்பத்தைத் தோற்றுவித்துக் கொள்ளாமலும் வாழலாம்.

தவறுதலாக நாம் தோற்றுவித்துக் கொள்ளும் துன்பத்திலிருந்தும் மீண்டு கொள்ளலாம்.

பிறரால் தோன்றக்கூடிய துன்பங்களிலிருந்தும் நம்மை நாம் காத்துக் கொள்ளலாம்.

எனவே, வாழ்க்கையின் தத்துவத்தைப் பற்றிய தெளிவான விளக்கம் பெற்று அதன்படியே வாழ்ந்து வரவேண்டும்.

வாழ்க்கைக்குத் தேவையான அடிப்படையான தத்துவங்கள் மொத்தம் பன்னிரெண்டு. அவை முறையே (1) தேவைகள் மூன்று (2) காப்புகள் மூன்று (3) அறநெறிகள்

■■
**பசி குடலில் ஏற்படுவதாக நினைக்கிறோம். அது தவறு. சக்தி இழப்பின் காரணமாக பசி உடல் முழுவதும் தான் ஏற்படுகின்றது.**
■■

மூன்று (4) அறிவுநிலைப்படிகள் மூன்று.

ஒவ்வொரு ஜீவனுக்கும் பொதுவான இயற்கைத் தேவைகள் மூன்று (1) பசி, தாகம் ஆகியவற்றால் எழும் துன்பங்களை ஒட்டி ஏற்படும் தேவைகள். (2) வெப்ப, தட்ப மாறுதலால் ஏற்படும் தேவைகள், (3) உடல் கழிவுப் பொருள்களின் உந்து வேகத்தின் விளைவால் எழும் தேவைகள்.

முதலில் பசி, தாகத்தின் காரணத்தால் எழும் தேவைகளைப் பற்றிப் பார்ப்போமா?

உடலியக்கத்தின் காரணமாக உயிர் ஆற்றல் செலவாகிறது. அப்போது உடலில் உயிராற்றல் குறைவு ஏற்படுகிறது. இதுவே பசியாக உணரப்படுகிறது.



பசி குடலில் ஏற்படுவதாக நினைக்கிறோம். இது தவறு. சக்தி இழப்பின் காரணமாக பசி உடல் முழுவதும்தான் ஏற்படுகின்றது.

அதற்கு நாம் அளிக்கும் உணவுச் செரிமானம் மட்டும்தான் குடலில் நடைபெறுகிறது.

இந்தப் பசித்துன்பத்தைப் போக்க உணவுப் பொருள்கள் நமக்குத் தேவை ஆகின்றன. தாகத்திற்கு நீர் தேவைப்படுகின்றது.

சரி, வெப்ப, தட்ப ஏற்றத்தாழ்வுகளால் விளையும் துன்பங்களை வெல்ல எழும் தேவைகள் என்ன?

நமது உடலில் குறிப்பிட்ட அளவாகச் சூடு இருந்துகொண்டு இருக்க வேண்டும். அப்போதுதான் உடலியக்கம் சீராக நடைபெறும்.

உடலைச் சுற்றியுள்ள சூழ்நிலைகளில் வெப்பத்தின் அளவு கூடுதலையோ, குறைவையோ அடையும் போது அந்த மாறுதல் நம் உடலையும், உடல் இயக்கத்திறனையும் பாதிக்கிறது. நமக்குத் துன்ப உணர்வு தோன்றுகிறது. அப்போது ஆடை, வீடு முதலிய பொருள்களும், வேறு சில சாதனங்களும் தேவையாகின்றன.

அடுத்ததாய் உடல் கழிவுப் பொருள்களின் உந்துவேகத்தின் காரணமாக ஏற்படும் தேவைகள் பற்றி -

உடல் இயக்கம் நடைபெறுவதால் அப்போதைக்கப்போது அதிலிருந்து சில கழிவுப் பொருள்கள் தோன்றிக் கொண்டிருக்கின்றன.

அவற்றின் வெளியேற்ற வேகம் உடலால் துன்பமாக உணரப்படுகின்றது.

இத்துன்பத்தைப் போக்கிக் கொள்ள சில வசதிகள் தேவைப்படுகின்றன.

ஆணுக்குப் பெண்ணிடமும், பெண்ணிற்கு ஆணிடமும் ஏற்படும் நட்பும் இவ்வகைத் தேவையின்பாற் பட்டதே.

காப்புகள் மூன்று என்றோமே, என்னென்ன?

இதோ பதில் -

மனித வாழ்க்கை துன்பமின்றியும், தடையின்றியும் தொடர்ந்து நடைபெற வேண்டுமானால் மனிதனுக்குச் சில பாதுகாப்புகள் தேவைப்படுகின்றன. இல்லையெனில் அதன் காரணமாகத் துன்பம் ஏற்படலாம். அத்துன்பம் பெருகி வாழ்க்கையே முடிந்துவிடலாம். அந்தப் பாதுகாப்புகள் வருமாறு: (1) வேற்றுயிர்ப் பகை (2) இயற்கைச் சீற்றத்திலிருந்து காப்பு (3) தற்செயலான விபத்துக்களிலிருந்து காப்பு.

(அடுத்த வாரம்)

முதலில் வேற்றுயிர்ப் பகையிலிருந்து பாதுகாப்பு பற்றிப் பார்க்கலாமா?

உணவு மற்றும் பாதுகாப்புக் காரணமாக மனிதனுக்குப் பிற உயிர்களிடமும், பிற மனிதர்களிடமும் பகை ஏற்படுகின்றது. வேறு சில காரணங்களுக்காகவும், மனிதர்களுக்கிடையே பகை ஏற்படுகிறது. இந்தப் பகையினால் தோன்றும் விளைவுகளிலிருந்து ஒவ்வொரு மனிதனுக்கும் காப்பு வேண்டும்.

அடுத்ததாய் இயற்கைச் சீற்றத்திலிருந்து பாதுகாப்பு.

இயற்கை நிகழ்ச்சிகளில் அதீதங்களான பூகம்பம், எரிமலை, வெள்ளம், கடும்கோடை முதலிய சீற்றங்களின் விளைவுகளிலிருந்தும் மனிதனுக்குக் காப்புக் கிடைத்தால்தான் அவன் வாழ்வு இனியதாக அமையும்.

இப்போது தற்செயலான விபத்துக்களிலிருந்து பாதுகாப்பு பற்றிப் பேசுவோம்.

ஒரு மனிதனுடைய திட்டமிட்ட செயல்களுக்கிடையில் பிற மனிதர்களுடைய திட்டமிட்ட செயல்களும், வெறும் சந்தர்ப்பச் சூழ்நிலைகளால் மட்டுமே தற்செயலாக நடைபெறும் சில நிகழ்ச்சிகளும் கூட அவன் வாழ்க்கையைப் பாதித்து விடக் கூடும்.

எனவே இத்தகைய விபத்துக்களிலிருந்தும் மனிதனுக்குப் பாதுகாப்பு வேண்டும்.

மேற்சொன்ன இந்த ஆறு தத்துவமும் மனிதனுக்கு மட்டுமின்றி எல்லா உயிரினங்களுக்கும் அவசியமாகும்.

ஆனால் பின்வரும் ஆறு தத்துவங்கள் மனிதனுக்கு மட்டுமே சிறப்பானவையாகும்.

மனிதன் சமுதாயமாகச் சேர்ந்து வாழப் பழகிவிட்டான். இனி இந்த நிலையை மாற்றிக்கொண்டு மிருகங்களைப்போல் தனித் தனியாக வாழ முடியாது.

ஏனென்றால் ஒவ்வொரு மனிதனுக்கும் பலபேருடைய உழைப்புத் தேவைப்படுகிறது.



அதேபோல ஒரு தனிமனிதனுடைய உழைப்பின் பலனும் சேர்ந்து சமுதாய வளம் உருவாகிறது.

எல்லோரும் கூடிச் சமுதாய வளத்தைத் துய்க்கிறோம்.

இந்த நிலைக்குக் காரணம் மனிதன் இயற்கையில் கிடைக்கும் பொருள்களை அப்படியே உபயோகிக்காததுதான்.

மிருகங்களைப் போலல்லாது ஒவ்வொரு பொருளுக்கும் சிலபல மாற்றங்களைச் செயற்கையாகக் கொடுத்தும், ஏன், கலையழகு கொடுத்தும்கூட அவன் உபயோகிக்கக் கற்றுக்கொண்டான், பழகிக் கொண்டான்.

இந்த நிலையில் குழப்பம் விளையாமல் இருக்கவும், மிருகங்களுக்குத் தேவைப் படாத ஒன்று மனிதனுக்குத் தேவைப்படுகிறது.

அதுதான் அறநெறி நிலைப் படிகள் என்ற மூன்று.

அந்த அறநெறிதான் மனித குலத்தையே காத்து வருகின்றது. அது ஓரளவிற்காவது இன்று நின்று நிலவிவருவதால்தான் மனிதகுலம் இந்த அளவிலாவது இருக்கிறது.

அறநெறிகள் அறவே ஒழிந்தால் மனிதகுலம் பூண்டற்றுப் போய் விடும்.

இந்த அறநெறி அழியாமல் பாதுகாக்க எழுந்தவையே இன்று உலகிலுள்ள மதங்கள் எல்லாம்.

அந்த அறநெறிகள் மூன்று:



அவை (1) ஒழுக்கம் (2) கடமை (3) ஈகை என்பனவாகும்.

**ஒழுக்கம் எத்தனை முக்கியம்?**

செயலுக்கு ஒரு விளைவு உண்டு. ஒரு மனிதனின் செயல் அவனையும் பாதிக்கலாம். பிறரையும் பாதிக்கலாம்.

எனவே துன்பம் தனக்கோ, பிறர்க்கோ தோன்றாமல் ஒவ்வொருவரும் தத்தம் செயலை வகுத்துக் கொள்ள வேண்டும்.

அத்துன்பம் உடலுக்கும் கூடாது. அறிவிற்கும் கூடாது.

அது உடனேயும் தோன்றக் கூடாது; எதிர்காலத்திலும் தோன்றக் கூடாது.

அத்தகு செயல்களை மட்டும் புரிதலையே ஒழுக்கம் என்கிறோம்.

தனக்கோ, பிறர்க்கோ, தற்காலத்திலோ, பிற்காலத்திலோ, அறிவிற்கோ, உடலுணர்ச்சிக்கோ துன்பம் தராத செயல்கள் எல்லாம் புண்ணியம்! துன்பம் தந்தால் அவை பாவம்!

இந்தச் சட்டத்தை உணர்ந்து, மதித்து ஏற்றவாறு செயலாற்றி வாழ்தலே ஒழுக்கம்.

ஒழுக்கத்தை ஒருவர் உயிரைப் போல் ஓம்பி வாழ்ந்தால் பிறர் கருத்துக்கும் தேவைக்கும் மதிப்புக் கொடுத்துத் தன் தேவையையும் கருத்தையும் நிறைவு செய்து கொள்ளும் பெருந்தகைமை இயல்பாகும்.

**கடமை எத்தனை அவசியம்?**

ஒவ்வொரு மனிதனும் பெற்றிருக்கும் இந்த உடலும், அறிவும், சமுதாயத்திலிருந்து அவன் பெற்றவையாகும்.

மேலும் அவ்வப்போது அவன் அனுபோகிக்கும் பொருட்களும் சமுதாயக் கூட்டுறவில் பெற்றதன்றி தனியொருவன் காரணமாக முடியாது.

ஒரு போர்வையை எடுத்துக் கொள்ளுங்கள். அவை இங்கு வந்து சேர்வதற்குள், அவற்றை உருவாக்கியது முதற்கொண்டு எத்தனை பேருடைய உழைப்புத் தேவைப்பட்டிருக்கும்?

## சின்னச் சின்ன

**கு**ளிர்ந்த தண்ணீரில், தக்காளியை சிறிது நேரம் இருத்தி வைத்து விட்டு நறுக்கினால், கெட்டியாகி, சாறு சிந்தாமல் எளிதாக நறுக்கலாம்..!

**பி**ரிட்ஜில் வைக்கும் முன்; பச்சை மிளகாயின் தலையைக் கிள்ளி விட்டு வைத்தால் நீண்ட நாட்கள் கெடாமல் இருக்கும்...

-ராஜி.

எத்தனை தலைமுறையினரது அனுபவ ஆராய்ச்சியறிவு தேவையாக இருந்திருக்கும்?

எனவே, ஈடு செய்ய முடியாத அளவில் சமுதாயத்தின்பால் நாம் கடன்பட்டிருக்கிறோம்.

ஒவ்வொரு கணமும் அந்தக் கடன் கூடிக்கொண்டே போகிறது. இந்தக் கடனை முடிந்த அளவு தீர்க்க எடுக்கும் முயற்சியே கடமை.

ஒவ்வொருவரும் அவரவர் பெற்றிருக்கும் உடலாற்றலையும், அறிவாற்றலையும் அவ்வப்போதைய தேவைக்

கும், வாய்ப்புக்குப் ஏற்றவாறு கரவில்லாமல் சமுதாயத்திற்கு அர்ப்பணம் செய்வதே கடமை.

இதை நீங்கள் ஒவ்வொருவரும் அவரவர் தகுதிக்கும், நிலைமைக்கும் பொருத்திப் பார்த்துக் கொள்ளுங் கள்.

இவ்வழியில் ஒவ்வொருவரும் உணர்ந்து அவரவர்க்கு ஏற்றவாறு கடமையாற்றவில்லை என்றால் சமுதாயத்தின் வளம் குறையும்.

அந்த அளவிற்கு ஒவ்வொரு வரின் அனுபோகப் பங்கும் குறை யும்.

***குறிப்புகள்***



இம் முறையில் சமுதாய வளம் குறைந்ததன் காரணமே இன்று உலகில் காணும் பற்றாக்குறை, வறுமை போன்ற துன்பங்கள் ஆகும்.

மேலே சொன்ன முறையில் எல்லாரும் கடமை அறம் புரிந்தால் மனிதகுலத்திற்கு இல்லாமை என்ற துன்பமே ஏற்படாது.

*ஈகையின் சிறப்பு யாது?*

மனித குலத்திற்கு உள்ள சிறப்புகளில் ஒன்று பிறர் படும் துன்பத்தைக் கண்டு இரங்கலும் அத் துன்பத்தைப் போக்க முயலுவதும் ஆகும்.

தாமே உழைத்துத் தங்கள் வாழ்க்கைத் தேவைப் பொருள் களைப் பெற்றுக்கொள்ள முடி யாதவர்களின் உதவிக்கு உழைக்க முடிந்தவர்கள் போவது. அந்த வகையில் எழுந்த செயல் ஓர் சிறந்த பண்பாகும். இதுவே ஈகையாக மலர்ந்தது.

வாழமுடியாதவர்களையும், வாழத்தெரியாதவர்களையும், வாழ்வை இழந்தவர்களையும், அந்தச் சிறந்த பண்பால் ஏற்றுக் காப்பது சமுதாய நலத்தைக் காக்கும் நற்செயலாகும்.

எல்லோருமே ஈகையை மேற் கொள்ள வேண்டும். அவரவரும் தங்கள் உழைப்பின் பலனிலே ஒரு பகுதியை ஒதுக்கி வைத்து ஈகையாக்க வேண்டும்.

ஈகையால் ஈபவரின் மனமும் லேசாகும். ஏற்பவரின் வாழ்வும் வளமாகும். எனவே இருதரப்பிலும் நலம் பயப்பதாகும்.

ஒவ்வொருவர் செய்யும் தவறுகளும் அவரை மட்டுமின்றி ஓரளவில் சமுதாயத்தையும் பாதிக் ன்றன.

அறிவுநிலை மேம்படாதவர்கள் செய்யும் தவறுகள் சமுதாயத்தைப் பெரிதும் பாதித்து வருகின்றன.

இந்த நிலை தோன்றாமல் இருக்கவும் வளராமல் இருக்கவும் ஒவ்வொருவரும் தத்தம் அறிவை உயர்ந்த நிலையில் வைத்துக் கொள்ள வேண்டும்.

அந்த அறிவு நிலைப்படிகள் மூன்று: (1) நம்பிக்கை (2) விளக்கம் (3) முழுமைப்பேறு.

*(அடுத்த வாரம்)*

அந்த மூன்று அறிவு நிலைப் படிகள் இவைகள்தாம்.

1. நம்பிக்கை
2. விளக்கம்
3. முழுமைப்பேறு.

ஐந்து புலன்களால் இன்ப துன்பங்களைத் துய்க்கும் மனிதனுக்கு அவற்றிற்கு மேலாக ஒருநிலை உண்டு. அதுதான் ஆறாவது அறிவு நிலை.

புலன்களால் உணர முடியாத பேராற்றலே அது.

உடல், உயிர், மெய்ப்பொருள் என்ற மூன்று நிலைகளையும் இணைப்பாக உடையதே ஜீவன்.

உயிர்களிலே சிறந்த மனிதன் அறிவு புலன் வரையில் செயல்புரியும்போது உடல்தான், உடல் கருவிகளின் ஆற்றல்தான் அதற்கு இயக்க எல்லை.

அது உயிர்நிலையில் நின்று செயலாற்றும்போது இயங்கும் பிரபஞ்ச முழுமையும் அதற்கு இயக்கக்களம்.

முழுமை பெற்று மெய்ப்பொருள் ஆகும்போது இயங்கும் பிரபஞ்சத்தைக் கடந்து அதைத் தோற்றியும் இயக்கியும் காத்து வரும் பெருவெளி வரையில் அதற்கு நிலைக்களன்.

# ஆலய வழிபாடு எது?



## வேதாத்திரி மகரிஷி

இந்த மூன்றுவித இயக்க எல்லையைக் கொண்டு ஆன்மாவை மூன்று பெயர்களால் அழைப்பதுண்டு.

அவை காமதேனு, கற்பகம், சிந்தாமணி. இவற்றில் காமதேனு என்பது ஆன்மாவின் அறிவு வளர்ச்சியில் முதல் கட்டத்தை குறிப்பிடுகிறது. புலன்கள் வரையில் கட்டுப்பட்ட இயக்கங்களையும் விளைவுகளையும் சித்தரிக்கிறது.

காமதேனு என்றால் என்ன?

தேனு என்பது பசு. ஆன்மீக

இம்மூன்று நிலைகளிலும் அதனதன் எல்லைவரையில் நின்றும், விரிந்தும், ஒடுங்கியும் இயங்க முடியும்.

**உடல்–உயிர்– மெய்ப்பொருள் பற்றி அறிவோமா?**

1) உடலுக்கு மையப்புள்ளி ஒன்று உண்டு. அதுதான் வித்து. சுற்று எல்லை உண்டு.

2) உயிருக்கு மையப்புள்ளி உண்டு. அது வித்து. அதற்குச் சுற்றுவட்டம் இல்லை. அப்படியெனில் பிரபஞ்சம் முழுவதும் அது பரவி நின்று ஆற்றும் இயல்பு கொண்டது.

3) மெய்ப்பொருளுக்கு மையப் புள்ளியும் இல்லை. சுற்றுவட்டமும் இல்லை.

உலகில் பசு என்ற சொல் ஆன்மாவைக் குறிக்கும்.

காமம் என்பது இச்சையைக் குறிக்கும் சொல். காமதேனு எனில் இச்சையை இயல்பாக உடைய ஆன்மா என்று பொருள்.

உடல் வரையில் எல்லை கட்டி புலன்கள் வழியே புறப்பொருள் கவர்ச்சியால் ஈர்க்கப்பெற்று ஆன்மா செயல் புரியும்போது சலிப்பும் துன்பமும் தரும். இவ்வகையில் இச்சைக்கே ஆன்மாவின் ஆற்றல் பயன்படும். முதல்கட்டம் காமதேனு.

**க**ற்பகம்- விளக்கம் என்ன?

கற்பு + அகம் என்ற சொற்களின் இணைப்புத் தான் கற்பகம்.

இங்கு ஆன்மா உயிர் வரையில் உணர்ந்து விரிந்து ஆற்றும் தகுதி பெற்ற நிலை.

இச்சித்து, இச்சித்து, துய்த்துத் துய்த்து சலிப்பும் துன்பமும் பெற்ற ஆன்மா சிந்தனையில் ஆழ்கின்றது.

புற இயக்கம் விடுத்து தன்னடக்கம் உண்டாகி உயிர் நிலையின் சிறப்பை அறிகின்றது. அறிவைப் படர்க்கை ஆற்றலாகவே அறிந்து கொள்கிறது.

விளைவறிந்து செயலாற்றும் தகைமை ஓங்குகிறது. செய்யத்தக்கன, தகாதன இவற்றை விளங்கி, விளக்க வழியில் தன்தேவை, பழக்கம் இவற்றை ஒழுங்குபடுத்திக் கொள்ளுகிறது.

இந்த அளவில் அறிவு உறுதி பெற்றபோது ஒழுங்கும் இயல்பாகின்றது. உறுதியும் ஒழுக்கமும் பெற்ற ஆன்மாவின் அந்த மதிப்புள்ள உயர்நிலைதான் கற்பு + அகம்.

அகம் என்றால் உள்ளம். கற்பு எனில் உறுதியும் ஒழுக்கமும் பெற்ற நிலை.

இது ஆன்மாவின் வளர்ச்சி நிலையில் இரண்டாவது கட்டம்.

**சி**ந்தாமணி என்பது யாது?

சிந்தை மணியான நிலை.

அதாவது சலன மற்று, புலனடக்கம் பெற்று, உறுதி பெற்ற நிலை.

தன் உயிர்நிலை உணர்ந்தபின் அங்கு கிட்டிய ஆற்றலால் உயிருக்கு மூலநிலை அறியும் ஆர்வம் எழுகின்றது.



சிந்தனை உயர்ந்து உயிர் விரைவைச் சிறிது சிறிதாகத் தவத்தின் மூலம் குறைத்துக் கொண்டே போய் முடிவாகத்தான் இயக்கமற்ற அமைதி நிலையைப் பெறுகின்றது. மெய்ப்பொருளாகி விடுகின்றது.

தனது இருப்புநிலை அணு முதற்கொண்டு அண்டங்கள் அனைத்துக்கும் அப்பாலுள்ள பெருவெளி வரையில் நிறைந்து இருக்கும் பெருமையினை உணர்ந்து கொள்கின்றது.

தேவைக்கும் இருப்புக்கும் இடையே உள்ள தெய்வீகத் தொடர்பும் அதன் ஒழுங்கமைப்பும் உணர்ந்து ஆன்மா முழு அமைதி பெறுகின்றது.

இந்த நிலைதான் சிந்தாமணி. இதுதான்

மனிதனின் முழுமைப் பேறு.

இதற்கு ஆன்மா தன்னையறிய வேண்டும். அப்போதுதான் அமைதி பிறக்கும். பிறப்பும் அறும். பழிசெயல்கள் கழிக்கப் பெற வேண்டும். அப்போதுதான் தூய்மை பெறும். தன்னிலை மறந்து ஆன்மா புறக்கவர்ச்சியில் மயங்கிச் செயலாற்றும்போது... பேராசை, சினம், கடும்பற்று, முறையற்ற பால் கவர்ச்சி, உயர்வு தாழ்வு மனப்பான்மை, வஞ்சம் ஆகிய ஆறு குணங்களாக நிலைமாறி இயங்குகிறது.

இதன் விளைவாகவே பழிச் செயல்கள் விளைகின்றன. உள்ளத்தில் களங்கமும் உடலில் நோயும் பதிவாகின்றன.

இதனால் ஆம்மா சிறுமைப் பட்டுத் துன்புறுகின்றது. இந்த நிலையிலிருந்து ஒரு நல்ல திருப்பம் அதற்குக் கொடுத்தாக வேண்டும்.

எனவே இச்சையே தொழிலாக உடைய ஆன்மாவை அதன் போக்கிலிருந்து திருப்பிவிட வேண்டும்.

இது மனித குலத்திற்கு இன்றியமையாதது என்று நம் முன்னோர்கள் கண்டனர்.

புறத் தோற்றங்களால் கவரப்பெற்று புலன் வரையில் இயங்கும் ஆன்மாவிற்கு ஒரு உயர்வு கிட்ட வேண்டுமெனில் தன் விருப்பம் போலே நிலைத்து நிற்க முறையான உளப்பயிற்சி அவசியம்.

அனுபவத்தால் தேர்ந்த அப்பயிற்சி 1. ஓர்மை நிலை 2. அடக்க நிலை 3. ஒடுக்க நிலை என மூன்று பிரிவுகளில் அடங்கும்.

அறிவு செம்மை பெற்று அடங்கி லயமாகும்.

இப்பயிற்சியே ஆலயம் "ஆ + லயம்" = ஆன்மலயம் என்று வழங்கப் பெறுகின்றது.

மூன்று படிகளான ஆலய முறைகளில் முதன் முதல் தேவையானதும், பொறுத்தமானதும், பயன் மிகுந்ததும், எளிதானதும் ஓர்மை நிலைப் பயிற்சியே.

(அடுத்த வாரம்)

## 'பகீர்' தகவல்!

தேனாம்பேட்டை சிக்னலில் இருநூறு லிட்டர் கேன்கள் சுமந்த வண்டி ஒன்று நிற்கிறது. அதில் ஒரு கேனின் மூடித் திறந்தபடி இருக்கவே, உற்றுப் பார்த்தால்... கோவில் விசேஷங்களில் ஊற்றுகிற கூழ் மாதிரி ஏதோ ஒரு கலவை. பார்க்கும்போதே 'கொழ.. கொழ...' என்று அசிங்கமாய் இருந்தது. குடலைப் புரட்டி எடுக்கிற மாதிரி ஒருவித மோசமான நெடி வேறு.

வண்டிக்காரரிடம் கேட்டபோது, "பெரிய பெரிய ஹோட்டல்களில் மீந்துபோன சாதம் மற்றும் சாம்பார், ரசத்தை எல்லாம் இப்படி ட்ரம்களில் ஊற்றி விடுவார்கள். நாங்கள் அதை மறுநாள் எடுத்துக் கொண்டு போய் டெலிவரி செய்து விடுவோம்'' என்றார்.

"இதை என்ன செய்வார்கள்?''

"நல்லா அரைச்சுப், பக்குவப்படுத்தி வற்றலாக்கி பாக்கெட்டில் அடைத்து கடை கடையாக விற்று விடுவார்கள். மலிவு விலைக்கும் விற்கலாம். நல்ல லாபமும் கிடைக்கும்.''

நமக்கு பகீர் என்றது. இன்னும் பேச்சுக் கொடுப்பதற்குள் சிக்னல் விழுந்து அந்த வண்டி எஸ்கேப்!

அன்புள்ள தொழிலதிபர்களுக்கு... இயந்திரம் எழுதிக்கொண்டது.

இது எனக்காக எழுதும் கடிதம் அல்ல. என்னை மிக அதிகமாக நீங்கள் பயன்படுத்தத் துவங்கி விட்டதால் பாதிக்கப்படுகிறவர்கள் சார்பாக வைக்கப்படும் கோரிக்கை.

உங்களுக்கே தெரியும். இந்தியாவின் பலங்களில் ஒன்று மனித வளம். இந்தியாவின் பலவீனங்களில் ஒன்று மனித எண்ணிக்கை. எண்ணிக்கை என்று பார்த்தால் சுமை. வளமாகப் பார்த்தால் மட்டுமே பலம்.

இந்தியாவின் முன்னேற்றத்திற்கு நமது குடியரசுத் தலைவர் சொல்கிற யோசனைகளில் முக்கியமான தொன்று... நமது நாட்டின் கனிம வளத்தையும் மனித வளத்தையும் சரியானபடி பயன்படுத்துதல்!

அதற்கு மனது வைக்க வேண்டிய பெரிய பொறுப்பு தொழிலதிபர்களாகிய உங்களிடம்தான் இருக்கிறது.

ஏற்கெனவே கணினி புரட்சி காரணமாக லட்சக்கணக்கானோர் வேலை நீக்கம் செய்யப்பட்டு அல்லது அவர்களாகவே முன்வந்து விலகுவதற்குத் தூண்டப்பட்டு வீட்டில் உட்கார்ந்து தொலைக்காட்சி பார்க்கத் துவங்கி விட்டார்கள்.



இயந்திரமயமாக்கல் என்பது உற்பத்திக்கும், நேரத்திற்கும், தொழிலதிபர்களின் லாபத்திற்கும் ஏகத்திற்கும் உதவுவது உண்மை. அதே சமயம் வேலை இல்லாத் திண்டாட்டத்தை மேலும் மேலும் அதிகரித்துக் கொண்டிருப்பதும் உண்மை.

என்னைப் பயன்படுத்தவே கூடாது என்று நான் சொன்னால் அது பழமைவாதம். பத்தாம்பசலித்தனம். எதற்கெடுத்தாலும், எங்கும் எதிலும் என்னைப் பயன்படுத்த வேண்டுமா என்றுதான் கேட்கிறேன்.

உதாரணமாக, தங்க நகைகள் செய்யும் தொழிலில் இப்போது நான் முழுமையாகப் பயன்படுத்தப்பட்டுக் கொண்டிருக்கிறேன். இதனால் ஏற்படுகிற பாதிப்புகளை அறிவீர்கள் தானே? கோவையில் எத்தனையோ நகை ஆசாரிகள் வேலை இழந்து ஊரைவிட்டே போய்விட்டார்கள். கடனுக்கு மேல் கடன் வாங்கி திருப்பிக் கட்ட முடியாமல் பலர் தற்கொலை செய்துகொண்டிருக்கிறார்கள். பலரின் வேலை வாய்ப்புகளைப் பறித்து, சிலரின் உயிர்களைப் பறித்து இந்தத் தொழிலில் நான் ஈடுபடுத்தப்

## தொழிலதிபர்களுக்கு இயந்திரம் எழுதிக் கொண்டது...

# பிரபஞ்சத்தின் கதவு

வெட்கிக் கதவடைக்கிறாள்
உடை மாற்ற.

மடித்த என் கைக்குள்
தூளியாய்க் கிடந்த குருத்து -
ஓங்கி உலகளந்த உயரத்தில்.

எனக்குள் கரைந்து
நிழலாய்ப் புதைந்தவள்
பொது இடத்தில் விலக்குகிறாள்
அரவணைப்பை.

செல்லப் பெயர் அழைப்பில்
கொப்பளிக்கிறது கோபம்
தோழிகளின் அருகாமையில்.

நான் என்ன பாப்பாவா? -
உந்தித் தள்ளுகிறாள்
கேள்வியையும் என்னையும்.

வெட்கிக் கதவடைக்கிறாள்
உடைமாற்ற.

அடைத்த கதவு
அடையாளம் சொல்கிறது
அவள்
சிருஷ்டிக்கத் தொடங்கிவிட்ட
பிரபஞ்சம்

நான், அம்மா, பாட்டி,
கொள்ளுப் பாட்டி
அடைத்த கதவைப் போல்
படைத்த பிரபஞ்சம் போல்
■

■ ஆண்டாள் பிரியதர்ஷினி

வாழ்க வளமுடன்!

முதலில் அறிவைத் தன் விருப்பம் போல் நிறுத்திப் பழகிய பின்னர்தான் அதை மேலும் உயர் நிலைக்குக் கொண்டு போக முடியும்.

புலன்களிலேயே இயங்கிப் பழகிய அறிவைப் புலன்கள் மூலமாகத்தானே முதலில் நிலைபெறச் செய்ய முடியும்.

அதற்காகவே உருவம், ஒலி என்ற இரண்டில் ஒன்றைத் தேர்ந்து எடுத்து அதிலேயே மனம் லயமாகச் செய்து பழக வேண்டியிருந்தது. இத்தகைய முறைக்கு ஏற்ற நிறுவனங்கள்தான் நாம் காணும் எண்ணிறந்த கோயில்களும், மூர்த்திகளும், மந்திரம், பஜனை முதலியவையு மாகும்.

அவ்வாறு ஓர்மை நிலை பெற்ற மன ஆற்றலைக் கொண்டு எனக்கு வாழ்வில் இன்ன இன்ன பேறுகள் வேண்டுமென்றும் இவற்றை அருள்வாய் என்றும் தனக்கு அப்பாலுள்ளதாகக் கருதப்படும் தெய்வத்தை வேண்டிக் கொள்வது வழக்கமாகி விட்டது.

ஒரு மனிதனின் புறமனம் புலன்களில் ஈடுபட்டுச் செயல் ஆற்றும் போது அவன் உயிராற்றல் மிகுதியாகச் செலவாகிக் கொண்டிருக்கின்றது.

இவ்வாறு தொடர்ந்து ஏற்படும் இழப்பால் போதிய அழுத்தம் உயிராற்றலில் இருக்காது.

இந்த இழப்பை நிறுத்தவும், இழந்த அளவை மீட்கவும் ஒரு துணை ஆற்றல் தேவை. அத்தகைய உயிராற்றல் அலைகளைச் சீவகாந்த சக்தியினை முறையாகச் சேமித்து காத்து வருகின்றார்கள் கோயில்களில்.

ஒலி அதிர்வு அலைகளை முறையாகப் பரப்பும் மந்திரங்கள் மூலமாக மூர்த்திகளைச் சுற்றிலும் மனித காந்த சக்தியைப் பரப்பிச் சுழல விடுகின்றனர்.

ஒவ்வொரு எழுத்திற்கும் அதை உச்சரித்தால் ஒரு குறிப்பிட்ட அளவு ஒலி அதிர்வு ஏற்படுகின்றது.

மொத்தம் கணக்கிடக் கூடிய ஐம்பத்தியொரு எழுத்துகட்கும் தனித் தனியே ஒலி அலை அதிர்வு கண்டுபிடிக்கப்பட்டுள்ளது.

எத்தகைய பேறு ஒரு மனிதன் வாழ்க்கையில் பெற வேண்டுமோ அதற்கு ஏற்ப மூளையின் இயக்கத்தைத் தூண்டி... உடலையும் உள்ளத்தையும் தகுதியாக்கித் தக்கபடி எழுத்துக் கோர்வைகளைச் செய்கின்றார்கள்.

கணக்கிடப்பட்ட ஒலிக்கு உரிய எழுத்துகளை ஒரு உலோகத் தகட்டில் எழுதி அதைப் பல நூறு தடவை ஓதி உருப்போடுகின்றார்கள்.

அந்தத் தகட்டை மூர்த்தியின் பீடத்தின் அடியில் வைத்துப் புதைத்து நாள்தோறும் மந்திரங்களைச் சொல்லிக் கொண்டே இருக்கிறார்கள்.

மேலும் எண்ணிறந்த மக்கள் அம்மூர்த்தியை வலம்புரிச் சுற்றாகச் சுற்றிவர வைக்கிறார்கள்.

இதனால் உலோகத் தகட்டில் தொடங்கிய அதிர்வு அலைகள் மூர்த்தியைச் சுற்றிப் பரவியும்

வேதாத்திரி மகரிஷி

சுழன்றும் இயங்கிக் கொண்டிருக்கின்றன.

இதனால் ஒரு மூர்த்தி சிலையை ஒட்டி ஒரு மனித காந்த சுழற்களம் அமைகிறது.

அது எத்தனை பேர் சுற்றி வருகிறார்களோ அந்த அளவிற்குக் காந்த சக்தி அழுத்தம் பெறும்.

அந்தக் காந்தக் களம் ஓர்மை நிலைப் பயிற்சி செய்வதற்கும் வாழ்க்கை நலத் தேவை வேண்டுதலுக்கும் மக்களுக்கு உதவியாக இருக்கின்றது.

முற்காலத்தில் நகரங்களில் சந்தைகள் கூடும்.

அது பெரும்பாலும் வாரத்தில் ஒருநாளில் கூடுவது வழக்கம்.

உணவு தானியங்கள் அறுவடையான பிறகு அத்தகைய நகரங்களில் வருடத்திற்கு ஒருமுறை பெரும் சந்தைகள் கூடும். அப்போது நீண்ட பெரும் தொலைவு கிராமங்கள், நகரங்கள் இவற்றிலிருந்து எல்லாம் மக்கள் அங்கு கூடுவார்கள்.

சந்தைக் கடைகளில் வாணிபம் மிகுதியாவதற்கு வணிகர்கள் ஒரு நல்ல திட்டம் தீட்டினார்கள்.

குறைந்தது பத்து தினங்கள் சந்தை கூடும் காலத்தில் கோயிலில் விழாக் கொண்டாட வேண்டும்.

விழாவிற்கென வருபவர்கள் பொருட்கள் வாங்குவார்கள். பொருட்களை விற்க, வாங்க வருபவர்கள் விழாவைக் கண்டு களிப்பார்கள் என்று யூகித்து அதைச் செயல்படுத்த முனைந்தார்கள்.

ஒவ்வொருவிதப் பொருள் விற்கும் வணிகர்கள் ஒன்றுகூடி ஒருநாள் விழாச் செலவை ஏற்றுக்கொள்வதென்று முடிவு எடுத்தார்கள். அதன் படியே தொடங்கி நடத்தினார்கள்.

இது தொடர்ந்து ஒரு நகரத்தைப் பார்த்து மற்றவர்களும், நாடு முழுவதும் என்று விழாக்கள் நடைபெற்று வருகின்றன.

தமிழ்நாட்டில் பக்தியில் சிறந்த அரசர்கள் இருந்தார்கள். கோயில்களை ஆலய வழிபாட்டிற்கு என அக்கால உளவியலார் ஏற்படுத்தினார்கள்.

கோயிலை ஒரு கோட்டையாக மதித்து மதில் சுவர்களை வலுவாகக் கட்டினார்கள். மிகத் தொலைவிலிருக்கும் பகைவர்களைக் கண்காணிக்கப் பல நிலைகளையுடைய கோபுரங்களை எழுப்பினார்கள். நகரங்களின் மதிப்பிற்கும் அதை ஆண்ட அரசனின் தகுதிக்கும் ஏற்ப கோபுரங்களின் உயரங்கள் அமைந்தன. மதில்களின் வலிவுகள் அமைந்தன.

மேலும் தொலைவிலுள்ள கிராம மக்கள் நகரத்தை குறிப்பாகக் கொண்டு வழி செல்ல கோபுரங்கள் மிகவும் உதவியாக இருந்தன.

இந்த முறையில் கோயில்கள் பராமரிப்பில் மதம், வாணிபம், அரசு மூன்றும் இணைந்து செயலாற்றின.

அறிவை அதன் நிலைக்களனாக, பிறப்பிடமாக உள்ள ஆன்மாவில் அடக்க வேண்டும்.

அது ஐம்புலன்களைக் கடந்து அறிவு உள்நோக்கிச் செல்லும் முறையாகும்.

இதுவே அகத்தவம்!

இதுவே குண்டலினி யோகம். இதுவே தன்னையறியும் யோகம். இதுவே மெய் விளக்கத் தவம். இதுவே பிறப்பறுக்கும் பிரம்ம வித்தை.

ஆன்மாவின் லய நிலையே 'ஆலயம்'. ஆன்ம லயத்திற்கு ஏற்ற வழி கண்டு பின்பற்றி உயர்வடைதல் ஆலய

வழிபாடு.

அறிவின் உயர்வுக்கு ஏற்ப ஆன்ம லய முறையில் முதற்பகுதிதான், படர்க்கையில் மனம் ஒன்றும் முறைதான் சிலை வணக்கம், ஒலியெழுப்பி ஓதல் என்பது. மற்றொன்று உள்ளுணர்ந்து ஒன்றுதல்.

உள்ளுணர்ந்து ஒன்றும் முறை குண்டலினி யோகம் என்றும், சுக்கில தியானம் என்றும் கூறப் பெறுகின்றது.

உயிர் ஆற்றலின் படர்க்கை நிலைச் செயல்கள் பொதுவாக மனம் என்றும் சிறப்பாக அறிவு என்றும் வழங்கப் பெறுகின்றது.

தேவை, பழக்கம், சூழ்நிலை என்ற மூன்றின் உந்துதலால் புறக் கவர்ச்சியில் சிக்கித் தன்னை மறந்து மயங்கி இன்பம் அல்லது துன்பம் துய்ப்பதுதான் பொதுவாக பெரும்பாலான மக்களுடைய இயல்பு.

அந்நிலையில் ஏற்படும் மறதியும், மயக்கமும் களைந்து அறிவு தன்வயமாகி நிற்க ஒரு தந்திரம் அல்லது மாற்று முறை அல்லது முதற்படியே சிலை வணக்கம் முதலியன.

பிறப்பிடமாகிய உயிர் ஆற்றலிலேயே மனதை இருத்தி அடக்கி முதலில் தன்னை உயிராக உணர்வதும், அதன் பின் விரைவைக் குறைத்து மேலும் ஒடுங்கிச் செயலற்று நின்று, பரமாகி அமர்ந்து தன் தகைமையை உணர்வதும் முடிவான முறை.

இதுவே அறிவின் முழுமைப்பேறு.

இதுவே ஆன்மலயத்தில் சிறந்த ஒன்று.

ஆயினும் இம்முறைக்கு வயது முதிர்ச்சி பெற்ற பருவமும் சிந்தனை ஆற்றல் ஓங்கிய அறிவு நிலையும் உடையோர்களே தகுதி ஆவார்கள்.

பொதுவாக ஆண்களுக்குப் பதினெட்டு வயதும் பெண்களுக்குப் பூப்படைந்து இரண்டாண்டு சென்ற பின்னும் வித்து முதிர்ச்சி பெற்ற பருவமாகும்.



"உங்க வெற்றியின் ரகசியம் என்ன?"
"படத்துக்குப் படம் 'குறைத்துக் கொள்வதுதான்.'"
"சம்பளத்தையா?"
"இல்லை. உடைகளைத்தான்!"
—லலிதா செல்லப்பா

அதுவரையில் படர்க்கை நிலையில் மனதை ஓர்மை பெறச் செய்யும் வழிபாட்டு முறைகளே தகுதியானவை.

வித்து முதிர்வு பெற்றும் சிந்தனை ஆற்றல் வளர்ந்தும் புற வணக்க முறையிலேயே ஆலய வழிபாடு ஆற்றுதல் அறிவின் வளர்ச்சியைத் தடுத்துவிடும் செயலாகும்.

எனவே அகநோக்கு முறையில் ஆலய வழிபாடு ஆற்றுதல் தான் சரியான முறை.

புரிகிறதா?

(அடுத்தவாரம்)

நாம் தெருவிலே சென்று கொண்டிருக்கும்போது நமக்கு அறிமுகமான ஒருவரைப் பார்க்கிறோம். அவரை "நண்பர்'' என நாம் ஏன் குறிப்பிடுகிறோம்?

காரணம்?

அவருடைய வடிவத்துக்குள்ளாக இருக்கக்கூடிய குணத்திலே ஒரு இனிமையான ஞாபகம் நமக்கு வருகிறது.

அதேபோல இன்னொருவரைப் பார்க்கிறோம். அவர் ஒரு பெரிய அறிவாளி, ஞானி என்று மனத்தாலே மதிக்கிறோம்.

இப்படியே ஒவ்வொருவரையும் ஒவ்வொரு பொருளையும் மதிப்பீடு செய்து அந்த நினைவை நம் உள்ளத்திலே பதித்து வைத்துக் கொண்டுள்ளோம்.

இன்னொரு உதாரணம்-

மாம்பழத்தை உண்டால் இன்னின்ன குணத்தைக் கொடுக்கக் கூடியது என்று இதுவரையிலே நாம் அந்த மாம்பழத்தை உண்டதனாலேயோ அல்லது அது குறித்துக் கேள்விப் பட்டதனாலேயோ அதற்கு ஒரு தன்மையை உணர்ந்திருக்கிறோம்.

இவ்வாறாக எந்தப் பொருளை நினைவுபடுத்திக்கொண்டாலும் அதற்குரிய வடிவம், மற்றும் தரம், குணம் (Shape and Image) ஆகியன நம் நினைவிற்கு வரும்.

நினைவின் அல்லது அனுபோகத்தின் அளவிற்கு ஜீவகாந்த சக்தி செலவாகும். எந்த அளவிற்கு ஜீவகாந்த சக்தி செலவாகிறதோ அந்த அளவிற்கு மனத்தின் அலை நீளம் அமையும்.

இதனை ஆங்கிலத்தில் (Wave length) என்பர்.

அந்த அலையின் சுழற்சி அளவினை - அதாவது ஒரு நிமிடத்திற்கு எத்தனை தடவை சுற்றுகின்றதோ அதனை அதிர்வெண் (frequency) என்பர். ஒரே திசையில் செல்லும் ஒரு அலையின் அடுத்தடுத்த இரண்டு உச்சிக்கு இடையில் உள்ள தூரம் (Wave length) அலை நீளம் எனப்படும்.

நாம் சாதாரணமாக விவகாரங்களிலே இருக்கின்றபோது அமைதியான விஷயங்களையும் கவனிக்கின்றோம்; உணர்ச்சி வயப்பட்ட விஷயங்களையும் கவனிக்கின்றோம். பெரும்பாலும் நாம் உணர்ச்சி வயப்பட்டுத்தான் வாழ்க்கையிலே பழகிக் கொள்கிறோம்.



அப்பொழுது, அதனால் ஊக்குவிக்கப்படும்பொழுது, என்ன ஆகிறது என்றால், சாதாரண நிலையிலே, அமைதியான நிலையிலே, ஒரு மணிக்கு ஒரு யூனிட் வீதம் நம்முடைய ஜீவகாந்த சக்தி மாற்றம் பெற்றுச் செலவாகிறதாக வைத்துக் கொள்வோம். அதுவே உணர்ச்சிவயப்பட்ட நிலையில் இரண்டு யூனிட், மூன்று யூனிட் வீதம் செலவழியும்.

அப்பொழுது இந்தச் செலவு ஏற்றம் இருக்கிறது பாருங்கள், அதனாலேயே இருப்புக் குறையும். உடலிலே இருக்கக் கூடிய திண்மை இருக்கிறதே - Intensity என்று அதைச் சொல்லுவார்கள்- ஜீவகாந்த சக்தியின் திண்மை, அதிலே குறைவு ஏற்படும்.

அந்தக் குறைவைச் சரிப்படுத்துவதற்குத் தாமாகவே உயிர்ச்சக்தித் துகள்

வேதாத்திரி மகரிஷி

ஒவ்வொன்றும் வேகமாகச் சுழலத் தொடங்கிவிடும். முன்னர் இருந்ததைவிட அதிகமாகச் சுழன்று அந்தக் குறைபாட்டைப் பூர்த்தி செய்துகொள்ளவேண்டும் என்பது தானாகவே நடக்கும் (Automatic) நிகழ்ச்சியாகும்.

இந்தச் சுழற்சி அதிகரிக்க அதிகரிக்க அது தொடர்ந்து உடல் முழுவதும் இருக்கக்கூடிய இரத்த வேகம், இன்னும் செல்களுடைய இயக்கம் இவற்றிலெல்லாம் பரவி இயக்க வேகம் வேறுபடும்.

வேகம் என்பது மூன்று; ஒன்று மன வேகம்; அடுத்தது உயிர்வேகம்; மூன்றாவது உடல் வேகம். இவை எல்லாம் ஒரே நிலையிலே உயருமா என்றால், அதுதான் இல்லை.

மனவேகம் ஆயிரமாயிரம் மடங்கு உயர்ந்து விடும்; உயிர்வேகம் நூறுமடங்கு உயரும்; ஆனால் உடல் வேகம் பத்து மடங்குதான் உயருகிறது என்று வைத்துக்கொள்ளுங்கள்.

எல்லாமே ஒன்றாக இருந்தது போய் இப்பொழுது ஆயிரம், நூறு, பத்து என்று ஆகிவிட்டது.

இங்கேதான் உடலோடு உயிர், உயிரோடு மனம், இவை (Coordination) ஒத்துழைப்புத் தன்மையின்றி தனித் தனியாக வேறுபடும்.

இந்தப் பின்னணியில்தான் உடலிலே நோய்கள் வருவது, எண்ணங்கள் தாறுமாறாக ஆகித் தவறான செயல்களைப் புரிதல் ஏற்படுவது, மீண்டும் மீண்டும் அந்த நிலைக்கே கொண்டு போவது.. இப்படியெல்லாம் நடக்கின்றன.

அது சரி, அமைதி நிலை ஏன் தேவை?

நீண்ட நெடுங்காலமாகவே பல பிறவிகளை எடுத்து இதே நிலையிலே, உணர்ச்சி வயப்பட்ட நிலையிலேதான், நாம் வாழ்ந்து பழகியிருக்கிறோம்.

இப்படியே இருக்கிறவரையிலே மனிதனானவன் மனிதத் தன்மையையோ தெய்வத் தன்மையையோ அடைய முடியாது.

அதற்கு அமைதி நிலைக்கு வரவேண்டும்; சிந்தனை உயர வேண்டும்; நுண்மை பெற வேண்டும்; உண்மை உணர்வு வேண்டும். அப்பொழுதுதான் மனிதன் மனிதனாக வாழவும், மகிழ்ச்சி, இன்பம் இவையெல்லாம் கிட்டுகின்ற நிலைமையும் உண்டாகும்.

இந்தக் குறிக்கோள் கொண்டே நாம் பயிற்சிகளைச் செய்கிறோம். அதன்படி மனத்திற்கு முதலிலே ஒரு பயிற்சியைக் கொடுக்கிறோம். அந்தப் பயிற்சி என்னவென்றால், அந்த உருவமாக மாறுவது, குணமாக மாறுவது.

---

சமீபத்தில் எங்கள் வீட்டிற்கு வெளியூரில் இருந்து வந்திருந்த என் தாய்மாமன் என் மகளை அழைத்து, 'உன் பெயர் என்னம்மா? என்று செல்லமாகக் கேட்டார்.

என் மகள், 'சந்தோஷினி' என்று பெயரைச் சொன்னாள்.

அவள் மெதுவாகச் சொன்னதால் என் மாமாவிற்குக் கேட்கவில்லை.

உடனே என் மாமா, 'யார் பெயரைக் கேட்டாலும் தயங்

---

அந்த விழிப்பு நிலையிலே உருவமாகவும் குணமாகவும் மாறுகிறோம் பாருங்கள்... அந்த நிலையிலே எவ்வளவு வேகமாக நம்முடைய ஜீவகாந்த சக்தி செலவாகிறதோ அதனை மாற்றியமைத்து உருவமாகவும் குணமாகவும் மாறாத ஒரு நிலைக்கு வருகிறோம்.

எவ்வாறு இது சாத்திய

மாகிறது?

உயிர் மேலே மனம் செலுத்து கிறோம்.

அதாவது, இந்த உடல் முழுவதும் இருக்கக் கூடிய ஜீவகாந்தசக்தி மூளையின் வழியாகச் செலவாகிறபோது, அதிலேயிருந்த புலன்கள் மூலமாகவோ அல்லது எண்ணத்தின் மூலமாகவோ-அதுதான் ஜீவகாந்த சக்தி செலவாகிற இடம் - குழாய் போல, அந்தக் குழாய் (tap) அதிகமாகத் திறந்திருந்தால்தானே ஜீவ காந்த சக்தி அதிகம் செலவாகும்?



காமல் சத்தமாக அடித்துச் சொல்ல வேண்டும்' என்றார். உடனே என் மகள் இரண்டு கைகளையும் சேர்த்து வைத்து என் மாமாவின் முதுகில் 'டம்' மென்று ஓங்கி அடித்துவிட்டு ''என் பெயர் 'சந்தோஷினி'' என்று சத்தமாகச் சொன்னாளே பாருங்கள்..!!

- திருமதி P. சுந்தரி.
வில்லாபுரம்,
மதுரை -12.

# எங்க வீட்டுக் குட்டி!

அந்தக் குழாயின் அடைப்பானைத் திருப்பி நீங்கள் மீண்டும் உயிர்மேலே மனத்தை வைக்கிறீர்கள்.

எங்கே (charge) ஆகிறதோ அங்கேயே கொண்டு வந்து விடுகிறோம்.

அதுதான் தவம்.

உயிரின் படர்க்கை நிலையே மனமாகும்.

மனமானது இயங்கும்போது ஜீவ காந்த சக்தி செலவாகிக் கொண்டே உள்ளது.

தவம் செய்யும்போது அதாவது அகத்தவம் புரியும்போது மனமானது புலன்கள் வழியே வெளியே செல்வது நின்று உள்முகமாகச் செல்கின்றது.

எப்படி?

(அடுத்த வாரம்)

ஒரு மனிதன் இறந்து விட்டால், இறந்துபோன மனிதனைக் குளிப்பாட்ட வேண்டும் என்ற சடங்கு எல்லா இடங்களிலும் செய்கிறார்கள். இதிலே ஒரு விஞ்ஞான நுணுக்கமும் உள்ளது.

அதாவது கொலையா? தற்கொலையா? அல்லது இயற்கையான இறப்பா? என்று சமுதாயத்திற்குத் தெரியவேண்டும். மேலும் இறந்தவர்களுடைய பொருட்கள் யார் யாருக்குச் சேர வேண்டும், எப்படி எப்படிச் சேர வேண்டும் எனத் தெரிந்து கொள்வதற்கு அவனது உறவினர்கள் ஆளுக்கொரு குடம் தண்ணீர் கொண்டு வந்து சடலத்தின் மீது ஊற்றும்போது உடலில் ஏதாவது காயங்கள் இருந்தால், உண்மை வெளிப் படும்.

அதாவது கொலை, தற்கொலை என்றிருந்தால் தடயம் வெளிவரும். இந்த மாதிரி சடலத்தைக் குளிப்பாட்டும் வாயிலாக இதையெல்லாம் குறிப்பாக அறிந்து கொள்கின்றார்கள்.

இன்னொரு சடங்கு முறையையும் பார்த்திருக்கிறேன்.

அதாவது கணவன் இறந்துவிட்டார் என்றால் அவரது மனைவியானவள் அந்தச் சடலத்தின் அருகில் சிறிது நேரம் படுத்திருக்க வேண்டும்.

# அமைதி பெறட்டும்!

வாழ்க்கைக்கு உதவும் உன்னதத் தொடர்

**வேதாத்திரி மகரிஷி**

இது எப்படி ஏற்பட்டிருக்க வேண்டும் எனில் ஒருவர் இறந்தபின் நானும் அவனுடைய மனைவி; எனக்குச் சொத்தில் பங்கு வேண்டும் என்பதாக முறையீடு வர இந்தச் சடங்கைச் சேர்த்தார்கள். உண்மையான மனைவியாக இருந்தால்தான் சடலத்தின் அருகில் ஒப்புக்கொண்டு படுப்பாள். அதற்காகச் சில குடும்பங்களில் இப்படி ஒரு சடங்கு உண்டு.

இறந்தவருடைய மகன் தான் சில சடங்குகளைச் செய்ய வேண்டும் என்பதெல்லாம் சில பொருளாதாரக் கடமைகளைப் பின்பற்றி நடப்பதற்காக வைத்தார்கள். இறந்தவனுடைய ஆன்மாவானது சாந்தியடைய அவனுடைய தொடராக உள்ள பிள்ளைகள் 'நாங்கள் அந்தப் பொறுப்பை ஏற்றுக் கொள்கிறோம்' என்று முன்வரும்போது அப்

பாதி பணக்காரனாகி விட்டால், முழுப் பணக்காரனாவது எளிது.

–எஸ்டோனியா பழமொழி



படியே அவர்களுடன் லயமாகி விடுகிறது. காரணம், இறந்தவருடைய பிள்ளைகள் உடலால் பிரிவு பட்டு இருந்தாலும் உயிர்த் தொடர்பால் ஒன்று பட்டவர்கள். ஆகையால் சடலம் மறைவதற்கு முன்பாக, அதன் முன்பு நின்று கொண்டு நான் இந்த அளவில் ஏற்றுக் கொள்கிறேன் என்றால் அந்த ஆத்மா அதுவே சாந்தியாகி அமைதியாகிறது.

சிறுபுண்ணையும், ஏழை உறவினர்களையும் ஒருபோதும் அலட்சியம் செய்யக்கூடாது.

–பாரசீக பழமொழி



அப்படியின்றி பிரிந்த உயிர் தான் வேறு ஏதேனும் தனக்கு ஏற்ற உடலில் கடமையையோ அல்ல வேறு எதையோ முடிப்பதற்குக் கர்மப் பதிவுகளுக்கு ஏற்ப ஒருத்தரைத் தேடி அவரைப் பிடித்துக் கொண்டால் அவரைப் பிசாசு பிடித்து விட்டது, பேய் பிடித்துவிட்டது என்றே சொல்வார்கள். அவ்வாறு ஏற்படாமல் இந்தத் தொடரிலேயே ஏற்றுக்கொள்ள வேண்டுமானால் அந்தப் பிள்ளை அதற்குரிய சடங்குகளைச் செய்ய வேண்டியதுதான் நியாயமானது.

இன்னொரு முறை உள்ளது. அது எல்லோரும் கூடித் தியானம் செய்வது. 'இந்த ஆன்மா பூரணமடையட்டும். அமைதி பெறட்டும்' என்றால் அதனுடைய ஆற்றலால் எல்லோரும் இசைந்து ஏற்றுக் கொள்ளும்போது அது எல்லோருடனும் கலந்து அமைதியாகிவிடும். ( All are willingly absorbing the disemobodied soul amongst themselves) எந்த சமயம் என்றாலும் இந்த இரண்டு வகையான சடங்குகள் இருப்பதைக் காணலாம்.

இவற்றை உயிரின் நிலையை உணர்ந்தவர்கள் ஏற்படுத்தினார்கள். ஆகையால் இதற்கு ஒன்றும் மறுப்புச் சொல்வதற்கு இல்லை. அதுபோல் பிற சடங்குகளையும் நாம் ஆராய்ந்து பார்த்தால் அவற்றிற்கு உள்ள அடிப்படை உண்மை புலனாகலாம்.

தாங்க முடியாத கொடுமை ஒன்று உள்ளது. அது என்னவென்றால் கணவன் இறந்துவிட்டால், அவன் இறந்த வருத்தத்தைவிட எல்லோரும் கூடிக்கொண்டு செய்யும் காரியம், தாலியைக் களையச் செய்யும் சடங்காகும். இது மரணச்

சடங்குகளில் ஒன்று. இது குறித்து நான் என்ன சொல்கிறேன் என்றால், தாலியே கட்ட வேண்டாம். சாதாரணமாக ஒரு மோதிரம் போட்டால் போதுமானது. கணவன் இறந்து விட்டால் மனைவி அந்த மோதிரத்தைக் கழற்றி விடலாம். அல்லது ஒரு அடையாளமாக அணிந்துகொண்டு இருக்கலாம். தாலியினை அறுக்க வேண்டும் என்பது எதற்காக? நான் இன்னாரைத் திருமணம் செய்து கொண்டேன். அவரது ஞாபகார்த்தமாக இரு இருந்துவிட்டுப் போகட்டும் என்றால் என்ன? யோசித்துப் பாருங்கள்.

இந்தச் சடங்குகள் எல்லாம் தோற்று விக்கப் பட்ட காலத்தில் சொத்து, உடைமை இவற்றையெல்லாம் தீர்மானம் செய்வதற்கு அப்போதைய சூழ்நிலையிலே மக்களின் எண்ணப் படிதான் செய்ய வேண்டும். அப்போது சொத்துரிமைச் சட்டமோ, நீதிமன்றமோ இல்லாத காலம். அவையெல்லாம் வந்து விட்ட பிறகு பழைய சடங்குகளையும், விடாப்பிடியாக வைத்திருப்போம் என்பது அறிவுடைமையாகுமோ? இந்தப் பழைய காலத்துச் சடங்குகளிலெல்லாம் சீர்திருத்தம் கொண்டு வந்து, வேண்டாத சடங்குகளைத் துணிந்து நீக்க வேண்டும். இதை ஒரு தனி மனிதனால் செய்ய முடியாது. இங்குதான் நமது அமைப்பு என்ற முறையில் உலக சமுதாய சேவா சங்கம் தேவைப்படுகிறது. நாம் சொல்வது எல்லாம் மனிதன் உணர்ந்து சீர்திருத்தம் செய்ய வேண்டும். அப்படி உணர்ந்து மனிதன் மாறுவதற்கு நாம் செல்லுகின்ற வழி, நிதானமான வழி என்றாலும் அதுதான் சரியான வழியாகும்.

**குங்குமம், விபூதி எதற்காக?**

மேனாடுகளில் பயணம் செய்யும் காலத்தில் 'உங்கள் நாட்டுப் பெண்மணிகள் நெற்றியில் பொட்டு வைக்கின்றார்களே அது என்? எதற்கு? அது எதனால் செய்யப்பட்டது?' என்று கேட்கிறார்கள். அந்தப் பொருள் குங்குமம் என்பது. அது மஞ்சள் தூளினால் செய்யப் படுவது என்றேன். மஞ்சளுக்கு ஒரு குணம் உண்டு. அது நுண் கிருமிகளை அழிக்கக்கூடிய குணமாகும். கிருமி நாசினி என்பார்கள். மேலும் அந்த மஞ்சளுக்கு ஒரு குணம் என்னவென்றால் மஞ்சளை நெற்றியில் பொட்டாக வைத்தால் ஒரு குறிப்பிட்ட தூரம் வரைக்கும் பாம்பு கிட்டே நெருங்காது. பாம்பை ஓரிடத்தில் பார்க்க நேர்ந்தால் அங்கு மஞ்சள் தூளைத் தூவிவிடும் பழக்கத்தைப் பார்த்திருக்கலாம்.

அந்தக் காலத்தில் தரை மட்டத் திற்குக் கீழே இருக்கும் வீட்டில் பாம்புகள் நுழையாமல் இருக்க சுதவோரங்களில் ஒரு முழம் உயரத்திற்கு மஞ்சள் அரைத்துப் பூசி அதன்மேல் குங்குமம் பொட்டுப் பொட்டாக வைப்பார்கள். அதே போல சந்தனத்திற்கும் நுண் கிருமிகளின் வளர்ச்சியைத் தடுக்கும் தன்மை உண்டு. எனவேதான் பெண்கள் குங்குமம் வைத்துக் கொள்வதைப் போல ஆண்களும் சந்தனம் வைத்துக் கொள்ளும் பழக்கமும் வந்தது.

திருநீறு-அதாவது விபூதியிலும் ஒரு குணம் உண்டு.

என்ன அது?

(தொடரும்)



உண்மை, சோப்பைவிட சுத்தமாய் வைக்கும்.

-ஆப்பிரிக்கப் பழமொழி

தொகுப்பு: பா.அசோகன்

# வாழ்க வளமுடன்!

வாழ்க்கைக்கு உதவும் உன்னதத் தொடர்

# செயல் விளைவு தத்துவ ஞானமா?

அருட்பேராற்றலாகவுள்ள இறைநிலை, தனது சொந்த உள்ளடக்க உடைமைகளான "பூரணம், பேராற்றல், பேரறிவு" இவற்றை இருப்பாக வைத்துக்கொண்டு தொடங்கிய... தனது மதிப்புமிக்க பரிணாமம் எனும் பயணத்தின் இறுதிக்கட்டமே 'மனிதப் பிறப்பு'.

வேதான்துகளின் சுழற்சி விரைவால் அது தனது இயல்பூக்கமாகக் கூட்டிக்கொண்ட ஆற்றல் 'யோகான்' எனும் காந்த ஆற்றல்.

யோகான் துகள்களாகிய காந்தம் விண் கூட்டங்களால் நெருக்குறும்போது, அது அடையும் தன்மாற்றங்கள் அழுத்தம், ஒலி, ஒளி, சுவை, மணம், மனம் என்பனவாகும்.

மனதின் தொடக்க நிலை தாவர இனம்.

தாவர நிலையானது மண், நீர், காற்று, சூரிய ஒளி இவற்றால் உரசப்படும்போது, அதற்கு ஏற்படும் உணர்வே 'ஓரறிவு' ஆகும்.

தான் அடைந்த இன்ப உணர்வால், தனது இயல்பூக்கத்தைக் கொண்டே, தன்னைப் போல் பல தாவரப் பிறவிகளை மலரச் செய்ய வித்துக்களைத் தாவர இனம் பெருக்கிக் கொண்டது.

வித்துவிலிருந்த 'இயல்பூக்கமே' இரண்டாவது அறிவுடைய புழுக்களாக மாறியது. புழுவிலிருந்து மேலும் இயல்பூக்க மானது தனது சிறப்பால் வண்டு, ஊர்வன, பறப்பன, நடப்பனவாக எண்ணிறந்த பிறவி களை ஏற்படுத்திக் கொண்டது.

இவ்வாறு பேரியக்க மண்டலமாக விரிந்த பிரபஞ்சம் என்ற நந்தவனத்தில் இறுதியாகப் பூத்த திருமலர்தான் வியத்தகு வண்ணமும் எண்ணமும் உடைய மனிதன்.

மனிதனானபின்தான் எண்ணிறந்த தன்மைகள் அவனிடம் உருவாயின, பதிவாயின.

செயல்களால் - விளைவுகளும், விளைவு




வேதாத்திரி மகரிஷி

2-5-04

களால்- எண்ணங்களும் சிறப்படைந்து கொண்டேயிருக்கும் மனிதனிடம், அவனுடைய அறிவின் நுட்ப விளைவாகத் தோன்றியதே 'செயல் விளைவுத்' தத்துவஞானம்.

மனிதன்தான் தன்னைப் பற்றிச் சிந்திக்கிறான்.

இறைநிலையின் பேரறிவு தொடர்ந்தே எல்லாப் பரிணாம நிலைகளிலும் வந்து கொண்டிருப்பதால், பழைய நினைவுகள் அனைத்தும் மனதில் எண்ணங்களாக எழுகின்றன.

மேலும் சிந்திக்கிறான்.

மனிதன் என்ற ஒரே இனத்தில் எத்தனை வேறுபாடுகள் உள்ளன என்று கணக்கெடுக்கிறான்.

1. உருவமைப்பு,
2. குணம்,
3. அறிவின் உயர்வு,
4. கீர்த்தி
5. உடல் வலிவு,
6. சுகம்
7. செல்வஉடைமை

ஆக? ஏழு வகையில்தான் ஒருவருக்கொருவர் வித்தியாசம் கொண்டு உள்ளதைப் புலன் உணர்வின் மூலமே அறிந்து கொள்ள முடிகிறது.

அக்கறையோடு மேலும் ஆழ்ந்து சிந்திக்கிறான்.

தன் இனத்திலேயே ஒருவரிடமிருந்து மற்றொருவர் பறித்துண்ணும் பழக்கமும், துணிவும் எவ்வாறு ஏற்பட்டன என்ற வினாவுக்குத் தெளிவாக விடை கிடைத்து விட்டது.

'அருளுருவான, புனிதப் பொருளான இறைநிலை' தனது பரிணாமம் என்ற பயணத்தில் ஈரறிவான புழு முதற்கொண்டு ஐயறிவு விலங்கினம் வரை தொடர்ந்து எடுத்த பிறவிகளின் தலைமுறைகளின் காலம் நீளமானது.

அந்தக் காலகட்டத்தில், விலங்கினம், பொதுவாக ஒன்று மற்ற ஒன்றைக் கொன்று, அதன் உடலைப் பறித்து உணவாகக் கொண்டு, அதன் வாழும் சுதந்திரத்தையும் பறித்து வாழ்ந்த பழக்கப் பதிவுகளே, வித்தின் மூலம் மனிதனுக்குத் தொடர்ந்து வந்து கொண்டிருக்கின்றன என்ற



"ஏன் பழைய மையைக் கொட்டி விட்டு பேனாவுக்கு புதுசா மை போடுறீங்க...?''

"எழுத்தில் புதுமை இருக்கணுமாம்...''

-எஸ் மோகன்.

விளக்கமே அது.

உயிர்க்கொலை, உடலை உணவாகக் கொள்ளுதல், வாழும் சுதந்திரத்தைப் பறித்தல் என்ற மூன்று வன்முறைகளும் பிறந்த இடம் கண்டுகொண்டான்.

இன்னும் அவன் மனதில் நிறைவு ஏற்படவில்லை.

'ஒவ்வொருவரிடமும் பல சிறப்புகளும், குணங்களும் அடங்கியுள்ளனவே, அவற்றிற்குக் காரணம் என்ன?' என்று அறிய அவன் மனம் விருப்ப விரைவு கொள்கிறது.

ஆழ்ந்து உற்று நோக்குகிறான்.



"பத்திரிகையாளரைக் காதலிச்சது தப்பாப் போச்சுடி"

"என்னடி சொல்றே?"

"பதில் எழுதக் கூட செல்ஃப் அட்ரஸ் கவர் ஸ்டாம்ப் ஒட்டி அனுப்பணும்னு எதிர்பாக்கிறார்டி!"

-எம். அசோக்ராஜா.

பழைய எண்ணங்கள் நினைவுக்கு வருவதுபோல் ஒவ்வொன்றாகப் பதினாறு காரணங்கள் மனிதனின் வாழ்வில் எண்ணங்களையும், செயல்களையும் ஊக்கி, அவற்றின் மூலம் வாழ்க்கையை நடத்தி, அனைத்து அனுபவங்களும் பதிவாகத் தன் கருமையத்தில் சுருங்கியிருப்பதை நினைக்கும் போது, அனைத்தும் அவன் தன்மைகளாக மலரக் காண்கிறான். அவ்வாறு மனித இன வாழ்க்கைத் தொடரில் அவன் உணர்ந்தவை என்ன?

அவை பதினாறு வகைச் செயல்களும், பதிவுகளுமாகும்.

கருவமைப்பு, உணவுவகை, காலம், தேசம்,
கல்வி, தொழில் அரசாங்கம், கலை, முயற்சி,
பருவம், நட்பு, சந்தர்ப்பம், பல ஆராய்ச்சி,
பழக்கம், வழக்கம், ஒழுக்கம், இவற்றிற்கேற்ப
உருவமைப்பு. குணம், அறிவின் உயர்வு, கீர்த்தி,
உடல் நலம், சுகம், செல்வம் மனிதர்கட்கு
வரும் வகையும் அவற்றின் தரம் அளவுக்கேற்ப
வாழ்க்கை நிலை வேறுபாடு அமையக் கண்டேன்.

இந்த விளக்கத்தில்தான் மனிதனுக்குச் 'செயல்-விளைவு'த் தத்துவஞானம் உண்டாயிற்று.

இப்போது தெளிவாகி விட்டதா? 'செயலில்லாமல் விளைவு இல்லை; விளைவில்லாத செயலில்லை' என்று!

செயலும், விளையும்தான் சங்கிலித் தொடரான மனித வாழ்வின் அனுபவங்கள் செயலைச் செய்துவிட்டு, விளைவில் சிக்குண்டு தவிக்காமல், விளைவைக் கணித்து, அறிவு-முறையோடு செயலாற்றி வாழும் பண்பாடுதான் 'செயல்-விளைவுத் தத்துவ ஞானம்' என்கிற உயர் அறிவு என்னும் சிந்தனைத் தெளிவு உண்டாயிற்று.

அப்புறம்?

(அடுத்த வாரம்)

# ஒரு விதைக்குள் இத்தனை ரகசியங்களா?

'செயல்-விளைவுத்' தத்துவ ஞானம் பெறாத மனித வாழ்வு, 'கயிறு அறுத்த காற்றாடி' போல் நிலை காணாது தத்தளிக்கும் என்ற உண்மை விளங்கிவிட்டது.

இந்தச் சிந்தனைத் தொடரில் தான் நாம் அனைவரும் வாழ்ந்து கொண்டிருக்கின்றோம்.

மேலும் நமது சிந்தனையை உயர்த்தி, மனித வாழ்வில் அனுபவங்களாகும் சில உண்மைகளை அறிந்து வாழ்வில் வெற்றி பெறுவோம்.

புலன் அளவில் எல்லை கட்டிக் கொண்டு இயங்கும் மனதுக்குப் பரு உடல் தான் செயலுக்கும், விளைவுக்கும் இடமாகவும், பொருளாகவும் அமைந்திருக்கிறது என்று தோன்றும்.

ஆனால்,

1. பருவுடல்,

2. நுண்ணுடல்,

3. சீவகாந்த அலை

என்ற இந்த மூன்றும் இணைந்த இயக்கக் களமே செயல்-விளைவுகளுக்கு இயக்கக் களங்களாகும்.

ஏனெனில்-

உணவிலிருந்து கிடைத்து, எல்லா தாதுக்களிலும் கலந்து




வாழ்க வளமுடன்! 47

வேதாத்திரி மகரிஷி

ஓடிக்கொண்டிருக்கக்கூடிய நுண்துகள்களை ஸ்தூல உடலானது தனது வித்தின் மூலம் பிரித்தெடுத்து உடலில் ஏற்கெனவே ஓடிக்கொண்டிருக்கக் கூடிய உயிர்ச் சக்தியினோடு சேர்த்து விடுகிறது.

முழு உடலில் நிறைந்தும், வித்துவில் செறிந்தும் ஓடிக் கொண்டிருக்கக் கூடிய நுண் விண் கூட்டமே உயிர்ச் சக்தியென மதிக்கப்படுகிறது.

உயிர்ச்சக்தி என்ற சிறப்பைப் பெற்று விளங்கும் நுண் விண் துகள்களே தங்களது சுழற்சி விரைவைக் கொண்டு சீவகாந்தத்தை விளைவித்துக் கொண்டே இருப்பதால், இந்தச் சீவகாந்தமானது பரு உடலிலும், நுண்ணுடலிலும் விளைந்து, நிறைந்து, சுழன்றோடிக் கொண்டிருக்கிறது. அந்தச் சீவகாந்தமே மனமெனும் சிறப்பையும் பெறுகிறது.

எனவே,

உடலாலோ, உள்ளத்தாலோ ஆற்றப்படக்கூடிய எந்தச் செயலானாலும், அதனைச் சீவகாந்தம் ஏற்றுக் கொள்வதுடன், அப்பதிவுகளைத் தனது இயக்க மையமான கரு மையத்தில் இறுக்கிச் சுருக்கி வைத்துவிடுகிறது. அங்கிருந்தவாறு காலா காலத்தில் தக்க விளைவுகள் இன்பமாகவோ, துன்பமாகவோ வெளிவருகின்றன.

இந்நிலைகளை இறையாற்றலே - தனது நியதிகளில் ஒன்றாக - ஏற்படுத்தி வைத்துள்ளதால், 'செயல்-விளைவு' 'செயல் - பதிவு - விளைவு' என்ற தத்துவத்தை யார் தடுக்க முடியும்?

இந்தத் தெய்வீக ஒழுங்கமைப்பை உணராமலோ, உணர்ந்தும் அலட்சியம் செய்தோ, அல்லது உணர்ச்சிவயப்பட்டோ துன்பம் விளையக்கூடிய - இறைநிலையின் இன்ப ஊற்றுத் தன்மைக்கு எதிரான - செயலைச் செய்து விட்டால், பிறகு இறைவனுக்கு வேண்டுதல்கள் செய்தாலுங் கூட, விளைவிலிருந்து தப்ப முடியாது.

செயலிலே விளைவாகத்
தெய்வஒழுங்
கமைப்பிருக்கப்
பயனென்ன தவறிழைத்துப்
பரமனைப் பின்
வேண்டுவதால்?

ஒரு மரத்தின் வித்துவை எடுத்துக்கொண்டு ஆராய்வோம்.

அந்த வித்துவில் முழுமையாக ஒரு மரமே அலைவடிவில் சுருங்கியிருக்கிறது.

மரம், கிளைகள், இலைகள், பூ, காய், கனி அனைத்தும் அந்த வித்துவில் அடங்கியுள்ளன. இவ்வாறு சுருக்கி இருப்பு வைத்தது சீவகாந்த ஆற்றலின் நுண்ணிய செயல்.

நீர், காற்று, சூரியஒளி இவற்றால் விதையிலுள்ள சீவகாந்தம் தூண்டப்படும்போது, காலத்தால் ஒவ்வொரு

ஆர். மீ.

இந்தியப் பெருங்கவிஞரான ரவீந்திரநாத் தாகூருக்கு மாம்பழம் மிகவும் பிடிக்கும். தனது பிரசித்தி பெற்ற சாந்திநிகேதன் வகுப்புகளை அவர் மாமரங்களின் கீழேதான் நடத்தினாராம்.

பகுதியாக அந்த வித்திலிருந்து மரம் மலர்ச்சி பெற்று, புலன்களுக்கு விளங்குகின்றது. இதே போன்று மனிதனின் எண்ணத்திலும், செயலிலும் பிறக்கும் அலைகளைச் சுருக்கி, சீவகாந்தம் தன்னுள் இருப்பு வைத்துக் கொள்கிறது.

பிறகு காலத்தால் செயலாலும், மனதாலும் தூண்டப்பட்டு, அந்தப் பதிவுகள் காட்சியாக எண்ணம், செயல், வடிவங்களில் மலர்கின்றன.

சுருங்கும் தன்மை தன்னிறுக்கச் சூழ்ந்தழுத்தும் பேராற்றலான இறை நிலையாலும், விரித்து மலர்த்தும் தன்மை 'யோகான்' எனும் காந்த ஆற்றல் நுண் விண்ணாலும் நடைபெறுகின்றன.

இறைநிலை தன்னிறுக்கச் சூழ்ந்தழுத்தும் ஆற்றலால், 'வேதான்' எனும் நுண் விண்ணாகி, அதன் சுழற்சி விரைவால் எழுந்த 'யோகான்' எனும் காந்த விண்ணாகி, தொடர்ந்து வந்த பரிணாமப் பயண நிகழ்ச்சிகள் அத்தனையும் பதிவுகளாகப் பெற்ற சிறந்த உடலுருவமே மனிதன்.

இத்தகைய மதிப்பு வாய்ந்த மனிதன், தனது பரிணாமம் கொண்டு வருவதே 'பிரம்ம ஞானம்' ஆகும்.

இந்த பிரம்ம ஞானத்தின் உச்சகட்ட அறிவே 'செயல்-விளைவுத் தத்துவ ஞானம்.'

'செயல்-விளைவு நீதி' என்பது தத்துவமொழியில் "கூர்தலறம்'' எனப்படுகிறது.

இதற்கு, தவறு இன்றித் தக்கபடி இறை நிலையால் வழங்கப்படும் நீதி என்பதே பொருள்.

ஒவ்வொரு செயலையும் மனிதன் செய்கிறான். இறைவன் கூலி தருகிறான்.

கூலி தரும் கணக்கை இறைவன், மனிதனின் செயலிலேயே உள்ளடக்கியிருக்கிறான்.

நோக்கம், திறமை, தொடர்பு கொள்ளும் பொருள், காலம், இடம் ஆகிய ஐந்தும் கூடியே, எந்தச் செயலுக்கும் தக்க விளைவு உருவாகி வெளிப்படுகிறது.

"இறைநீதியென்பது எப்போதும் வழுவாது''

முற்கால அனுபவம், தற்காலச் சூழ்நிலை, எதிர்கால விளைவு எனும் 'முக்கால ஞானம்' மனிதனிடம் அமைப்பாக உள்ளது.

விழிப்போடு சிந்தித்துத் தேவை, அளவு முறை இவற்றைத் தேர்ந்து விளைவறிந்து மனிதன் செயலாற்றினால், விளைவுகள் எப்போதும் இனிமையாகவே இருக்கும்.

நல்லது!

அதுசரி, மனித உடல் உற்பத்தியும், வளர்ச்சியும் எப்படி ஏற்பட்டது?

(அடுத்த வாரம்)

"உங்க பொண்ணு அந்த கம்பவுண்டரோட பழகறாளே... நீங்க கண்டிச்சு வைக்கக்கூடாதா?"

"புத்தி கெட்டவ!... டாக்டரை விட்டுட்டு ஒரு கம்பவுண்டரை 'லவ்' பண்றா பாருங்களேன்!" - கிரிஜா மணாளன்





# லோக்சபா எக்ஸ்பிரஸ்

எண்பது வயது முதியவர் ஒருவர் தன் வீட்டிலிருந்து புறப்பட்டு ஒரு மணி நேரம் போல இரண்டு பஸ்களில் பயணம் செய்து, பூனாவில் பாராளு மன்றத் தேர்தலில் போட்டி யிடும் ஒரு வேட்பாளரைப் பார்த்து 200 ரூபாய்க்கு ஒரு செக்கைக் கொடுத்து "நீங்கள் தேர்தலில் வெற்றி பெற வாழ்த்துக்கள்! உங்களைப் போன்ற நேர்மையான, திறமையான வர்கள்தான் இன்றைக்கு அரசியலுக்குத் தேவை" என்று வாழ்த்தினார். இது போல பல படித்தவர்கள் அவருக்கு வாழ்த்து சொல் கிறார்கள். அந்த வேட் பாளர் பெயர்: அருண் பாட்டியா. பூனாவில் மாநகர கமிஷனராகப் பணி யாற்றிய நேர்மை யான, அநீதிக்கு வளைந்து கொடுக்காத,

# வாழ்க வளமுடன்!

வாழ்க்கைக்கு உதவும் உன்னதத் தொடர்!

## வேதாத்திரி மகரிஷி

## நல்ல குழந்தை பிறக்க வேண்டுமா?

தாவரத்தின் வித்துவில் ஒரு மரம் முழுவதும் எவ்வாறு முளைவிட்டு, மரம், கிளை, இலை, பூ, காய், பழம் எனப் படிப்படியாய்க் குறிப்பிட்ட காலத்தில் மலர்ச்சி பெறுகிறதோ, அவ்வாறே தான் மனித உருவமும் வித்தில் அலைவடிவில் சுருங்கி யிருந்து, அன்னையின் கருப்பையில் ஒவ்வொன்றாக உருவடைகின்றது. ஒன்பது மாதம் பத்து நாட்களில் உடல் முழுமையாக உருவானபின், அன்னையின் கருப்பையை விட்டுத் தனது இயல்பூக்க விரைவாலேயே குழந்தை வெளியேறி உலகம் என்ற மண்ணைத் தொடுகின்றது. குடும்ப வாழ்வில் பொறுப் பேற்றுள்ள கணவன்- மனைவி

ஓவியம்: ஷ்யாம்

இருவரும் கருப்பையில் வளர்ந்து வரும் குழந்தையின் உறுப்புகளின் வளர்ச்சியை நன்றாக நினைவில் கொள்ள வேண்டும்.

இந்தக் காலகட்டத்தில், தம்பதி கள் போதைப்பொருள் உபயோகித்து உறவு கொண்டாலும், முரட்டுத்தனமாக நடந்துகொண் டாலும், உருவாகிவரும் குழந்தையின் உறுப்புகள் அதன் விளைவாகத் தாக்கப்பெறும்.

'செயல் விளைவு நீதி' அடிப் படையில் பெற்றோர் களின் அறி யாமை, அலட்சி யம், உணர்ச்சி வயம் இவற்றால் கருவில் வளரும் குழந்தையின் உறுப்புகள் நலிவுறும்.

மேலும், கர்ப்ப காலத்தில் கருவுற் றிருக்கும் பெண்ணுக்கு மனதில் துன்பமோ, அச்சமோ அளிக்கும்படி எவரும் நடந்துகொள்ளக் கூடாது.

குழந்தை உருவாகும்போதே தாய்-தந்தை இருவரின் கருமையப்பதிவு கள் குழந்தைக்குச் சொந்தமாகி விடும்.



**கு**ங்குமத்தில், அரஸ் ஜோக்ஸை வாராவாரம் விடாமல் படிப்பதுண்டு-இந்த வாரம் அட்வான்ஸாக! அத்தனை ஜோக்குகளும் கன ஜோர். அதிலும் ஏழாவது ஜோக் கனமே கனமான ஜோர்: வாய்விட்டுச் சிரித்தேன்!

-ஓவியர் ஷ்யாம்.

அதோடு, கருப்பையில் குழந்தை வளரும் காலத்திலும், பிறந்தபின் அதனை வளர்க்கும் முறையிலும் ஏற்படும் விளைவுகளும் குழந்தையின் உடல் நலத்தையும், மன வளத்தையும் தக்கபடி அமைத்துக் கொடுக்கும்.

நல்ல குழந்தை பிறக்க வேண்டும் என்று கணவனும், மனைவியும் விரும்புவது இயல்பு.

அதற்கேற்றவாறு அவர்கள் கடமையை ஆற்றாவிட்டால் எவ்வாறு நல்ல குழந்தையை அடைவது?

ஒரு குழந்தையின் உடல் நலமும், மனவளமும் பெற்றோர்களுக்கு மட்டும் உரிமையானவையல்ல! மனித சமுதாயத்தில் குழந்தை முதல் பெரியவர்கள் வரை அனைவருக்கும் வாழ்க்கை ஒழுக்கங்களை அறிஞர்கள் போதனை செய்தும் வலியுறுத்தியும் வருகின்றார்கள்.

மனித சமுதாயம் வளம் பொருந்தியதாக இருக்க வேண்டு மென்ற கருத்து எல்லா மக்களுக்கும் பொதுவாக இருக்கிறது.

எல்லாம் வல்ல இறைநிலையே தனது பரிணாமத்தின் விண் முதலாக மனிதன் வரையில் அனைத்துமாக மலர்ந்து இயங்கிக் கொண்டிருப்ப தாலும், நுண் விண்ணாகிய வேதா வின் சுழற்சி விரைவால் தோன்றிய காந்த அலை போன்றவன்

காந்தமாக காந்த அமல
உயிரினங்களில் மனமாக
இயங்குவதாலும்,
மனிதனுடைய மன உணர்வில்
அனைத்துயிர்களும் நலமாய்
இருக்க வேண்டுமென்ற
எண்ணம் இயல்பாக
அடங்கியுள்ளது.



சிலரிடம் மாத்திரம்
இந்த எண்ணம் மலர்ந்து,
விரிந்து பலரும் தெரிந்து
கொள்ளும் விதத்தில்
விளங்குகிறது.

இந்த இயற்கையான மனிதத்
தன்மைக்கு ஏற்ற பொருத்தமான
முறையில் விளைவறிந்து செயலாற்ற
வேண்டியது மனிதனின் கடமை
யாகும்.

செயல் விளைவு தத்துவ ஞானம்
தான் 'இறைநிலையே மனித மனம்
வரையில் பரிணாமத்தில் விரிந்துள்ளது'
என்ற பிரம்மஞானத்தின் பயனாகும்.

மனிதகுலத்தின் அறிவின் வளர்ச்
சியிலும், பண்பாட்டு ஒழுங்கிலும்,
பொருள் உற்பத்தித் துறையிலும்
விஞ்ஞானமானது பெருமை கூறிப்
போற்றும் அளவுக்கு உயர்ந்துள்ளது
என்பதை எவரும் மறுக்க முடியாது.

எனினும் இன்றுவரை வளர்ந்
துள்ள விஞ்ஞானம் 'மனித குவத்தை
எந்த அளவில் கொண்டு வந்து
நிறுத்திவிட்டு மேலே செல்ல
முடியாமல் வைத்துள்ளது' என்று
ஆராய்ந்து பார்த்தால்...

'மனித இனத்தின் வாழ்வில்
பொருள், புகழ், அதிகாரம்,
புலனின்பம் என்ற நான்கில் விளை
வறியாது அளவு முறை கடந்து அதே
விஞ்ஞானம் உயர்த்திவிட்டிருக்கிறது'
என்பதும் விளங்கும்.

போட்டி, பொறாமை, பகை,
போர் என்ற நான்கில்
மனித இனத்தின்
வாழ்வையே
குலைத்துவிடும்
அளவுக்கு விஞ்ஞானம்
கொண்டு
வந்துவிட்டுள்ளது.

உயிர்க்கொலை,
பிற உயிரின் உடலை
உணவாகக் கொள்ளு
தல், பிற உயிரின்
வாழ்வின் சுதந்திரத்தை அழித்தல்
என்ற வன்முறைகளைத் தயக்க
மின்றி அனைவரும் செய்து மகிழ
ஆட்சி முறையில் சட்ட ஆதரவையும்
விஞ்ஞானம் பெருக்கிவிட்டது.

தனக்கும், சமுதாயத்திற்கும் ஆக்க
வழியில் செயல்பட உதவ வேண்டிய
மனிதனின் உடல் ஆற்றல்களையும்
வேடிக்கை, வினோதங்கள், விளை
யாட்டுக்கள், திருவிழாக்கள் இவற்றில்
பயனின்றிச் செலவு செய்ய விஞ்
ஞானம் வழிவிட்டுவிட்டது.

இந்த நிலைமை மாறி மனித
ஆற்றல் மனிதகுல வளத்துக்கே பயன்
பட வேண்டுமானால், விஞ்ஞானத்
துறைகள் அனைத்திலும், மெய்ஞ்
ஞான அறிவான பிரம்ம ஞானமும்,
செயல்விளைவுத் தத்துவஞானமும்
இணைக்கப்பட வேண்டும்.

சமுதாயம் வளமுடையதாக
இருக்க வேண்டும் என்பது நமது
விருப்பம். செயல்விளைவுத் தத்துவப்
படி அதற்கு ஏற்ற செயல்களைச்
செய்ய வேண்டும்.

என்ன செயல்கள்?

*(அடுத்தவாரம்)*

# மனித குலத் தலைவர்களே வருக!

1. குழந்தைப் பேறு-வளர்ப்பு இவற்றில் சிறப்பு, கல்வி, தொழில் இவை எல்லாக் குழந்தைகட்கும் காலத்தால் கிடைக்க வழி காண வேண்டும்.

2. குழந்தைகளை உருவாக்கி, வளர்த்து, வாழ வைக்கும் பெண் குலம் உரிய மதிப்போடும், வளத்தோடும், பாதுகாப்போடும் வாழ ஏற்ற திட்டங்களும், செயல்களும் வேண்டும்.

3. எல்லா மக்களுக்கும் வாழ்க்கைத் தேவைகள் பொது. தொழில் செய்து பொருள் ஈட்டியேதான் அவற்றைப் பெற முடியும். எல்லோருக்கும் தொழில் கிட்டக் கூடிய உலகப் பொருளாதார சீர்திருத்தத் திட்டம் இதற்குத் தேவை.

4. எந்த வகையிலும் பிறரது மனதுக்கும், உடலுக்கும் துன்பம் அளிக்காமலும், பிறர் பொருள் பறிக்காமலும், முடிந்தவரை ஒவ்வொருவரும் பிறருக்கு உதவி செய்து வாழும் பண்பாடு மனிதகுல வாழ்வில் பரவிச் செயலாகத் தக்க முறையில் 'ஆன்மீகக் கல்வி' எல்லாத் துறையிலும் வளர வேண்டும்.

இவை அனைத்தையும் மனித குலம் பெறுவதற்கும், அதன்படி வாழ்வதற்கும் அனைவரிட



மும் இயற்கையமைப்பு இருக்கிறது. செயலில் மலர்த்திப் பயன் பெற நாம் ஒவ்வொருவரும் இயன்றவரை முயல்வோம்.

இறைநிலை, உயிர்நிலை (நுண் விண்), காந்த நிலை... இம்மூன்றும் ஒன்றிலிருந்து ஒன்றாகத் தரம் மாறித் தோன்றியவைதான்.

இவை மூன்றும் புலனியக்க உணர்வின் குறைந்தபட்ச அளவுக்கும், உயர்ந்தபட்ச அளவுக்கும் அப்பாற்பட்டதாக உள்ளதால் புலன் இயக்கங்களிலேயே பழகிக்கொண்ட பொது மக்களால் இம்மூன்று தத்துவங்களையும் புரிந்துகொள்ள முடியவில்லை.

புரிந்துகொண்ட தத்துவஞானிகளும், இவற்றை 'மறை பொருட்கள்' என ஒதுக்கி வைத்துவிட்டனர்.

பெருக்காடியும், தொலைநோக்கியும் கொண்டு உடலை, உலகை, வான்மண்டலத்தை ஆராய்ந்து வரும் விஞ்ஞானிகளும் அணு வரையில் போய், நின்று விட்டார்கள்.

அவர்களால் இன்ப-துன்ப விளைவுகளுக்கு மூலமான மனதைப் பற்றியும், உணர்வுகளை ஊக்கும் அழுத்தம், ஒலி, ஒளி, சுவை, மணம், இவற்றைப் பற்றியும் விளக்கி மனித குலத்தை வழி நடத்த முடியவில்லை.

இதன் காரணமாகத்தான் இது வரையில் விஞ்ஞானிகளோ, மெய்ஞ் ஞானிகளோ 'மனித குல வாழ்வைக் குலைக்கும் போர் அவசியம்தானா?' என்ற வினாவை எழுப்பி விடை காண முயலவில்லை.

இந்த உண்மையைத் திரு வள்ளுவர் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே எடுத்துக்காட்டியிருக்கிறார் :

"சுவை யொளி ஊறு ஓசை நாற்ற
மென்று ஐந்தின்
வகையறிவான் கட்டே உலகு''

என்று. மேலும் நாம் சிந்திக்குமிடத்து, 'உலகில் எத்தனையோ மதங்கள் தோன்றி மனித வாழ்க்கைக்கு வளமான சாதனை முறைகளைப் போதித்து வருகின்றன' என்பதும் சிந்தனையால் கடைந்தெடுத்துப் பார்த்தால், எல்லா மதங்களின் அடிப்படைச் செயல் முறைகள் இரண்டுதான் என்பதும் தெரியவரும். அந்த இரண்டு செயல் முறைகளாவன :-

1. இறை வழிபாடு
2. அறநெறி

இறைவழிபாடு என்றால் என்ன?

இறைநிலையைத் தெளிவாக அறிந்தால் தானே முறையான இறைவழிபாடு செய்ய முடியும்? அறநெறியென்றால் என்ன? செயல்-விளைவுத் தத்துவ ஞானம்தானே அது?

உயிர்கட்கும், உலகுக்கும், பேரியக்க மண்டலத்துக்கும் மூலப் பொருளான தெய்வநிலை இதுதான் என்று விஞ்ஞானிகளும், மெய்ஞ் ஞானிகளும் ஒன்றுகூடி, ஆராய்ந்து தேர்ந்து மக்களுக்கு உணர்த்த

**காலணிகளைக் கவனிக்க...**



பஸ்ஸில் பிரயாணம் செய்யும்போது செருப்பைக் காலுக்கடியில் கழற்றிப் போடுவோம். பஸ் ஓடிக்கொண்டிருக்கும்போது, அதன் அதிர்வில் செருப்புகள் நகர்ந்து முன்னால் போய்விடும். அப்புறம் நாம் இறங்கும்போது, நாம் நம்முடைய செருப்புகளைத் தேடிக் கண்டுபிடித்து எடுக்கவேண்டிய சூழ்நிலை ஏற்படும். இந்தப் பிரச்சனையைத் தவிர்க்க, நாம் செருப்புகளைத் தலைகுப்புறக் கவிழ்த்துப் போடலாம்.

– ஆர். பிருந்தா

வேண்டியது இப்போது காலத்தின் கட்டாயமாக இருக்கிறது

பூமி, நீர், காற்று, சூரியன், பேரியக்க மண்டலம் அனைத்தும் தெய்வத்தாலானவைதான். மனிதனால் இவற்றில் எதும் செய்யப்படவில்லையென்ற உண்மையினை மனித குலம் உணர்ந்துகொண்டது. எனினும் எல்லோரும் பிறக்கின்றார்கள், வாழ்கின்றார்கள், ஒரு குறிப்பிட்ட காலத்திற்குப் பின் செத்துப் போகின்றார்கள்.

உலகின் ஒரு குழுவினரை, மற்ற ஒரு குழு - செல்வச் செழிப்பு, ஆயுதபலம், உடல்வலிவு இவற்றைக் கொண்டு, 'போர்' என்ற வன்முறையில் கொன்றுவிடலாம் என்றால், உலகில் கொலைகாரர்களேதான் எப்போதும் மீதமாக இருக்க முடியும்.

'இதுவா மெய்ஞ்ஞானத்தைப் பேசிக்கொண்டே விஞ்ஞானத்தை வளர்த்துக் கொண்டு வரும் மனித இன வாழ்வு?' என்ற வினாவுக்கு விஞ்ஞானிகளும், மெய்ஞ்ஞானிகளும், அரசியல்வாதிகளும், பொருள்துறைவாதிகளும், கல்விப் பொறுப்பிலுள்ள பல்கலைக் குழுமத் தலைவர்களும் விடை காணக் கடமைப்பட்டுள்ளார்கள்.

இவற்றையெல்லாம் விரிவான விசாரணைக்கு எடுத்துக்கொண்டு, அறிஞர் பெருமக்கள் கடமையாற்றி உலகை வாழ்க்கைச் சிக்கல்களிலிருந்து விடுவிக்க வேண்டுமென்ற பணிவான வேண்டுகோளாகவே அறிஞர்கள் எனது விரிவான வினாக்களை எடுத்துக் கொள்ளவேண்டும்.

எனது விரிவான எடுத்துக்காட்டுகளானவை எவர்மீதும், எந்தத் துறையின் மீதும் குறைகூறுவதற்கு அல்ல; குறைகளைத் திருத்தி, நலம் காண மனித குலத் தலைவர்களைத் தூண்டுவதே எனது உள்நோக்கமாகும்.




இன்றியமையாத தேவை என்ன?

உலகப் பொதுவாக மனிதகுல வாழ்வின் நலத்தையும், வளத்தையும் பற்றிச் சிந்தித்து, மக்களை வழிநடத்த, "கருணையுள்ளம் கொண்ட பேரறிஞர்களின் ஆன்மீகச் சிந்தனை மன்றம்" ஒன்று தேவை.

செல்வத்திலும், சமுதாய நல நோக்கத்திலும், ஆன்மீகச் சிந்தனையிலும் சிறந்த ஒருவர் முன்வந்து, பொறுப்பு ஏற்று அப்படியொரு மன்றத்தை உலகப் பொது அறக்கட்டளையாக அமைக்க வேண்டும்.

ஆட்சிப் பொறுப்பிலிருந்து ஓய்வு பெற்றவர்கள், கல்வித்துறைத் தலைவர்கள், விஞ்ஞானிகள், மதத் தலைவர்கள், பொருள்துறைத் தலைவர்கள், கலைஞர்கள் இத்தகையவர்கள் முதலில் கூடி "உலகப் பொதுவான சமுதாய நல அறக்கட்டளை" அமைக்க வேண்டும்! அப்புறம்?

(அடுத்த வாரம்)

# முழுமையான மனிதம்!




50

மனிதஇனம் தோன்றி இலட்சக் கணக்கான ஆண்டுகள் சென்று விட்டன.

எல்லா நாடுகளிலும், எல்லா மூலைகளிலும், ஆங்காங்குள்ள தட்பவெப்ப நிலைகள், விளைபொருட்கள் இவற்றிற்கேற்ப செயல்-விளைவு ஞானத்தின் மூலம் வந்த அறிவு இப்போது உலகம் முழுவதும் பரவி, ஒரு பொதுவான மனித இனப் பண்பாடாக உருவாகி வருகிறது.

அன்று முதல் இன்று வரையில் மனித சமுதாயத்திற்குத் தலைமையேற்று வழிநடத்தி வந்த - அரசியல், மதம், பொருளாதாரம், (வாணிபமும், சேமிப்பும் உட்பட) என்னும் மூன்று துறைகளின் -தலைவர்களால் இம் மூன்று துறைகளிலும், மனித குலத்திற்குத் தேவையான அனுபோக அனுபவ அறிவு கிடைத்திருக் கின்றது.

எனினும், மனித அறிவுக்கு ஓர் இயல்பு உண்டு. குறுகிய நிலையிலிருந்து சுருங்குவதற்கும், தனியான பயிற்சி பெற்றாலன்றி முடிவதில்லை.

இதனால் ஒரு காலத்தில் ஒரு இடத்தில் நலம் என்றும், தேவை யென்றும் கொண்ட பழக்கத்தை, தேவை இல்லா இடத்திலும், துன்பம் அளிக்கும். மாற்றிக் கொள்ள முடிவதில்லை.

இதனால் உலகில் தோன்றிய தத்துவஞானிகள் எடுத்துரைத்த நலம் அளிக்கும் போதனைகளை மதித்துப் பின்பற்றவில்லை.

வாழ்க்கைக்கு உதவும் உன்னதத் தொடர்

மேலும் வாழ்வில் பழக்க வழக்கச் சடங்கு முறைகளால் ஏற்பட்ட குழுக்களின் உரிமையுணர்வாலும், அதன் மூலம் உருவாகியுள்ள பொருள்-வரவு பற்றாலும், அத்தகைய உயரறிஞர்கள் பலரைக் கொலை செய்து கொண்டேயிருப்பது செயல் முறைப் பழக்கமாகிவிட்டது.

வேடிக்கையும், வெடிமருந்துகளும் பெருகிவிட்ட இக்காலத்தில், தனி மனிதனின் தத்துவபோதனை பயனளிக்காது என்பது மட்டுமல்ல, உயிர் அச்சமூட்டுவதாகவும் உள்ளது.

எனவே வருங்காலத்தில் தனி மனித தத்துவ ஒழுக்க போதனை முறையை மாற்றிச் சமுதாயத்தால் அங்கீகரிக்கப்பட்ட அறிஞர் குழுக்களின் ஆதரவோடும், மனிதகுல நல வள சீரமைப்புப் போதனைகளைத் தொடங்க வேண்டும்.

ஒவ்வொரு தனி மனிதனுக்கும் உலக சமுதாய அமைப்பிலும், வளத்திலும் உரிமையுண்டு. கடமையும் உண்டு.

நம் கண்களுக்கு எட்டும் தொலைவிலும், நாம் பயணம் செய்யும் ஊர்கள், நாடுகள் இவற்றிலும் எத்தனையெத்தனை கோடி வீடுகளை நாம் பார்க்கின்றோம்.

இவை எப்படி வந்தன?

மக்களின் உழைப்பால்தானே?

உலகில் வாழும் அவ்வளவு பேரும் உடுத்தியிருக்கும் உடைகள் மனிதர் உழைப்பின் மூலம் உற்பத்தியானவைதான்.

அன்றும், இன்றும் மனித குலம் உண்டுவரும் உணவு வகை அத்தனையும் மனித உழைப்பின் பலனால் பரவி, உலகுக்குப் போய்ச் சேருகின்றன.

உலக மக்கள் அனைவரின் உழைப்பின் பலனும் நேர்முகமாகவோ, மறைமுகமாகவோ ஒவ்வொரு மனிதனுக்கும் வந்து சேருகின்றது. தனி மனிதனும், உலக சமு



''உங்க படத்துல டிஜிட்டல் சவுண்ட் ரொம்ப பயங்கரமா இருக்குது...''
''நிஜமாவா?''

''அவர் பர்ஸ்ல நான் கைவிட மறுக்கறார்!''
-அம்பைதேவா

தாயமும் 'பொருளாதாரம்' எனும் முத்(?)யமான வாழ்க்கைத் துறையால் தவிர்க்கமுடியாதபடி பின்னப்பட்டிருக்கின்றார்கள்.

பிறக்கும்போதே ''உலகப் பொருளாதாரம்'' என்ற கட்டிடத்தினுள் மனிதன் நுழைகிறான். இறக்கும்போதுதான், அந்த வீட்டை விட்டு வெளியேறுகிறான்.

இயற்கை இயல்பு இவ்வாறிருக்க, மனிதர் ஏன் ஒருவரை ஒருவர் பகை, பிணக்கு, போர் இவற்றால் துன்புறுத்திக் கொள்கின்றார்கள்?

மனிதனது இறுக்கநிலைதான் காரணம். இறுக்கம் நீங்கித் தளர்ச்சி பெற்று மனம் விரிவடைய வேண்டுமெனில், அதன்மூலம் மனிதனிடத்தில் உள்ளடக்கமான அன்பும், கருணையும் மலர்ந்து செயலுக்கு வரவேண்டுமெனில், தனிமனிதனின் வாழ்வுக்குச் சமுதாயம் உறுதியளிக்க வேண்டும்.

காலத்திற்குப் பொருத்தமான சாதனைக்கு உரிய போதனைகளும் வேண்டும்.

இவற்றிற்கெல்லாம் பொறுப் பேற்று மக்களை வழிநடத்துவதற்காகவே, 'உலக நலம் விரும்பும் பேரறிஞர்குழு'வின் தொண்டு



வேண்டும் என்று கூறுகிறேன்.

மேலும் சமுதாய நலத்திற்கும் வளத்திற்கும், தனிமனித மனவளம் தான் முக்கியம்.

வாழ்க்கையில் ஈடுபட்டுள்ள எல்லோரும், வாழ்க்கைக்கு முதற்பொருளான மனதையும், அதன் இயக்க ஆற்றலையும் அறிந்துகொள்ள ஏற்றபடி உலகப் பொதுக் கல்விமுறை உலகெங்கும் பரவவேண்டும்.

இந்தக் கட்டத்தில்தான், 'நாம் நமது மனதைப் பற்றிச் சிந்திக்கவும், அதனுடைய ஆற்றல்களை அறியவும், அதனை இயற்கை ஆற்றலுக்கு ஒத்த முறையில் செயல்பட வைக்கவும் பழகிக் கொள்ள முயற்சிக்க வேண்டும்.

(அடுத்த வாரம்)

''ஆமாம்! தியேட்டர்ல தூங்கவே முடியலைனா பாருங்க...''
-வி. சாரதி டேச்சு

# எண்ணத்தைப் பற்றி எண்ணிப் பார்ப்போமா?




11-6-04

"எண்ணிய முடிதல் வேண்டும்
நல்லவே எண்ணல் வேண்டும்
திண்ணிய நெஞ்சம் வேண்டும்
தெளிந்த நல்லறிவு வேண்டும்"

- மகாகவி பாரதியார்

ஆன்மாவின் செயல்களும் அனுபவங்களும்தான் மனம் எனப் படுகிறது.

மனத்தை, அதன் தனிப்பட்ட ஒரு இயக்கச் சிறப்பைக் குறித்து அதனையே எண்ணம் என்று வழங்கி வருகிறோம்.

உயிர் என்பதே ஆன்மா வாகும்.

ஆன்மாவென்பது உயிராற்றல் நுண் துகள்கள் கோடானகோடி சேர்ந்த ஒரு கூட்டுத் தொடரியக்கம்.

இவ்வுயிராற்றலின் தற்சுழற்சியினால் விளையும் அலைகளே புலன்கள் மூலம் செயலாகும்போது உணர்தல், கணித்தல் என்ற செயல்களாகி அவை உயிர்த்துகளில் பதிவாகிக் கொண்டே இருக்கின்றன.

கணிதம் என்பதே காலம்- தூரம்- பருமன்- வேகம் எனும் கணித்தல், எண்ணுதல் என்றாகி எண்ணம் என்று மன இயக்கத்தைக் கூறுகிறோம்.

மனம் என்ற சொல் ஆன்மாவின் எல்லா உணர்வுச் செயல் பிரிவு களையும் குறிக்கும் பொதுக் கருத்து!

உதாரணமாக-

உடல் தேவைகளை உணரும், முடிக்கும் அளவில் அது அன்னமய கோசமாக அசைந்து கொண்டு இருக்கிறது.

அதனால் விளைந்த புலனியக்கப் பதிவுகளை, நினைவலைகளாகப் பிரதி பலித்துக் கொண்டே இருக்கும்.

செயலில் மனோமய கோசமாக அலைந்து கொண்டு இருக்கிறது.

ஆன்மா புலன்கள் மூலம் விரிந்தாற்றும் வெளிப்புறச் செயல்களை நிறுத்தித் தனக்குள்ளே தன் உணர்வாற்றலை நிலைபெறச் செய்யும்போது அது பிராணமய கோசமாக நிலைபெற்று இருக்கிறது.

தனது ஆன்மாவின்

இயக்க இருப்பு உண்மைகளை உணர்ந்த பின், மேலும் ஒடுங்கித் தனக்கு இயக்கக்களமாக அமைந்த பேரியக்க மண்டலத் தோற்றம், இயக்கம், விளைவுகள் இவற்றையெல்லாம் உணரும்போது அது விஞ்ஞானமய கோசமாக விரிவு பெற்று விளங்குகின்றது.

மேலும் தனது இயக்கங்களை யெல்லாம் கழித்து நிலைபேறு அடைந்து மெய்ப் பொருளுணர்வு பெறும்போது, அது ஆனந்த மயகோசமாக முழுமை பெற்று நிறைவாக நிற்கின்றது.

இப்படி ஆன்மாவின் ஒவ்வொரு இயக்கச் சிறப்பையும், எல்லையையும் தனித் தனியாகக் குறிப்பிட்டு ஒவ்வொரு நிலையையும் ஒவ்வொரு கோசமாகப் பிரித்துப் பெரியோர்கள் விளக்கி உள்ளார்கள்.

ஆன்மா தனது செயலாலும், அனுபவத்தாலும் பெறும் திறன்களைத் தனக்குள்ளே பதிவுகளாகப் பெற்று, அதனாலேயே தன்னைப் போர்த்திக் கொள்ளுகிறது.

அந்தந்த எல்லை பிரிவுகளுக்கேற்ப திகைப்புற்று மயங்கியோ, அல்லது விரிவடைந்து தெளிந்தோ வாழ்வை நடத்து கின்றது.

இத்தகைய ஆன்மாவின் இயக்க நிலையையும் எல்லை விரிவையும் குறிப்பதே கோசம் என்னும் சொல்.

இந்த ஐந்து கோசங்களையும் பொதுவாக மனம் என்று சொல்லலாம்.

மனம்... கீழ் நிலையில்- புலன்களின் மயக்கமுற்ற நிலையில்- உணர்ச்சி வயப்பட்டுக் குறுகிய நிலையில்- இயங்கி வருகின்றது.

விரிந்த நிலையில், விளக்கம் பெற்ற முழுமையில் தெளிவோடு விளைவறிந்து விழிப்பிலேயும் இயங்கி வருகின்றது. அன்னமய மனோமய கோசங்களில் மனத்தின் நிலையை உணர்ச்சி என்றும்... பிராணமயகோச நிலையில் அதனை அறிவு என்றும் விஞ்ஞானமய, ஆனந்தமய கோச நிலையில் மெய்யுணர்வு... என்றும் பேசுகின்றோம்.

ஆன்மா உடலில் ஒரு துன்ப உணர்ச்சியினைப் பெறும் போது, அதிலிருந்து தன்னை மீட்டுக் கொள்ள ஒரு பொருளையோ அல்லது செயலையோ நாடுகின்றது.

எந்தப் பொருளானாலும் செயலானாலும் அதற்குக் காலம், தூரம், பருமன், வேகம் (Time, Distance, Volume & Force) எனும் நான்கு பரிமாணங்கள் உண்டு!

இந்தப் பரிமாண அளவைகளைக் கொண்டு ஒவ்வொரு பொருளையும் அல்லது இயக்கத்தையும் ஆன்மா கணிப்பதால் அச்செயலுக்கு எண் ணம் என்ற பெயர் உண்டாயிற்று.

எண்ணுதலாகிய எண்ணுதலிலிருந்து எண்ணமாகிறது.

தன் இயக்கத்திற்கும் பிற இயக்கத்திற்கும் இடையே, ஒரு பொருளுக்கும் மற்றொரு பொருளுக்கும் இடையே, ஒரு இயக்கத்திற்கும் மற்றொரு இயக்கத்திற்கும் இடையே முன் உணர்ந்தவற்றிற்கும் தற்போது உணர்வதற்கும் இடையே உள்ள வேற்றுமைகளை ஒப்புமை உணர்வால் உணர்வதற்கும் (Relativistic Calculation)...

காலம், பருமன், தூரம், வேகம் என்ற நான்கு அளவைகளைக் கொண்டு கணிப்பதும், அக்கணிப்பின் போது ஏற்படும் தனது ஆற்றல் இயக்க அதிர்வு விளைவை இன்பமாகவோ துன்பமாகவோ உணர்வதும் ஆன்மாவின் செயல்களாகும்!

இத்தகைய கணக்கிடும் திறனைக் கொண்டு ஆன்மாவின் குறிப்பிட்ட செயலை 'எண்ணம்' என்று வழங்கி வருகிறோம்.

எண்ணம் ஆன்மாவின் செயலானால் ஆன்மாவின் மூல நிலை என்ன?

(அடுத்த வாரம்)

வருகை

# கோடரிக் கூழ் செய்யலாமா?

'ரஷ்ய நாட்டுப்புறக் கதைகள்' என்கின்ற நூலிலிருந்து இக்கதைகள் எடுக்கப்பட்டவை. ஆசிரியர்: எஸ்.லீலா. வெளியீடு: மணிமேகலைப் பிரசுரம், சென்னை-17. விலை : ரூ. 47/-

வயது முதிர்ந்த படையாள் ஒருவன் முன்னொரு காலத்தில் விடுமுறைக்காக சொந்த ஊர் போய்க்கொண்டிருந்தான். நடந்து களைத்துப் போய்விட்டான். வயிறு பசித்தது. வழியில் ஒரு கிராமத்துக்கு வந்ததும் முதலாவது குடிசையில் கதவைத் தட்டினான்.

"வழிப்போக்கன் இராப்பொழுதைக் கழிக்க இடம் தாருங்கள்'' என்று கேட்டான்.

கதவைத் திறந்த கிழவி, "படையாளே வா அப்பா'' என்று வரவேற்றாள்.

"அம்மணி, பசியால் வாடுகிறவனுக்குச் சாப்பிட ஏதாவது கிடைக்குமா'' என்று கேட்டான் படையாள்.

கிழவியிடம் யாவும் நிறையவே இருந்தன. ஆனால் அவள் ஒரு கருமி. பரம ஏழை மாதிரி பாசாங்கு செய்தாள்.

"அடப் பாவமே! என்னிடம் எதுவும் இல்லை. விடிந்தது முதல் நான் உணவின்றி பட்டினியாய் இருக்கிறேனே. என்ன செய்வேன்'' என்று புலம்பினாள் கிழவி.

படையாள் பின்பு காம்பு இல்லாத கோடரி ஒன்று பெஞ்சுக்கு அடியில் இருந்ததைக் கவனித்ததும், "வேறு எதுவும் இல்லையானால் அதோ அந்தக் கோடரியை வைத்துக் கூழ் செய்யலாமே'' என்றான்.

இரு கைகளையும் உயர்த்திக் கிழவி ஆச்சர்யப்பட்டுக் கொண்டாள்.

"கோடரிக் கூழா? கேட்டறியாத அதிசயமாய் இருக்கிறதே?''

"ஒரேயொரு சட்டி மட்டும் கொண்டுவந்து கொடு. நான் செய்து காட்டுகிறேன்'' என்றான் படையாள்.

கிழவி வைத்த கண் வாங்காமல் படையாளைப் பார்த்துக்கொண்டு நின்றாள்.

படையாள் ஒரு கரண்டியை எடுத்து கொதிக்கும் நீரை நன்றாய்க் காய்ச்சி சிறிதளவு வாயில் விட்டு ருசி பார்த்தான்.

"இன்னும் சிறிது நேரத்தில் தயாராகி விடும். ஆனால் உப்புத்தான் இல்லை.''

"உப்பு என்னிடம் இருக்கிறதே! இந்தா கொஞ்சம் எடுத்துக் கொள்.''

படையாள சிறிதளவு உப்பு போட்டு மீண்டும் கொதிநீரை வாயில் விட்டு ருசி பார்த்தான்.

"ஒரு கையளவு கேப்பை போட்டோமானால் எவ்வளவு நன்றாய் இருக்கும் தெரியுமா?'' என்றான்.

உக்கிராணத்தில் ஒரு சிறு

ரஷ்ய நாட்டுப்புறக் கதைகள்!

வாழ்க்கைக்கு உதவும் உன்னதத் தொடர்!

52

**வேதாத்திரி மகரிஷி**

# சொர்க்கம், நரகம் எப்படி வந்தது?

பூரணம் என்னும் மெய்ப் பொருளாக விளங்கும் தெய்வத்தின் பகுதி இயக்க நிலையே ஆன்மா.

கடலும், அலைகளும் போலத் தெய்வமும் உயிர்களும் ஆகும்!

கடலின் இயக்க ஆற்றலே, அசைவே அலைகளாக இருப்பது போன்று தெய்வத்தின் திரு விளையாடலே உயிர்களாக இயங்குகின்றன.

எனவே, ஆன்மா எண்ணுகிறதென்றால் தெய்வம் என்ற பேராதாரப் பெரும் பொருள் தான் எண்ணுகின்றது என்று பொருள்.

அணு என்ற அளவில் ஆன்மாவின் ஆற்றல் குறுகி நிற்கவும் முடியும். அகன்ற பேரியக்க மண்டலத்திற்கு அப்பாலுள்ள எல்லையற்ற பரவெளியாக நிற்கவும் முடியும்.

எவ்வாறெனில், எது அணு முதல் எல்லாமாக இருக் கிறதோ, அதுவே ஆன்மாவின் அறிவாகவும் இருப்பதால் அது எந்த அளவிலும் வடிவம் பெற முடிகிறது.

புலன்களால் கட்டுப்பட்ட நிலை யில் அதன் ஆற்றல் எல்லை கட்டிக் குறுகிவிட்டது. அந்த எல்லையை விரித்து விரித்துக் கடைசியில் பரநிலை வரையில் செல்லும்போது எல்லை அற்ற பரமாகவே ஆன்மா தன்னை உணர்ந்து கொள்ளுகிறது.



படிப்படியான ஆன்மாவின் எல்லை விரிவுகளையே ஐந்து நிலைகளாக்கிப் பஞ்ச கோசங்கள் எனப் பெரியோர்களால் பெயரிட்டு உள்ளார்கள்.

இத்தகைய எண்ணத்தின் ஆற்றல் தன்னுடல் வரையில் குறுகிக் கட்டுப் பட்டுச் செயலாற்றும்போது அதனை நர- அகம் என்று சொல்லு வார்கள்.

அதாவது இந்த உடலையே நான் என்று மயங்கிய நினைவு நிலை. நரன் என்பத மனிதத் தத்துவத்தைக் குறிக்கும் ஒரு சொல்.

அகம் என்பது உள்ளம் என்பதைக் குறிக்கும் சொல், நர- அகம் என்னும் இரு சொற்களும் ஒன்றிணைந்து நரகம் என்ற சொல்லாயிற்று.

உடலையே 'நான்' என்று கொள்ளும் மயக்கத்தில் சில பொருட்களும் சில மக்களும் மட்டும் 'தனது' என்று எண்ண வேண்டி இருக்கும்.

அதன் விளைவாகப் பொருள் உரிமை, மக்கள் உரிமை, இரண்டும் எழுந்து இவற்றைக் காக்க சாதி, மொழி, இன, மத, தேச அளவில் மனிதர் கூட்டுச் சேரும்போது சமூகத்தில் வேறுபாடு உணர்ச்சிகள் தோன்றித் துன்பங்கள் பெருகின.

இதற்கு மாற்றுச் சொல்தான் சுவர்- அகம், சுவர்க்கம்.

சுவர் என்றால் வான் அதாவது உயிர், உயிரே நான் என்று உணரும் சிறப்பு நிலை.

பேரியக்க மண்டல முழுதும் நீக்கமற நிறைந்த மகாகாசத்தின் சிறு கூறுதான் இவ்வுடலில் உள்ள உயிர் என்ற அகன்ற நினைவு.

அந்த நிலையிலே ஒருவன் தியானம் இருந்து அதை உணர்ந்த கொண்டானேயானால், உடல் அளவிலே நான் என்ற எண்ணம் மாறி உயிர் அளவிலே நான் என்ற எண்ணம் வந்துவிடும்.

எல்லா உயிர்களுக்கும் நலம் செய்ய வேண்டும் என்ற மனப்பாங்கு மனப்பக்குவம் வந்து விடும்.

அதைத்தான் சுவர்க்கம் என்று சொன்னார்கள்.

மயக்கத்தில் ஆற்றிய செயல் களால் விளைந்த துன்பங்களைக் களைந்து அமைதி பெறும் உயர் நிலை இது.



பேராற்றலாகிய எண்ண வலுவைப் பெற்ற மனிதன் ஏன் வாழ்வில் துன்பமடைய வேண்டும்?

இந்த வினாவிற்கு விடை இருக்கிறது!

அன்னமய கோசம் முதலாக ஆனந்தமய கோசம் வரையில் ஐந்து எல்லைகள் ஆன்மாவின் இலக்கணமாக இருக்கின்றன என்பதை அறிந்துள்ளீர்கள்.

அறிவின் விளக்க நிலைகளுக்கேற்ப இந்த ஐந்து நிலைகளிலும் படிப்படியாக மக்கள் உயர்ந்து கொண்டிருக்கிறார்கள்.

அன்னமய கோசம், மனோமய கோசம், என்ற இரண்டுவித மயக்க நிலைகளில் தான் பெரும்பாலோர் வாழ்கின்றனர். அவர்கள், வாழ்வைப் பற்றியோ இன்ப துன்பத் தோற்றங்களைப் பற்றியோ புரிந்து கொள்ளவில்லை.

மேல் நிலையில் உள்ளவர்கள், கீழ் நிலையில் உள்ளவர்களைப் புரிந்து கொள்கின்றனர்.

கீழ்நிலையில் உள்ளவர்கள் வாழ்வின் தன்மைகளைப் புரியாமல் செயல்களாற்றித் தனக்கும் பிறர்க்கும் துன்பங்களை விளைவித்துக் கொண்டே இருக்கிறார்கள்.

இந்தத் துன் பங்கள் சங்கிலி போல் விரிவான உலக சமுதாயத் தைத் தலைமுறை தலை முறையாக விரிந்து பரவித் தொடர்பு கொண்டுள்ளன.

வதைச் செய்கிறார்கள், அவர்கள் வழி பின்பற்றி நடப்போம் என்று வாழ்கின்றனர்.

இந்தப் பின்னணியிலே, 'மக்கள் நன்மை செய்ய வேண்டும்! தீமை செய்யக் கூடாது!'' என்று கட்டுப்பாடு விதிக்க வேண்டுமெனப் பெரியோர்கள் எண்ணினார்கள்.

கட்டுப்பாடாக விதித்தால் எல்லோரும் கேட்க மாட்டார்கள். அதனால் "நீ நல்ல செயல் செய்து வந்தால், இறந்த பிறகு உனக்குச் சுவர்க்

இதுவரை இந்தியாவை ஆண்டுள்ள பிரதமர்களில் 8 பேர் உத்திரப் பிரதேசத்தை சேர்ந்தவர்கள். ஆனால் இந்திய கிரிக்கெட் அணியிலோ 1952–லிருந்து இன்று வரை 3 பேர் தான் ஆடியுள்ளனர். அதிலும் ஓரளவுக்கு நின்று நிலைத்து ஆடுபவர் என்றால் முகமது கெய்ப்தானாம்! *– ராஜி*

வாழ்வை விளங்கிக் கொள்ளாத உணர்ச்சி நிலையில் உள்ளவர்கள், மற்றவர்களுக்கும் தனது எதிர் காலத்திற்கும் துன்பம் விளைவிக்காமல் ஒழுங்காக வாழ ஒரு நல்ல முறையை முன்னோர்கள் உருவாக்கினர். அதுதான் பக்தி நெறியாகும்.

இந்த உலகம் தோன்றி இதுநாள் வரையிலே எத்தனையோ கோடி மக்கள் வாழ்ந்து முடிந்திருக்கிறார் கள்.

மனிதர்கள் அறிவின் நிலையிலே ஏற்றத்தாழ்வு உடையவர்கள்!

முதலிலே அறியாமையிலிருந்து பின்னர் சிந்திக்கும் ஆற்றல் பெற்று, பிறகுதான் ஏதோ ஓரளவு தெளிவு பெறக்கூடிய அளவுக்கு வருகின்றார்கள்.

ஒருசிலர் இறுதி வரையிலே அறிவின் தெளிவில்லாமலேயே, பிறர் சொல்

கம் கிட்டும். மகிழ்ச்சியாக இருக்கலாம். அங்கு எல்லாவித இன்பங்களும் கிடைக்கும்'', என்று ஆசை காட்டினார்கள்.

"தீய செயல்கள் செய்தால் நீ இறந்த பிறகு நரகத்தைச் சேர வேண்டும்; அங்கே துன்பப்பட வேண்டும்'' என்று தீய செயல்களைத் தவிர்ப் பதற்காக அச்சமூட்டினார்கள்.

ஆசை காட்டியும் அச்சமூட்டியும் மனித குலத்தைச் சீர்திருத்த வேண்டும் என்று நினைத்த பெரியோர்கள் அந்தக் கருணையினாலே கற்பனையாக இந்தச் சொர்க்கம், நரகம் என்ற வார்த்தைகளைக் கொடுத்து மக்களை வழி நடத்த முற்பட்டார்கள்.

ஆச்சரியமாக இருக்கிறதா? அதுதான் உண்மை!

(அடுத்த வாரம்)

## அறிவு - விளக்கமென்ன?

தெய்வம் என்ற மெய்ப்பொருளே எழுச்சி பெற்று, பரமாணு(ஆகாசம்) ஆகி அதன் திரட்சி நிலைகளால் பிரபஞ்சப் பொருட்கள் அனைத்தும் தோன்றின.

அதிலிருந்து உயிர் தோன்றி மனிதன் வரையில் பரிணாம மடைந்து, அவன் தன்னை அறிந்து முழுமை பெற்றுத் தெய்வமாக முடிகிறான் என்ற உண்மையினை மறைபொருள் ஆக்கி விட்டார்கள்.

தெய்வம் தனியாக இருந்துகொண்டு மனிதனையும் பிரபஞ்சத்தையும் படைத்தது என்ற படைப்புக் கருத்தைப் பரப்பி, பாவம், புண்ணியம், நரகம், சுவர்க்கம், கடவுள் வழிபாடு, உயிர் வழிபாடு என்ற முறைகளை வகுத்தார்கள்.

வாழ்க்கைக்கு உதவும் உன்னதத் தொடர்!

# 53

# வாழ்க வளமுடன்!



வேதாத்திரி மகரிஷி

இக்கற்பனையின் ஆசையாலும் அச்சத்தாலும் அறிவறியா மக்கள் தங்களது செயல்களை ஒழுங்கு படுத்திக்கொள்ள முடிந்தது.

எனினும், உலகில் விஞ்ஞான அறிவு மக்களிடம் ஓங்கியபிறகு பக்தி நெறியில் உள்ள கற்பனைகளைப் பெரும்பாலான மக்கள் நம்ப மறுத்து விட்டார்கள்.

மேலும் நாட்டுக்கு நாடு இக் கற்பனைகள் வேறுபட்டு இருந்ததால் பல நாட்டவர் ஒன்றிணையும்போது கற்பனைகளின் திரை கிழிந்து விட்டது.

உண்மைப் பொருள் உணர்ந்து வாழத்தக்க ஞான நெறியும் ரகசியமாக வைக்கப்பட்டுவிட்டது.

இப்போது என்ன?

பக்தி நெறியிலும் மக்களுக்கு நம்பிக்கையில்லை; ஞான நெறியும் மறைபொருளாக இருக்கிறது; புலன் மயக்கில் உணர்ச்சி வயப்பட்டு வாழும் துன்ப வாழ்வே பரவிவிட்டது.

தவிர, தனி மனிதன் வாணிப முறை, தேவையற்ற பல பொருட்களைத் தேவையாக்கி மக்களை இயந்திரங் களாக மாற்றி விட்டது.

சமுதாயத்தில் பெரும்பாலான மக்கள் மனம் இருளடைந்து விட்டது.

எனவே, வாழவந்த நோக்கத்தைத் தெரிந்து கொண்டு, அந்த நோக்கத்திற்கு ஒத்ததாக வாழும் முறையை அமைத்துக் கொள்ள வேண்டும்.

வாழ்க்கையின் ஊடே அவ்வப் போது ஏற்படும் அனுபோக அனுபவங் களை அசட்டை செய்யாமல் கவன மாகக் குறித்துக் கொள்ள வேண்டும்.

அவற்றைப் புரிந்துகொள்ளவும் மதிக்கவும் வேண்டும்; பயன் கொள்ளவும் வேண்டும்.

இடையிடையே ஏற்படும் சிக்கல்களைக் கண்டு மிரளாத தன்மையை வளர்த்துக் கொள்ள





குங்குமம் இணைந்து வழங்கும்
TVS MOTOR COMPANY
வாரம் ஒருவருக்கு ஒரு பைக்!

வேண்டும். தீர்த்துக் கொள்ளும் வல்லமையையும் பெருக்கியாக வேண்டும்.

இவற்றிற்கெல்லாம் முன்பாக உடல், உயிர், மனம், மெய்ப் பொருள் என்ற நான்கைப் பற்றியும் அவற்றுக்கிடையே உள்ள தொடர்புகள் பற்றியும் சரியாகவும் தெளிவாகவும் அறிந்தாக வேண்டும்.

முக்கியமாக மனத்தைப் பற்றியும் மனத்தில் விளையும் எண்ணத்தின் வகை, தன்மை,

சக்தி பற்றியும் விரிவாக அறிய வேண்டும்.

அப்போதுதான் வாழ்க்கையில் வெற்றியும் அமைதியும் வரும்; நிலைக்கும். பிறவியின் நோக்கத்திற்காக இசைவான




அறிவுத்திறன் போட்டி 101,102ல் வெற்றிபெற்ற எம். நாராயணசாமி, மாசிலா ஆனந்தராஜ் தங்கள் குடும்பத்துடன்

வகையில் வாழும் முறை அமைய நல்வாய்ப்பும் கிட்டும்.

மனத்தைப் பற்றிய ஆராய்ச்சியை நடத்திவிட்டோம்.

இனி, அதில் விளையும் எண்ணத்தைப் பற்றியும், அதனை ஆராய்தலைப் பற்றியும், எண்ணத்தைக் கொண்டு நற்பயன் விளைவித்துக் கொள்ளும் வழிமுறையைப் பற்றியும் ஆராயலாமா?

வாழ்க்கைக்கே விளைநிலம் மனம்தான்.

மனத்திலேதான் எண்ணம், சொல், செயல் என்ற முத்தொழிலும் பிறக்கின்றன.

சொல், செயலுங்கூட எண்ணமாயிருந்துதான் சொல்லும் செயலும் ஆகின்றன.

எனவே 'மனம்' என்றாலும் 'எண்ணம்' என்றாலும் ஒன்றுதான்!

ஆனால், மனத்தின் இயக்கத்தையும் இயக்க நிலையையும் 'எண்ணம்' என்ற சொல் சிறப்பாகக் குறிக்கிறது!

தற்சோதனையிலும், குணநலப் பேற்றிலும் சிறப்படைய எண்ணத்தின் தன்மையையும் எண்ணத்தின் ஆற்றலையும் எண்ணத்தின் விளைவையும் எண்ணத்தின் வகைகளையும் அறிந்திருக்க வேண்டும்.

உயிர்ச் சக்தி புலன்கள் மூலம் பிற இயக்கத்தோடு தொடர்புகொள்ளும்போது தனது நிலையில் எழுச்சி அடைந்து தனது உடலியக்கத்திற்கும், தொடர்பு கொள்ளும் பொருளுக்கும் அல்லது நிகழ்ச்சிக்கும் இடையே உள்ள வேறுபாடுகளை அழுத்தமாக, ஒலியாக, ஒளியாக, சுவையாக, மணமாக உணர்கிறது.

இந்த உணர்ச்சிகளை ஒப்புவமையால், காலம், தூரம், பருமன், வேகம் என்ற நால்வகையால் கணிக்கிறது!

இந்தக் கணிப்புக்கு எண்ணுதல் என்ற சொல் குறிப்பாகி அதுவே எண்ணம் என்று வழங்கப் பெறுகிறது.

உயிர்ச் சக்தியின் இயக்க விளைவுதான் எண்ணம். அது அறியும் திறனுடையதால் அறிவென்றும் பேசப்படுகிறது.

(அடுத்த வாரம்)

வாழ்க்கைக்கு உதவும் உன்னதத் தொடர்

# நாம் வாழப் பிறந்துவிட்டோம்!

புதியதொரு பண்பாடு உலகுக்கு வேண்டும். அதற்கான வாழ்க்கை நெறியும் அவசியம் வேண்டும்.

அவை எவை?

போரில்லா நல்லுலகம், பொருள் துறையில் சமநீதி, நேர்மையான நீதிமுறை, நிலவுலகுக்கோர் ஆட்சி, சீர்செய்த பண்பாடு, சிந்தனையோர் வழிவாழ்வு, சிறப்புணர்ந்த பெண் மதிப்பு, தெய்வநீதிவழி வாழ்தல், தேர்த் திருவிழா தவிர்த்தல், சிறுவர் கட்கே விளையாட்டு, செயல் விளைவு உணர்கல்வி, சீர்காந்த நிலை விளக்கம், பார்முழுதும் உணவு - நீர் பொதுவாக்கல், பலமதங்கள் பல கடவுள் பழக்கம் ஒழித்துண்மை ஒன்றைத் தேர்ந்திடுதல்.

இவையே!

அதேபோல தனிமனிதன் உணர்ந்து பின்பற்ற வேண்டிய கீழே குறிப்பிட்டுள்ள ஐந்தொழுக்கப் பண்பாடும் வேண்டும், வேண்டும்!

அவரவர் தம் அறிவின் ஆற்றலினால் உடல் உழைப்பால் வாழ்வதென்ற முடிவும், மதிபிறழ்ந்து மற்றவர்கள் மனம், உடல் வருத்தா மாநெறியும், உணவுக்குயிர் கொல் லாத நோன்பும், பொது விதியாய்ப் பிறர் பொருளை, வாழ்க்கைச் சுதந்திரத்தைப் போற்றிக் காத்தும், பிறர் துன்பம் போக்கும் அன்பும் வேண்டும்.

போரில்லா நல்லுலகம் பற்றிப் பேசுவோமா?

போர் என்பது மனிதனை மனி தனே தனித்தனியாகவோ, கூட் டாகவோ கொன்று குவிக்கும் கொடிய செயல்.

நாம் வாழப் பிறந்துவிட்டோம். வாழ்வதற்கு விரிந்த உலகம் இருக்கிறது. இயற்கை வளங்கள் பலவும் உள்ளன. ஒருவரோடு ஒருவர் ஒத்தும் உதவியும் இயற்கை வளங்களை அனுபவித்து இன்புற்று வாழவேண்டும்.



வாழ்க வளமுடன்!

 வேதாத்திரி மகரிஷி

உலகில் இதுவரையில் எத்தனையோ போர்கள் நடந்து விட்டன. அவற்றுக்குக் காரணம் என்ன? அவற்றால் என்ன நன்மை யாருக்கு விளைந்தது? இன்னும் போர் உலகுக்குத் தேவைதானா?

மேற்படி வினாக்களை எழுப்பிக் கொண்டு ஆராய்வோம். முதலில் இயற்கை வளங்களைப் பற்றிச் சிந்திப்போம்.

ஒரே உலகில் பிறந்துள்ள நாம் அனைவரும் இயற்கையில் சகோதரர்களே!

நமது பிறப்பு, வாழ்வு, முழுமை அனைத்தும் இறைவனின் கருணையினால் நடைபெறுகின்றன.

இயற்கை வளங்களில் ஒன்றையுமே மனிதன் செய்ததில்லை. எனினும் அவற்றை முறையாக அனுபவித்துக் கொள்ளும் உரிமை உலகில் பிறந்த அனைவருக்கும் சமமாக உள்ளது.

ஏன் போர் என்கின்ற கொலைச் செயல் மூலம் மனிதனை மனிதன் கொன்று குவிக்க வேண்டும்?

ஒரு போர் நிகழ்ந்தால் ஒரு பகுதி மக்கள் மற்ற பகுதியினரால் கொலை செய்யப்படுகிறார்கள்.

கொலையாளிகள்தான் வெற்றி பெற்றவர்களாக உலகில் வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள்.

மீண்டும் ஒரு போர் வந்தால், இதேபோன்று வெற்றி பெற்ற கொலையாளிகள் மாத்திரம் மீதமாகிறார்கள்.

இவ்வாறு தொடர்ந்து சென்றால், உலகில் கொலையாளிகள் மாத்திரமேதான் வாழமுடியும் என்று விளங்குகிறது. நாளுக்கு நாள் அறிவு மேம்பட்டு வருகின்ற இக்காலத்திலும், விஞ்ஞான அறிவு ஓங்கியுள்ள இக்காலத்திலும் போர் தேவைதானா?

இந்தக் கேள்வியை எழுப்பிச் சிந்தித்து நல் முடிவு காணக்கூடிய அறிஞர்கள் உலகில் அருகி விட்டனரா?

கடவுளைப் பற்றி மக்களுக்கு உணர்த்தி வாழ்வில் அமைதி ஓங்க வேண்டும் என்று பாடுபடும் மதத் தலைவர்களே!

குற்றங்களைக் களைந்து மற்றவர்கள் அமைதியோடு பாதுகாப்போடு வாழ வேண்டும் என்று உலகத் தொண்டாற்றும் நீதிபதிகளே!




எளியவர்களை வலியவர்கள் துன்புறுத்துதல் கூடாது. அனைவரும் பாதுகாப்பாக அமைதியோடு இனிது வாழ ஏற்ற தொண்டினை ஏற்றுக்கொண்டிருக்கும் ஆட்சியாளர்களே!

உங்களை உருக்கத்தோடு தலை வணங்கிக் கேட்டுக் கொள்கிறேன்.

போர் என்பது மனித குலத்திற்குத் தேவைதானா?

கொடிய போர்கள் மேலும் இவ்வுலகில் தொடர்ந்தும் நடைபெறவேண்டும் என்று எண்ணுகிறீர்களா? அல்லது எங்களுக்கும் போருக்கும் சம்மந்தம் இல்லை

என்று நினைக்கிறீர்களா?

நீங்கள் அனைவருமே இந்த மனித குலத்தில் உறுப்பினர்கள். ஒவ்வொருவருக்கும் மனித குல வாழ்வினில் ஏற்படுகின்ற இன்பம், துன்பம், லாபம், நட்டத்தில் பங்குண்டு.

அறிஞர் பெருமக்களே!

விழித்தெழுங்கள். வாழவேண்டும் என்றெண்ணி உலகுக்கு நாம் யாரும் வந்ததில்லை. எனினும் பிறந்துவிட்டதினால் வாழ்ந்தே ஆகவேண்டும்.

மனித குலத்தில் பிறரை மதித்து வாழவேண்டும் என்ற பண்பாடு உருவாகாத முன்னம், விலங்கினத்தின் தொடராக வந்த செயல்களையே செய்து மனித இனம் வாழ்ந்த காலகட்டங்களில், பெரும்பாலும் பறித்துண்ணல் என்ற வாழ்க்கை முறையே பரவலாக நிலவி இருந்தது. அக்காலத்தில் கூலிக்காகப் பிறரைக் கொலை செய்யும் போர்கள் அவ்வப்போது உண்டாயின.

இன்றுள்ள சமுதாயச் சூழ்நிலையில், போர் என்ற கொடுஞ்செயல் தேவையே இல்லை. எனினும் பழக்கத்தால்தான் தொடர்ந்து வருகின்றது. மனித இனம் இதுவரையில் பெற்ற அனுபவங்களை, வாழ்க்கை முறைகளை நாம் கணித்துப் பார்த்தால், பழக்கத்திற்கும் - விளக்கத்திற்கும் இடையே போராடிக் கொண்டிருக்கக்கூடிய ஜீவ இனம்தான் மனிதன் என்பது விளங்குகிறது. எனினும் நாளுக்கு நாள் அறிவிற் சிறந்த கருணையுள்ளம் கொண்ட மனிதர்கள் எண்ணிக்கையில் பெருகிக்கொண்டுதான் இருக்கிறார்கள். இப்பொழுதும் போர் வேண்டுமா? சிந்தித்து முடிவு எடுத்தால் விளக்கத்தின் வழியே மனிதன் வாழத் தக்க உலக விரிவான ஏற்பாடுகளைச் செய்து கொள்ளலாம்.

போர் வேண்டுமென்று விரும்புபவர் யார்? இந்த வினாவிற்கு எளிதில் ஒரு பாமரன் கூட விடை கண்டு விடுவான். போர்த் தளவாடங்களை உற்பத்தி செய்து விற்பனை செய்து வருகின்ற ஒரு கூட்டமே அந்தப் போர் என்ற கொடுஞ்செயலைத் தொடர்ந்து நடைபெற ஊக்குவிக்கின்றது.

அதன் மூலமாகவே அவர்கள் வாழ்க்கையை வளத்தோடு நடத்தியும் வருகின்றார்கள். பிறரை வதைத்து, அழித்து அதன்மூலம் தான் இன்பம் பெறவேண்டும் என்றோ, வாழ்வை நடத்த வேண்டும் என்றோ இக்காலத்தில் மனிதனுக்கு அவசியமில்லை.

*(தொடரும்)*



எலுமிச்சம்பழத்தின் தோலைக் கொண்டு மிதியடிகளைத் தேய்த்தால் மிதியடிகள் நன்றாக மெருகுடன் அழகாக இருக்கும். எலுமிச்சம் பழத்தின் சாற்றைத் தேய்த்தவுடன் சிறிது நேரம் கழித்துத் துணியில் துடைத்துவிட்டு பிரஷ் போட்டுத் தேய்க்க வேண்டும்.

*- ஆர். மீனாட்சி*

# வாழ்க வளமுடன்!

## வேதாத்திரி மகரிஷி



அறிஞர் பெரு மக்களே! உங்களை தலைவணங்கிக் கேட்டுக் கொள்கிறேன்.

ஒரே ஒரு உலக விரிவான மகாநாடு நடத்தி, போர் என்பது இனி உலகுக்குத் தேவையில்லை என்று முடி

# யுத்தம்!

## வாழ்க்கைக்கு உதவும் உன்னதத் தொடர்!

55

வெடுத்து, உலக அரசாங்கங்கள் அனைத்தும் இந்த முடிவை சட்டமாக்கினால், போரை விரைவிலேயே தவிர்த்துவிடலாம்.

இன்று உலக சமுதாயம் பொதுவாகக்கூடிச் சிந்திக்கவும், அனைத்து நாட்டு மக்களும் பயன் பெறவும், அச்சம் இன்றி வாழ்வை நடத்தவும் ஏற்றபடி திட்டமிட, தீர்மானங்களை நிறைவேற்ற, உலகப் பொதுவான ஐக்கிய நாடுகள் சபையொன்று இருக்கிறது.

அதில் பாதுகாப்புச் சபை என்ற அதிகாரம் பெற்ற குழுவும் இருக்கிறது.

அந்தக் குழுவின் மூலம் உலகில் எல்லா நாடுகளின் எல்லா பாதுகாப்புப் பொறுப்பையும் ஐக்கிய நாடுகள் சபை எடுத்துக் கொள்ள வேண்டும்.

அனைவரும் உலகில் அமைதியாக வாழ்வதற்கு ஐக்கிய நாடுகள் சபை பொறுப்பேற்க வேண்டும்.

அந்தந்த நாட்டுப் பாதுகாப்புக்காக இன்று அமர்த்திக் கொண்டுள்ள போர் வீரர்களின் சேவையை உலகில் பின்தங்கிய மக்களும், பின்தங்கிய நாடுகளும் மேன்மை பெற ஏற்றதோர் நல்ல திட்டத்தைச் செயல்படுத்துவது உலகிற்கு அதிக கஷ்டம் இல்லை.

இன்று யுத்தத்திற்காகச் செலவிடுகின்ற செல்வத்தில் பத்தில் ஒரு பங்கு ஒதுக்கினால் கூட, இந்தத் திட்டத்தை வெற்றிகரமாக நிறைவேற்றலாம்.

உங்களுக்கு இன்று சமுதாயத்தில் நிலவி வருகின்ற நிலைமையை ஒரு சிறு குறிப்பாக எடுத்துக்காட்ட விரும்புகிறேன். உலகில் எந்த நாடானாலும் சரி... அங்கு நடைபெறுகின்ற ஆட்சி முறையானது எதுவானாலும் சரி... எங்காகிலும் பிரதம மந்திரி முதல் சாதாரண அலுவலக பியூன் வரையிலும் யாராவது அச்சம் இன்றி வாழ முடியும் என்கிற நம்பிக்கை இருக்கிறதா?

இந்த நிலை நீடிக்க வேண்டுமா? முடிவு கட்ட வேண்டும் என்று எண்ணி விட்டால், நீங்கள் ஒன்று கூடி ஓர் உலக விரிவான மகாநாட்டுக்கு ஏற்பாடுகள் செய்து இந்தத் திட்டத்தை வெற்றிகரமாகவும், விரைவாகவும் செயல்படுத்துங்கள் என்று இந்த உலகில் உங்களோடு பிறந்து வாழ்ந்து வரும் சகோதரன் என்ற முறையில் வேண்டி கேட்டுக் கொள்கிறேன்.

நல்லது என்ற திட்டத்தைச் செயல்படுத்துவதில் தள்ளிப் போடக் கூடாது என்ற உண்மையை நீங்கள் அறிந்திருக்கின்றீர்கள்.

போரினால் உறுப்புகளை இழந்தவர்களையும், இப்படிப்பட்ட அனைவரையும் நினைக்கும்போது, என் கண்களில் வடிக்கின்ற கண்ணீரோடு, அந்தக் கண்ணீரையே உங்கள் கால்களில் தெளித்து வணங்கி, உங்களை வேண்டிக் கொள்கிறேன்.

போர் என்பது மனித குலத்தில் இருந்து நிரந்தரமாக ஒழிக்கப்பட்டு விட்டால், உலகம் அடைகின்ற நிம்மதி, அதனால் கிடைக்கின்ற ஆக்கவாழ்வு, தவிர்க்கப்படக்கூடிய பொருள் விரயம், தவிர்க்கப்படக் கூடிய கால விரயம்

இவற்றையெல்லாம் எண்ணிப் பாருங்கள்.

உங்கள் எண்ணமும் முயற்சியும் நான் எடுத்துக் காட்டுகின்ற வழியில் உங்கள் சேவையைத் திருப்பிவிடும் : வாழ்க வளமுடன்!

பொருள் துறையில் பணம் என்பது உழைப்பின் அடையாளம். இயற்கை வளம் எளிதாக அனைவருக்கும் சுலபமாகக் கிடைக்கிறது.

உழைப்பின் பலனாகக் கிடைக்கின்ற பொருட்களையும், செல்வத்தையும் மனிதன் பகிர்ந்து அனுபவித்து வாழ வேண்டும்.

மனித இனத்தின் சாபக் கேடாக ஆதி காலந் தொட்டு பறித்துண்ணல் என்கின்ற முறை நிலவி வருகிறது.

அவ்வாழ்க்கை முறை விலங்கினத்தின் வித்தின் மூலம் மரபு வழித் தொடராகச் சமுதாயத்தில் இன்று வரை பழக்கமாகி விட்டது.

தனி மனிதனிடமிருந்து பொருள் பறிக்கும் பழக்கத்தாலும், கடல் கொள்ளை மூலமாகவும், போர் மூலமாகவும் பிறருடைய பொருளைக் கவர்ந்து அனுபவித்து இன்பமுறுவது என்கின்ற பழக்கம் தாராளமாகச் செயல்பட்டு வந்த காலம் ஒன்று உண்டு.

உலக மக்கள் தொகை அதிகரித்துக்கொண்டே போகும்போது, இந்த நிலை பொருந்தாது.

பொருள் துறையில் அனைவருக்கும் சமமான நீதி வேண்டும்.

இதற்கு அறிஞர்கள் செய்ய வேண்டிய கடமை ஒன்று உண்டு.

நம் சமுதாயத்திற்கு நலம் அளிக்கத்தக்க பொருட்களை உற்பத்தி செய்யும் திறனை உலகில் பிறந்து வாழக்கூடிய அனைவரும் பெற வேண்டும்.

அதற்கு ஏற்ற திட்டத்தைக் கல்வி முறை மூலம் கொண்டு வரவேண்டும்.

பழைய நாட்களில் உழைப்பவருக்கு ஊதியம் எவ்வாறு கொடுத்தார்கள் என்று எண்ணிப் பார்ப்போம்.

ஒரு நபருடைய உழைப்பின் ஊதியம் இரண்டு நபர்களுக்கு வாழப் போதுமான அளவினதாகப் பார்த்துக் கொண்டார்கள்.

உழைக்கத் தெரியாத, உழைக்க முடியாத அனைவருமே சமுதாயத்தில் வாழத்தானே வேண்டும்?

அவர்களுக்கென இக்காலத்தில் நல்லதோர் ஏற்பாடு எளிதில் செய்து கொள்ளலாம்.

நிலத்துக்கடியில் விளையும் கனிமங்கள், உலோகங்கள் மற்றும் விலைமதிக்கத்தக்க பொருட்கள் போன்ற செல்வங்கள் அனைத்தும் சமுதாயப் பொது நிதியாக ஏற்படுத்த வேண்டும்.

இந்த நிதியின் மூலம் குழந்தைகள், ஊனம் உற்றோர், முதியோர்கள் இவர்கள் வாழ்க்கைக்கு வழி செய்ய வேண்டும்.

இது இப்போதுள்ள சமுதாய அமைப்பின் மூலம் நடைபெறுவது கடினம். உலக ஆட்சி அமைத்த பிறகு, அதன் கீழே முதல் திட்டமாக இதனைச் செய்து முடிக்கலாம்.


குங்குமம்

TVS MOTOR COMPANY

இணைந்து வழங்கும்

**வாரம் ஒருவருக்கு ஒரு பைக்!**

அறிவுத்திறன் போட்டி எண் 104ல் வெற்றிபெற்ற சீதாமூர்த்தி தன் குடும்பத்துடன்.


அதற்கு முன்னர் தனியாக ஒரு மனிதனுடைய வருவாய் இன்னொருவரால் உறிஞ்சப்படாமல் பாதுகாக்கவும் வேண்டும்.

இக்கேடு நிலவுவதற்கு மூலதன உரிமை தான் காரணமாக அமைந்துள்ளது.

உதாரணத்திற்கு ஒரு குறிப்பு கொடுக்கிறேன்.

ஒரு தனி மனிதனுக்குப் பத்து வீடுகள்

உரிமையாக இருக்கின்றன என வைத்துக்கொள்ளுங்கள். அவருக்குத் தேவையோ ஒரே வீடுதான். மற்ற வீடுகளை வாடகைக்கு விடுகிறார்.

வாடகை கொடுத்து அவர் வீட்டில் வசிப்பவர் யார்?

ஏழைகள்!

வாடகை வாங்குபவர் யார்? ஏற்கனவே செல்வத்தில் மிகுந்தவர்.

இதுபோன்று, பிறரிடமிருந்து உழைக்காமலே பொருள் பறிப்பதற்குரிய கருவியாக மூலதனம் அமைகிறது.

வாடகை மட்டுமல்ல! வட்டி, நிலக்குத்தகை போன்றவற்றையும் சேர்த்துச் சிந்திக்க வேண்டும்.

இம்மாதிரி மூலதனத்தைக் கொண்டு பிறரது பொருளைச் சுரண்டுகின்ற பொருளாதார நீதி என்றுமே மக்களை அமைதியாக வாழ வைக்க முடியாது.

இந்த உண்மையினைச் சிந்தித்து எதிர்காலத்தில் பொருளாதாரத் துறையில் நீதி நிலைக்கச் செய்ய வேண்டியது அறிஞர்கள் கடமை.

மேலும் சமுதாய வாழ்வில், அதிகாரப் பிரயோகத்தில் லஞ்சம் என்ற ஒரு விஷம் இப்போது அதிகரித்துக் கொண்டே இருக்கிறது.

இது அடியோடு ஒழிக்கப்பட வேண்டிய நச்சு ஆகும்.

மனித வாழ்வின் வளத்தை 'வழக்கம்' என்ற பெயராலும், அதிகாரம் என்ற பெயராலும் மற்றொருவர் பறித்து வாழுகின்ற கொடுமை நீடிக்கக் கூடாது.

ஒருவர் பொறுப்புள்ள அரசியல் உத்தியோகத்தை ஏற்றுக் கொள்ளும் போது, உறுதிமொழி வாங்கப்படுகிறது.

'நானோ, என் சார்பில் எனக்குச் சொந்தக்காரர்களோ, நண்பர்களோ எவரிடமிருந்தும் லஞ்சம் வாங்க மாட்டோம்' என்று ஆணையிட வேண்டும்.

அதுபோல் பொதுமக்கள் சேவைக்கு வரக்கூடிய அனைவரும் உறுதிகூறிக் கையெழுத்திட வேண்டும்!

இந்தத் திட்டங்களை எல்லாம் நிறைவேற்றுவது கடினமாகப் பலருக்குத் தோன்றலாம்.

தீர்க்க முடியாத நோய்க்கு அறுவை சிகிச்சை எவ்வாறு இன்றியமையாததோ, அதே போன்றுதான், சமுதாய வளம் காக்க, சிலபல கடுமையான திட்டங்களைச் செயல்படுத்த வேண்டியது அவசியம்.

சிந்தனையில் உயர்ந்த சமுதாய நல பொறுப்புடைய அறிஞர் பெருமக்கள் இந்தத் திட்டங்களை ஆராயும்போது, கருணையோடு தேவையான மாற்றங்களைச் செய்து கொள்ளலாம். எனினும் வாழ்க்கைப் பண்பாட்டில் சீர்திருத்தங்கள் இன்றியமையாத தேவையாகும்.

(தொடரும்)

# மரண தண்டனை தேவையா?

மனித வாழ்வுக்கு ஒத்ததான உயர்ந்த பண்பாடு நேர்மையான நீதி முறை.

துன்பம் தவிர்த்த, நட்டம் தவிர்த்த வாழ்க்கையை உருவாக்க நினைக்கின்ற நாம், நேர்மையான நீதி முறையைத் தேர்ந்தெடுத்து அமுல் நடத்தவும் வேண்டும்.

பிறந்த ஒவ்வொருவருக்கும் உலகில் வாழ்கின்ற உரிமை தவிர்க்க முடியாத ஒன்றாகும்.

ஒவ்வொருவர் வாழ்வும் அவ்வப் போதைய மக்கள் சமுதாயத்தின் முழுமையான ஒத்துழைப்போடுதான், உதவியோடுதான் நடைபெற்று வருகிறது.

எனவே தனக்கோ, பிறருக்கோ, தற்காலத்திலோ, பிற்காலத்திலோ துன்பம் எழாத வகையில் வாழ்கின்ற முறையினை மனிதன் தெரிந்து கொள்ள வேண்டும்: பின்பற்றி அமைதியோடு வாழவும் வேண்டும்.

மனித குலம் ஆதி காலம் தொட்டு- அறிவைப் பற்றிய சிந்தனையே இல்லாத காலம் தொட்டு, அறிவின் வளர்ச்சிக்குரிய கல்வி இல்லாத காலம் தொட்டு வாழ்ந்து வருகிறது.

எனினும், தனிமனிதனைக் கட்டுப்படுத்தி, சமுதாயத்தைக் காத்து அனைவரும் வாழவேண்டும் என்ற உயரிய எண்ணம் எக்காலத்திலும் மனிதனுக்குண்டு.

முற்காலத்தில் தனிமனிதனைக் கட்டுப்படுத்தும் நோக்கம் அக்காலத்து மக்கள் அறிவு நிலையைப் பொறுத்து அமைந்தது.

ஒரு மனிதன் மற்றவனுடைய பொருள் இழப்புக்குக் காரணம் ஆனால் அவன் தனது பொருளை இழந்து வருந்த ஏற்றவாறு தண்டனை அளிக்கின்ற செயலை நீதியாகக் கொண்டார்கள். இந்தக் கருத்தின் கீழ் கண்ணுக்குக் கண்ணை, கைக்குக் கையை, காலுக்குக் காலை, உயிருக்கு உயிரைப் போக்க வேண்டும் என்பது நீதியாகக் கருதப்பட்டது.



இந்த நீதியின்கீழ்தான் ஒரு மனிதன் மற்றொருவனைக் கொன்றுவிட்டால் அந்தக் கொலையாளியைக் கொன்றுவிட வேண்டியது நீதியாகக் கொள்ளப் பட்டது.

அந்த நீதி இன்றுவரையில் மரண தண்டனை என்ற அரசியல் சட்டமாகத் தொடர்ந்து வருகிறது.

பிற்காலத்

## வாழ்க வளமுடன்!

### வேதாத்திரி மகரிஷி

தில் வந்த மனிதவளம் அறிந்த ஞான ஆசிரியர்கள் குற்றங்களும், தண்டனை களும் என்ற தலைப்பில் விரிவாக ஆராய்ந்துள் ளார்கள்.

அந்த ஆராய்ச்சியில் அடிப்படைக் கருத்து ஒன்று உண்டு.

குற்றவாளி தக்க சாட்சியமின்றி தண்ட னைக்குத் தப்பிவிட்டா லும், அது பெரும் தவறு அல்ல. ஆனால் எவ்விதக் குற்றமும் செய்யாத ஒருவர் எக்காரணத்தாலோ தண் டிக்கப்படுவது சமுதாயக் குற்றமாகும்.

இந்த உண்மையை அறிஞர் உலகம் ஏற்றுக் கொண்டது என்றாலும், இன்றுவரையில் இந்த நீதி முழுமையாக உணரப் பெற்று உலகில் செயல்பட வில்லை.

உதாரணத்திற்கு இங்கு ஒரு நிகழ்ச்சியை எடுத்துக் கூறுகிறேன்.

ஒரு மூர்க்கனோ, முர டனோ உணர்ச்சிவயப் பட்டுச் சந்தர்ப்பவசமாக மற்றொருவனைக் கொன்று விடுகிறான்.

சமுதாயம் அவனை நீதி மன்றத்தில் கொண்டுவந்து நிறுத்தி அவனுக்கு மரண தண்டனை அளிக்கிறது.

இங்கு அறிஞர் குலம் [illegible] வேண்டும். [illegible]

அறிவில்லாத மூர்க்கன். அவனால் ஒரு கொலை நடந்து விட்டது.

அக்கொலையாளிக்கு இப்பொழுது அறிவிற்சிறந்த மக்கள் மன்றம் சிந்தனை யிலும், சமூக வாழ்விலும் சிறந்த ஓர்




பணியாளரைக் கொண்டு மரண தண்டனை விதிக்கிறது.

அறிவற்றவன் ஒரு கொலையைச் செய்தான். இப்பொழுது அறிவிலே தேர்ந்தவன் தண்டனை என்ற பெய ரில் மற்றொரு கொலையைச் செய்கிறான்.

பழங்காலத்து நீதி வழி தொடர் பாக இக்காலத்தில் வாதாடுபவர்கள் பலர். கொலை செய்தவனுக்கு மரண தண்டனை அளிப்பதுதான் நீதி என்று வாதாடுவார்கள்.

மேலும் நாம் ஒரு உண்மையை உணர வேண்டும்.

இந்த இரண்டு வகையான கொலைகளிலும் அவர்களை நம்பி அவர்களுக்குப் பின்னால் இருந்த மக்கள் எண்ணிக்கை எவ்வளவு?

மனைவி, மக்கள், பெற்றோர் என்ற முறையில் எத்தனை பேர் ஒருவனின் மரணத்தினால் வாழ்வின் வளம் இழந்து காலம் முழுவதும் துடி துடித்து வருந்த வேண்டியிருக் கிறது?

மேலே சொன்ன குற்றவாளியின் உறவினர்கள் என்ன தவறு செய்தார் கள்? அவர்கள் வாழ்நாள் முழுவதும் வருந்தும் விதமாக அவர்களை என் தண்டிக்க வேண்டும்?

தவிர, ஒருவன் குற்றவாளியாக இருக்கிறான் என்றால், அவனைத் தாங்கியுள்ள சமுதாயத்திலேயே தவறு இருக்கிறது என்றுதான் பொருள்.

அவன் வளர்ந்த முறையும், பொறுப்போடு வாழத்தக்கதும், வருமானம் தரத்தக்கதுமான பணி இல்லாத குறையும் எத்தனை மனிதர் களைக் குற்றவாளிகளாக உருவாக்கு கின்றன?

இ ந் த ப் பி ன் ன ணி

ஒவ்வொரு மரண தண்டனை பெற்றவருக்குந் தானே பொருந்தும்? இதற்கு யார் பொறுப்பு? யார் பதில் சொல்வது? யார் என்ன பதில் சொல்ல முடியும்?

எனவே, மரண தண்டனை என்பதை விரிவான முறையில் அறிஞர் பெருமக்கள் ஆராய்ந்து நல்லதோர் முடிவை எடுத்து அமுல் படுத்த வேண்டியது நீதித்துறையில் மிக அவசியம் ஆகும்.

நீதி நெறி ஒன்றுதான் மனிதன் அமைதியாக வாழ்வதற்குப் பாது காப்பாக அமைந்திருக்கிறது.

அதுவே கலகலத்துப் போனால், யார் மனிதனுக்கு உதவி?

மேலும் ஒரு உதாரணம்-

இன்று, உலகில் பல இடங்களில் போர்கள் நிகழுகின்றன.

ஒவ்வொரு போரிலும் எண் ணிறந்த மக்கள் கொல்லப்படுகிறார் கள்.

அவர்களை ஒவ்வொருவராகத் தனியாக அழைத்து உட்காரவைத்து விசாரணை செய்து பாருங்கள்.

அவரிடம் என்ன குற்றம் இருக்கிறது? போரெனும் சமுதாயச் சதித் திட்டத்தின் விளைவாகப் பலர் உயிரிழந்திருப்பது தெரியும்!

குற்றமற்றவர்களைக் கொலைக்கு ஆளாக்குவது யார்?

பொருள் வளம் மிக்கவர்களும், ஆட்சியாளர்களும், வாணிபத்தில் தலைமை தாங்கி இருப்பவர்களும், தங்களின் நலன்களைப் பாதுகாக்கத்

**பாலை வனம்**

உலகிலேயே மிக அதிகம் வெப்பம் தகிக்கும் இடம் சகாரா பாலைவனம்தான். இங்கு 1922ம் ஆண்டு அதிகபட்சமாக 136.4 டிகிரி பாரன்ஹீட் வெப்பம் இருந்ததாம். இதேபோல் அமெரிக்காவின் டெத்வேலியில் 1913-ம் ஆண்டு மிக அதிகபட்ச வெப்பமாக 134டிகிரி பாரன்ஹீட் இருந்ததாம். இந்த டெத்வேலியில் ஒரு வருடத்திற்கு பெய்யும் மொத்த மழையின் அளவே50 எம்.எம்.தானாம்.

ராஜி

தானே போர்கள் நடைபெறுகின்றன?

போர்களை நடத்துவதற்கு ஆயத்தமாகப் போரில்லா சமயத்திலும் போருக்கு ஏற்றவாறு தயாரிப்புத் திட்டங்கள் நடைபெறுகின்றன.

எந்த நீதியின் கீழ் அறிவினைச் சமாதானப்படுத்திக் கொள்ள முடியும்?

கிராமத்தில் கோயில்களுக்கு ஆடுகளைப் பலி கொடுக்கும் பழக்கம் ஒன்றிருக்கிறது.

ஓர் ஆட்டைப் பலி கொடுக்க வேண்டும் என்றால், அதனுடைய கழுத்தில் கயிறு கட்டி, முன்பக்கம் ஒருவர் இழுத்துச் செல்வார்.

மற்றொரு கையில் ஆடு உண்ணத் தக்க சில தழைகளை வைத்திருப்பார். ஒருவர் இந்தத் தழைகளைக் காட்டிக்கொண்டே ஆட்டை ஓட்டியும் செல்வார்.

அவரோடு செல்லும் ஆட்டுக்கோ, தனக்கு உணவாக உள்ள அந்தத் தழைகளைத் தவிர வேறொன்றும் தெரியாது.

அப்படியே கோயில் வரை அழைத்துக் கொண்டு போய் அதைப் பலியிட்டு விடுவார்கள்.

இதற்கும் இன்று உலகில் நடைபெறுகின்ற போர்களுக்கு உடல்கட்டு மிகுந்த பலரை அழைத்துச் சென்று, அவர்களுக்கு பணமும் உணவும் கொடுத்துக் கொலைக்களம் ஆகிய போர்க்களத்தில் அவர்களை அழித்து விடுவதற்கும் என்ன வித்தியாசம்?

இருபதாயிரம் ஆண்டுகளையும் வாழ்வின் அனுபவமாகப் பார்த்துவிட்ட மனித குலத்தில் இன்னுமா இந்த அநாகரிக அநீதி முறை தொடர வேண்டும்?

இவற்றையெல்லாம் சிந்தித்து சீர் திருத்துவதற்குப் பொதுமக்களால் முடியுமா?



பெங்களூரில் குதிரை ஏற்றம் பழக்கும் பள்ளிகள் ஐந்து உள்ளன. இவற்றில் பழக்க வாங்கும் கட்டணம் எவ்வளவு தெரியுமா? ஒரு மணி நேரத்துக்கு 300 ரூபாய்.
– ராதா

மக்களின் வாழ்வுக்குத் தலைமையேற்கும் ஆட்சியாளர்கள், நீதிமன்றத் தலைவர்கள், வழக்குரைஞர்கள், எழுத்தாளர்கள், சமுதாய நலப் பொறுப்பை ஏற்றுக்கொண்ட தலைவர்கள் இவர்கள்தான் கூடிச் சிந்தித்து நல்வழிகாணவேண்டும்.

மனித வாழ்வில் சிந்தனை இல்லாமல் பழக்கத்தின் வழியே நீதி என்று ஒப்புக்கொண்ட அநீதியான செயல்கள் பல தொடர்ந்து வருகின்றன.

இதற்கு முடிவு காண வேண்டிய பொறுப்பு மக்கள் தலைவர்களான அறிஞர் பெருமக்களிடமே உள்ளது என்று எடுத்துக்காட்டி, இதற்கு ஆவன செய்யுமாறு அத்தகைய அறிஞர் பெரு மக்களை வேண்டிக் கொள்கிறேன்...

(தொடரும்)




சமுதாயத்தில் தனிமனிதன் பல சூழ்நிலைகளால் குற்றவாளி ஆகிறான். குற்றவாளியாக்கப்படுகிறான்.

எந்தக் குற்றமானாலும் சமுதாயத்திற்கு நட்டமே!

எனவே, தனிமனிதன் குற்றம் செய்யாது பாதுகாக்க வேண்டிய பொறுப்பு, ஆட்சி மன்றத்தின் கடமை. இந்தக் கடமை உணர்வோடு உலகிலுள்ள மன்றங்கள் நடைபெறுகின்றனவா?

இந்த வினாவை எழுப்பிக் கொண்டு பார்த்தால் உண்மை விளங்கும். எத்தனை ஆட்சியாளர்கள் மீது கொடிய குற்றங்கள் சுமத்தப்பட்டு நீதிமன்றங்களில் அவை விசாரணையில் இருந்து வருகின்றன என்பதை அறியாதவர்கள் இல்லை.

மனித இனம் இயல்பாகவே தடுமாற்றம், தடமாற்றம் என்ற இரு தவறுகளைச் செய்துவிடுகின்ற பலவீனத்தை உடையதாக இருக்கிறது.

தடுமாற்றம் என்பது தன்னால் அறிந்து செயல்பட முடியாமல் தடுக்கி விழுந்து விடுவது.

தடமாற்றம் என்பது எங்கு போகவேண்டும் என்று குறிப்பில்லாமல் செல்லும்போது வழி தவறி நடந்து தவறான முடிவுக்கு வந்துவிடுவது.

வாழ்க வளமுடன்!

வாழ்க்கைக்கு உதவும் உன்னதத் தொடர்

வேதாத்திரி மகரிஷி



# தடுமாற்றம் தடமாற்றம்!

மனித வாழ்க்கையில் இவ்விரண்டு வகையான தவறுகளும் நடக்காமல் இருக்கவேண்டுமானால், எந்த நீதித்துறையிலும் கண்காணிப்பு என மேலாதிக்கம் அவசியம்.

தனி மனிதனைக் கட்டுப்படுத்த ஊராட்சி, நாட்டாட்சி, தேச ஆட்சி என்றுள்ளதைப் போன்று... தேசங்கள் சார்பிலே குற்றங்கள் நிகழாமல் இருக்க அனைத்து தேசங்களும் சேர்ந்த ஓருலக ஆட்சிக் குழு ஒன்று அதிகாரத்தோடு கூடிய கண்காணிப்பு முறை அவசியம்.

இந்த அவசியத்தைப் பல ஆண்டுகளுக்கு முன்னதாகவே உணர்ந்த பேரறிஞர்கள் கூடி ஐக்கிய நாடுகள் சபை என்ற ஒரு நிறுவனத்தை உலகப் பொதுவாக அமைத்தார்கள்.

எனினும் அது முறையாகச் செயல்படுவதற்கு ஏற்ற திட்டங்கள் வகுக்கவில்லை. செயல்படுத்தவில்லை.

எந்த நாடோ மற்ற நாடுகளுக்கு முரண்பாடாகவும் துன்பம் இழைக்கத்தக்கதாகவும் இருந்தால், அதை உலக ஆட்சியின் கீழ் கொண்டு வந்து, தக்கபடித் திருத்தம் செய்து, மீண்டும் அது தூய்மையானதாகச் செயல்படும் அளவுக்கு வந்தபிறகு, அந்த நாட்டை அதன் மக்களிடமே திருப்பி ஒப்புவித்துவிடத்தக்க அதிகாரம்

இன்றைய ஐக்கிய நாடுகள் சபைக்கு இல்லை.

மேலும் உலக நாடுகளுக்குப் போர்த் தளவாடங்களை உற்பத்தி செய்து விற்பனை செய்து கோடி கோடியாகப் பணம் சேர்க்க வல்லமையுள்ள ஐந்து நாடுகளுக்கு 'வீட்டோ பவர்' என்ற ரத்துரிமை அளிக்கப்பட்டது. இது ஐக்கிய நாடுகள் சபையில் உள்ள பெரிய ஓட்டை.

இந்தக் குறைகள் காரணமாகத்தான் எந்த நோக்கத்தோடு ஐக்கிய நாடுகள் சபை ஏற்பட்டதோ அந்த நோக்கம் நிறைவேறவில்லை.




இப்பொழுதும், காலதாமதமின்றி அந்தக் குறைகளை எளிதில் போக்கி விடலாம்.

ஐக்கிய நாடுகள் சபையில் பாதுகாப்பு மன்றம் என்ற ஒரு பிரிவு இருக்கிறது.

அதன்மூலம் உலகில் உள்ள எல்லா நாடுகளினது எல்லைகளையும் ஐக்கிய நாடுகள் சபையின் கூட்டுப் பொறுப்பில் பாதுகாப்பு செய்துகொள்ளலாம் என்று முடிவெடுக்க வேண்டும்.

இவ்வுறுதியை ஐக்கிய நாடுகள் சபையின் மூலம் உலகுக்கு அளித்துவிட்டால் அடுத்த நாள் முதற்கொண்டு போர்த் தளவாடங்கள் உற்பத்தி அடியோடு நின்றுவிடும்.

உலக நாடுகளின் எல்லைப் பாதுகாப்புக்காக அமர்த்தப்பட்டிருக்கும் போர்வீரர்கள் அனைவரையும் உலகில் பின்தங்கிய நாடுகளின் முன்னேற்றத்திற்காகவும் திட்டமிட்டுச் செயல்படுத்தி அமைதி காண வேண்டும்.

யான் நேரடியாக அமெரிக்கா சென்றிருந்தபோது, பலமுறை ஐக்கிய நாடுகள் சபையின் அதிகாரிகளோடு உரையாடுகின்ற வாய்ப்பினைப் பெற்றேன்.

அவர்கள் விருப்பப்படி அமர்ஷீல்டு அரங்கில் உலக அமைதி பற்றிய உரையும் ஆற்றியுள்ளேன்.

அதன்பிறகு உலக அமைதிக்கு உரிய திட்டங்களை வகுத்து அந்த நாட்டில் ஒரு மாகாணமாகிய கலிபோர்னியா மாகாணத்தின் ஒரு பகுதியான யக்காவேலி என்ற ஆசிரம அரங்கில் ஒரு பொதுக் கூட்டம் நடத்தினேன்.

அந்தப் பொதுக்கூட்டத்தில் வெளியிட்டு அனைவராலும் ஏகமனதாக ஒப்புக்கொள்ளப்பட்ட தீர்மானங்கள் சிலவற்றை இங்கு நீங்கள் அனைவரும் தெரிந்துகொள்வதற்கு வசதியாகக் கீழே வெளியிடுகிறேன்.

என்ன அது?

(அடுத்த வாரம்)

உலகில் பிறந்து வாழும் எல்லா மக்களுக்கும் சம உரிமையும், சம பிரதிநிதித்துவமும் இந்த ஆட்சிமன்றத்தைக் கண்காணிக்கவோ, திருத்தவோ, மாற்றவோ, புதுப்பிக்கவோ, கலைக்கவோ, உலக ஜனநாயச் சட்ட

# வாழ்க வளமுடன்



வாழ்க்கைக்கு உதவும் உன்னதத் தொடர்

அளிக்கத்தக்க முறையில் எல்லா நாடுகளையும் இணைத்த, எல்லா நாட்டு ஆட்சிக்கும் மேலாதிக்கம் உடைய ஓர் உலகப் பேரரசு ஜனநாயக முறையில் அமைக்கப்பட வேண்டும். செயல்புரியவும் வேண்டும்.

ஒரு கோடி மக்களுக்கு ஒரு பிரதிநிதி விகிதம், அந்தந்த நாட்டு அரசாங்கத்தின் மூலம், தேர்தல் மூலமோ நியமன மூலமோ, பொறுக்கி எடுக்கப்பட்ட தலைவர்களைக் கொண்டு உலகப் பொது ஜனநாயகச் சட்டமன்றம் ஒன்றை அமைக்க வேண்டும். அது மனித உரிமையினையும், சுதந்திரத்தையும் காக்க ஏற்ற சட்டங்களை அவ்வப்போது இயற்றிப் பணிபுரியும். இந்தச் சட்டமன்றம் உலகப் பேரறிஞர்களையும், நிபுணர்களையும் தேவையான எண்ணிக்கையில் கூட்டி ஒரு ஆட்சி மன்றம் அமைக்கும். உலகப் பேரரசாகச் சட்டமன்றத்தின் மேற்பார்வைக்கு உட்பட்டு, அதன் சட்ட திட்டங்களை அமுல்நடத்தும்.

மன்றத்திற்கே உரிமையுண்டு.

எல்லோருடைய பிறப்புரிமையும், சுதந்திரமும் ஒரு தனி மனிதனாலோ, ஒரு குழுவினராலோ, ஒரு நாட்டு ஆட்சியாலோ பறிக்கப்பட்டாலும், தடுக்கப்பட்டாலும் இந்த உலகப் பேரரசு பாதுகாக்கப் பொறுப்பேற்றுக் கொள்ளும்.

உணவு, உடை, வீடு, கல்வி, தொழில், திருமணம், ஆராய்ச்சி வாய்ப்பு இவற்றை ஒவ்வொரு அரசாங்கமும் அதன் கீழ் இருக்கும் குடிமக்கள் பெற வசதியைச் செய்யும்.

ஆண்களைப் போலவே பெண்களுக்கும் எல்லாத் துறைகளிலும் சம உரிமை அளிக்கப்படும். மேலும் இயற்கையாகப் பெண்களுக்கென அமைந்த உடலமைப்புக்கு ஒத்த அவசியமான வசதிகளும் அளிக்கப்படும்.

மக்கள் சமுதாயத்தில் ஒரு கோடி மக்களைக் கொண்ட குழுவினரோ ஒரு பிரதேசவாசிகளோ அல்லது ஒரு நாட்டவரோ விரும்பினால், அவர்களது விருப்பம் போலவே தனியாக ஆட்சி எல்லை வகுத்துக் கொண்டு, சட்டமன்றம் அமைத்துக்

## பாகுபாடு இல்லாத பாதுகாப்பு!

கொண்டு, உலக ஆட்சிக்கும் அந்நாட்டுச் சமஷ்டி ஆட்சிக்கும் உட்பட்டு, மனித உரிமைச் சாசனத்தை மதித்து வாழ உரிமையுண்டு.

உலக மக்கள் எல்லோருக்கும் உலக னைத்தும் சொந்தம். எந்த நாட்டிலும், எந்த இடத்திலும் எவரொருவரும் குடி யேறவோ, பிரயாணம் செய்யவோ சம உரிமையுண்டு. மக்கள் உடல் நலம், இனிய வாழ்வு, இவற்றிற்காக உலக அரசாங்கம் தான் இந்தத் துறையில் அவசியமான கட்டுப்பாடுகளை விதிக்கலாம்.

உலகில் எந்த அரசாங்கமோ தனது கடமைகளை நிறைவேற்றத் தவறினாலும், தகுதியற்றிருந்தாலும், அந்தப் பிரதே சத்தை உலக ஆட்சி கைப்பற்றி மக்களைத் தகுதியுடையவர் களாக்கி, பின்னர் ஆட்சியை அந்நாட்டு மக்களிடம் ஒப்புவிக்கும்.

போர் சட்டவிரோதமாக்கப் படும். போர் அணிகள், போர்க் கருவிகளை உற்பத்தி செய்யும் தொழிற்சாலைகள், விஞ்ஞான ஆராய்ச்சிக் கூடங்கள், உலகில் எங்கிருந்தாலும் அவை உலக ஆட்சி நிர்வாகத்தின்கீழ் வந்து விடும். இவற்றை ஆக்கத்துறைக்



காகவும், பின்தங்கிய நாடுகளையும், மக்களையும் முன்னேற்றுவதற்காகவும், அகில உலகத்தரசு திட்டமிட்டுப் பயன்படுத்தும்.

உலக ஆட்சியின் கீழ் அகில உலகப் பேரறிஞர்களைக் கொண்ட ஒரு தொண்டு நிலையம் அமைக்கப்படும். அது அவ்வப்போது மனித இன வாழ்வின் உயர்வுக்கான திட்டங்களை வகுத்துக் கொடுக்கவும், மக்களுக்குத் தொண்டாற்றவும், ஒரு பொது சமுதாய சீர்திருத்த இணைப்பு நிலையமாகப் பணியாற்றும். ஆன்மீகம், பொருளாதாரம், சுகாதாரம், விஞ்ஞானம், அரசியல் என்ற ஐந்து வகையையும் இணைத்து அறிஞர்களும், நிபுணர்களும் கூடிய ஆராய்ச்சிக் குழுவினரால் மக்கள் வாழ்வை அவ்வப்போது சீர்திருத்த ஏற்றபடி வழிகளை வகுத்துக் காட்டும்.

உலகிணைந்த வலிமை மிக்க ஒரு மன்றத்தின் மூலமாக நிறைவேற்றப்படுகின்ற இந்தத் தீர்மானம் ஐக்கியநாட்டுச் சபையினால் செயல்படுத்தப்பட வேண்டும். இதற்குக் குறைவான எந்தத் திட்டமும் நிரந்தரமாக உலக அமைதிக்கு வழியாகாது. இத்தகைய உலகப் பேராட்சி மூலம் இன்று மனித சமுதாயத்திலுள்ள பல குறைபாடுகளைக் களையலாம். உலக மக்கள் அனைவருக்குமே பாகுபாடு இன்றிப் பாதுகாப்பு அளிக்கலாம். இந்த யோசனைகளை அறிஞர்கள் சிந்தனைக்கு எடுத்துக் கொள்ளும்படி வேண்டிக் கொள்கிறேன். வாழ்க வளமுடன்.

(தொடரும்)




## உள்ளே கூல்.. வெளியே ஹாட்..

புதிதாக அங்கங்கே முளைத்து வருகின்றன கிராமிய உணவகங்கள். அது என்ன கிராமிய உணவு என வடபழனியில் கிராமிய உணவகம் வைத்து நடத்தும் பழனிவேலுவிடம் கேட்டோம்.

"வேற ஒண்ணுமில்ல சார். நகர உணவுகள்ல காரம் சேர்ப்பது ரொம்ப குறைவு. கிராம மக்கள் அதிகமாக காரம் சேர்ப்பாங்க. அதனால கிராமிய உணவுகள்ல நிறைய காரம் சேர்ப்போம். மசாலாக்களை மிக்ஸி, கிரைண்டர்ல அரைக்காம அம்மி, உரல்ல போட்டு அரைப்போம். அசைவ உணவுகள்னா மண்சட்டியில போட்டு சமைப்போம்!'' என்றவரிடம்,

"கிராமிய உணவகத்தின் ஸ்பெஷல் என்ன?'' என்றோம்.

"மோர் கலந்து செய்யப்படும் கேப்பை கூழ்தான் ஸ்பெஷல். இது உடம்புக்கு ரொம்பவும் கூலா இருக்கும். சாப்பிட்டால் செம தூளாயிருக்கும்'' என்கிறார் விளம்பர பாணியில்.

-ரா.சி.

6-8-04



# பெண்களுக்கு ஏன் கூடுதல் மதிப்பு?

மனிதனுடைய வாழ்க்கையில் பெண் மதிப்பைப் பற்றிய அறிவு மிக மிக முக்கியம். ஏனென்றால், மனதை விரித்து உலகம் முழுமையும் இணைத்துக் கொண்டு அகத்தே நோக்கிப்பாருங்கள்.

சற்று ஏறக்குறைய ஒரு பாதி எண்ணிக்கை பெண்கள். மற்ற பாதி ஆண்கள்.

பாதி அளவாக உள்ள ஆண்களோ, அனைவருமே மறுபாதி எண்ணிக்கையாக உள்ள பெண்களால் பெற்றெடுக்கப்பட்ட குழந்தைகளே.

இந்த உண்மையைவிட மதிப்புக்குரிய பெரிய உண்மை வேறு என்ன வேண்டும்?

அத்தகைய சிறப்பு உடையது பெண்ணினம். மனித வாழ்க்கையிலே எந்த இடத்தில் ஆணாதிக்கம் மிகுந்து பெண்ணடிமைக் கருத்து ஏற்பட்டது என்பதைச் சரித்திர ஆராய்ச்சியாளர்கள்தான் கண்டுபிடிக்க வேண்டும். நமது அறிவுக்கு எட்டுகின்ற வரையில் இந்த விஷயம் தெரியவில்லை.

எந்த நோக்கில் நாம் ஆராய்ந்து பார்த்தாலும், எல்லா ஆண்களின் உடலிலும் ஓடிக் கொண்டு இருப்பது பெண்ணின் ரத்தமே ஆகும்.

பெண் வயிற்றிலுருவாகி, பெண் பால் உண்டே வளர்ந்து, பெண்களின் பெரும் துணையாலேயே ஆண்கள் மட்டும் அல்ல, எல்லா மக்களுடைய வாழ்க்கையும் நடைபெற்று வருகிறது.

ஆராய்ச்சியோடு, நீதி உணர்வோடு

வாழ்க்கைக்கு உதவும் உன்னதத் தொடர்

6-8-04

சிந்தனை செய்து பார்த்தால், பெண்ணினம் ஆணினத்திற்குக் குறைவான மதிப்புடையது ஆகவோ, உயர்ந்த மதிப்புடையதாகவோ அல்லது சம மதிப்பு உடையதாகவோ கூடக் கொள்ளமுடியாது.

இயற்கை என்ற இறையருளாற்றலின் கருணையினால் பெண்களுக்கு ஒரு சிறப்பிடம் அமைக்கப்பட்டு இருக்கிறது.

அந்தச் சிறப்பை மதித்து நடக்காத தனி மனிதனோ, சமுதாயமோ எந்த வகையிலும் அமைதியும், முன்னேற்றமும் அடைய முடியாது.

வாழ்வில் மதிக்கக்கூடிய எதையும் மதித்தும், போற்றியும் பெருமைப் படுத்துவோருக்கு அமைதியும், இன்பமும், செயல்விளைவாகவே கிடைக்கும்.

போற்ற வேண்டியதைத் தாழ்த்தி மதிப்பவர்களோ, நேர்மாறான விளை வினை அனுபவிக்க நேரிடுகிறது.

நான் உலகில் பல நாடுகளையும் சுற்றிப் பார்த்து விட்டேன். சில நாடுகளுக்கு நேராகப் போக முடியவில்லை என்றாலும் அந்த நாட்டின் மக்கள் என்னிடம் ஆன்மீகப் பயிற்சியைப் பெற்றுப் பண்பாட்டை சிறப்பித்துக் கொண்டிருக்கிறார்கள்.

நான் சென்ற இடமெல்லாம் நாட்டின் அழகையும் செல்வ வளத்தையும் மட்டிலும் ஆராய்ந்து காலம் கழிக்கவில்லை.

மக்களுடைய பண்பாட்டைத் தான் மிகக் கூர்மையாகக் கண்காணித்து நான் ஆராய்ந்து வந்திருக்கிறேன்.

என் மனதுக்குச் சோர்வு தரத்தக்க முறையிலேயே எல்லா நாடுகளிலேயும் ஆண் ஆதிக்கமும், காரணம் இல்லாத பெண்ணடிமையும் நிலவி வருகின்ற நிலைமையைப் பார்த்து வருந்தி இருக்கிறேன்.

எந்தக் காலத்திலோ, எந்த இடத்திலோ பெண்ணடிமையும், ஆணாதிக்கக் கருத்தும் உருவாகி, உலகம் முழுவதும் அதுவே ஒரு பண்பாடாகப் பரவி இருக்கின்றது.

சென்ற காலமெல்லாம் போகட்டும். இன்று நாம் கம்ப்யூட்டர் உபயோகிக்கும் விஞ்ஞான யுகத்தில் இருக்கிறோம்.

இன்றாகிலும் நமது வாழ்க்கைப் பண்பாட்டில் உள்ள பெரும்களங்கமான பெண் அடிமை, ஆணாதிக்கம் என்ற கருத்துக்களை மாற்றியமைத்துக் கொள்ள வேண்டும்.

பெண் என்பது யாரோ எங்கேயோ இருக்கிறார்கள், அவர்களைப் பற்றி



மாட்டேன்னு சொல்றது கொஞ்சமும் நல்லால்ல..

நீங்க சுயேட்சையா நிற்கலாம். அதற்காக சோத்துல கூட கூட்டு சேர்த்துக்க

யெல்லாம் நமக்கென்ன என்று இருப்பதற்கில்லை. ஒவ்வொரு வருக்கும் தாயாக, உடன் பிறந்தவர்களாக, வாழ்க்கைத் துணைவியாக வாழ்வு அளித்துக் கொண்டு இருக்கக்கூடிய தெய் வத்தின் தூதுவர்களே பெண்கள் ஆகும். இந்த உண்மையை மறுக்கவோ, மறக்கவோ கூடாது.

சமுதாயத்தில் பெண்களுக் குச் சமநீதி வழங்குவதை மனிதப் பண்பாட்டில் முக்கியமான சீர்திருத்தக் கருத்தாகக் கொள்ள வேண்டியது சமுதாய நல நோக்குடைய அறிஞர்களின் கடமை ஆகும். இந்தக் கடமை தள்ளிப்போட முடியாதது. தள்ளிப் போடக் கூடாதது.

உதாரணத்திற்கு சில நடை முறைக் கருத்துக்களை எடுத்துக் கூறுகிறேன்.

திருமணச் சடங்குகள் நடக் கும்போது ஒரு பெண்ணைப் பெற்றவர்களே ஓர் ஆண் மகனுக்கு சபையோர் முன்னிலை யில் தத்தம் செய்வது ஒரு சடங் காகப் பல இடங்களில் நடந்து வருகிறது. இது என்ன கொடுமை?

மற்றொரு உதாரணம். கணவன் இறந்துவிட்டால் அவன் உடலை எரிக்கும்போது, சதி என்ற ஒரு சடங்கின் மூலம் மனைவியையும் அந்த நெருப் பில் தள்ளி எரித்துவிட்ட நிகழ்ச்சி இந்திய நாட்டில் புனிதமாகப் பாராட்டப் பட்டது.

அந்தப் பெண்ணுக்கும் மற்றவர்களுக்கும் இந்தத் தியாகத்தின் மூலம் அவள் சொர்க்கம் சேர்ந்துவிடுவாள் என்ற கற்பனை போதிக்கப்பட்டது.

அவள் மனமும், மற்றவர்கள் மனமும் குழப்பமடையும் வகையிலே மயக்கப் பட்டன.

அறிஞர் பெருமக்கள் சிந்தனைக்கு ஓர் எடுத்துக்காட்டு. சொர்க்கம் என்பது இறந்தபிறகு ஆன்மாவுக்கு ஏதோ ஓர் உலகினில் கிடைக்கக்கூடிய இன்பம் என்ற ஒரு பொய்யான கதையைக் கட்டிப் பாமர மக்களை நம்ப வைத்துவிட்டார்கள்.

இறந்த பிறகு ஆன்மா என்ற அந்தக் காந்த முடிச்சுக்கு அறிவு ஏது? இன்ப துன்ப உணர்வுகள் ஏது? எவ்வாறு சொர்க்க லோகத்தில் இன் பத்தை அனுபவிக்க முடியும்?


ஜோக்: வி.அங்கப்பன்

மேலும் சொர்க்கலோகம் என்ற கற்பனையில் அங்கு சென்று அந்த அனுபவத்தை அங்கிருந்து திரும்பி வந்தவர் யாருக்கு எந்த இடத்தில் சொல்லி இருக்கின்றார்கள்?

பொது மக்களிடம் பணம் பறித்து வாழ்வதற்கு அவ்வப்போது கற்பனையான சடங்குகளைக் காட்டி ஒரு கூட்டம் பொருள் பறித்து வாழ்ந்து வருகிறது.

ஐயோ பாவம்! உழைப்பையும், அறி வையும் கொண்டு உணவு மற்றும் தேவைப் பொருட்களை உற்பத்தி செய்துகொள்ள அவர்களுக்குத் தெரியாது. இந்தக் குற்றத்தை மன்னித்துவிட வேண்டும். மறந்துவிட வேண்டும்.

சில ஆண்டுகளுக்கு முன் என் வாழ்வில் நடந்த நிகழ்ச்சி ஒன்றை அறிஞர்கள் சிந்தனைக்கு எடுத்துக் கூறுகிறேன்.

(அடுத்த வாரம்)

6.9.04

13.8.04

வாழ்க்கைக்கு உதவும் உன்னத நெறி

# வேதாத்திரி மகரிஷி

பருவுடல், நுண்ணுடல், காந்த உடல் என்ற மூன்றையும் இணைப்பாகக் கொண்டு மனித வாழ்வானது இயங்கிக் கொண்டு இருக்கிறது.

புலன்களுக்கு எட்டக் கூடியது பருவுடல் ஒன்றுதான்.

நுண்ணுடல் என்கின்ற சூக்கும சரீரம் என்பதோ, தனித் தனியாக ஓடிக் கொண்டிருக்கக் கூடிய விண்துகள்களினுடைய கூட்டாகும்.

இதனை உயிர்ச்சக்தி என்கிறோம்.

மூன்றாவதாக உள்ளது காந்த உடல்.

காந்தத்தைப் பற்றி இதுவரையில் பல இடங்களில் எடுத்து விளக்கி இருக்கிறேன். இருந்தாலும், இப்போதும் அதைப் பற்றிச் சிறிது விளக்கம் தேவையாகிறது. இறையாற்றல் என்பதை தெய்வம் என்று மதிப்போடு கூறுகிறோம்.

தெளிவாகப் பேசும் இடத்து, அவ்வாற்றல் சுத்தவெளியைத் தவிர வேறொன்றும் இல்லை.

இங்கு மனிதமனம் ஆழ்ந்து உணர்ந்து தெள்ளக்கூடிய பேருண்மை ஒன்று உள்ளது. பொதுவாக சுத்தவெளி என்பது ஒன்றுமில்லாத சூன்யம் என்ற கருத்து காலங்காலமாக நிலவி வருகிறது.

அது அப்படியல்ல.

சுத்தவெளியைத் தவிர வேறோர்

வாழ்க வளமுடன்!

59

# இயக்கத் திருவிளையாடல்!

ஆற்றல் இந்த பேரியக்க மண்டலத்தில் இல்லவே இல்லை.

ஒரு தூய்மையான கண்ணாடியைப் பார்க்கிறோம். அதற்கு அப்பால் உள்ள எந்தப் பொருளும் நன்றாகத் தெரிகின்றது.

அப்பாலுள்ள பொருட்களை மறைக்காத காரணத்தினால், கண்ணாடி என்பது சூன்யம் என்று சொல்லிவிட முடியாது.

கண்ணாடியும் ஒரு வகையான விண்துகள்கள் சேர்ந்த கூட்டேயாகும்.

இதேபோன்று பேரியக்க மண்டலம் முழுவதும் அனைத்தாடுருவுகின்றதும், அனைத்துமாகின்றதுமான ஒரு பாய்மப் பொருள் உள்ளது. அப்பொருளே சுத்த வெளியாகும்.

அது எவ்வளவு வல்லமையுடையது என்பதைக் கணக்கினால் கூற முடியாது. ஆராய்ச்சி அறிவால் ஓரளவு புரிந்து கொள்ளலாம்.

நாம் பூமியைப் பார்க்கிறோம். சூரியனைப் பார்க்கிறோம். இந்த இரண்டில் ஒவ்வொன்றும் எவ்வளவு பளு அல்லது எடையுள்ளதாக இருக்கும் என்பதை உணர்ந்து கொள்ளலாம்.

அவ்வளவு எடை உள்ள சூரியனும், பூமியும் மற்ற பொருட்களும் லேசாக மிதந்து உருண்டு ஒன்றையொன்[று] சுற்றிக் கொண்டு இருக்கிறதென்பன[த] அறியும்போது இவற்றைத் தாங்கி[க்] கொண்டு இருக்கக்கூடிய சுத்தவெள[ி] எவ்வளவு ஆற்றல் உள்ளதா[க] இருக்கின்றது என்பது விளங்கும்.

பிரபஞ்ச மூலப்பொருளான ஒ[ரு] பாய்மப் பொருள்தான் சுத்தவெளி.

அனைத்தாடுருவும் அனைத்துமாகும், பேரியக்க மண்ட[ல] மூலப் பொருளானது அதன் இயல்பான நுண் அதிர்வோடு ஒ[ரு] பெருங் களமான பாய்மப் பொருளா[க] இப்பேரியக்க மண்டல[ம்] இயங்கிக்கொண்[டு] இருக்கிறது.

இந்த மூல[ப்] பேராற்றலுக்[கு] அனைத்தும் அறியு[ம்] பேரறிவும் உண்[டு]. பொதுவாக,

1. பேரறிவு
2. பேராற்றல்
3. வற்றாயிருப்பு

என்ற மூன்று தன்மைகளும் இணைந்[த] உவமையற்ற பாய்ம[ப்] பொருள்தான் சுத்[த] வெளி என்று கருது[ம்] இறைநிலை.

இதன் நுண்ணி[ய] துகள்கள் தானாகவே தன்னிறுக்கத்தால் கூ[டி] இறுக்கம் கொள்கின்[ற] போது, அதுதான் விஞ்ஞானிகள் கூறுகின்ற மூலக்கூறான விண்துகள்.

இதனை ஆங்கிலத்தில் Infinitesim[al] Energy Particle என்று கூறுகிறோம்!

இந்த நுண்ணிய மூலக்கூறுதான் அனைத்து ஊடுருவும் தன்மையை புலன்களால் உணரமுடியாதபடி பேரியக்க மண்டலம் முழுவதும் தடு[ப்]பாக உள்ளது.

## நொறுக்ஸ்!

'ஆவதும் பெண்ணாலே, அழிவதும் பெண்ணாலே' என்ற பழமொழியினை பலர் தவறாகப் புரிந்து கொள்கின்றனர். எந்தப் பெண்ணும் தன் குடும்பத்தை அழிக்கமாட்டாள். கணவனுக்கு வருகின்ற துன்பங்களை அழித்துக் காப்பவள்தான் பெண்.

-வாரியார்

தகவல் : போளூர் ஆர். பாலமுருகன்



இவ்வாற்றலிலிருந்து எழுந்த விண் என்கின்ற மூலக்கூறு எங்கு ஒன்று கூடினாலும், அந்தக்கூட்டு தன்மைக் கேற்ப ஒரு சிறப்பியக்கமாக வடிவம் கொண்டு இயங்கிக் கொண்டிருக்கிறது.

இந்த நுண்ணிய சிறப்பியக்கத்தை மூலகம் என்று கூறுகிறோம். மூலகம் என்றால் ஆங்கிலத்தில் Element என்ற வார்த்தையின் பொருளாகும்.

இந்த மூலக நுண்ணணு தன்னிறுக் கச்சூழ்ந்தழுத்தும் ஆற்றலால் விரைவான தற்சுழற்சி உடையதாகிறது.

இத்தகைய தற்சுழற்சி மூலக் கூற்றிலிருந்து வெளியாகின்ற அதே விண்ணின் கரைசலே நுண்ணலைகளாகும். அந்த அலைகள் மீண்டும் இறை நிலையோடு கலப்புறும்போது பிரபஞ்சத்தில் ஒரு பேராற்றலாக மலருகின்றது.

அந்தப் பரிணாமத்தைத்தான் காந்தம் என்று கூறுகிறோம். இந்தக் காந்தமானது அணுக்கூட்டு நெருக்க வித்தியாசங்களுக்கேற்ப ஐவகையாகத் தன்மாற்றமடைகிறது.

அவைதான் நாம் மதிப்பாகக் கூறும் அழுத்தம், ஒலி, ஒளி, சுவை, மணம் என்ற ஐந்துமாகும்.

இந்த கூட்டியக்கத்திலிருந்து தோன்றக்கூடிய நுண்ணலை மனம் என்பதாகச் செயல் படுகின்றது.

ஆகவே இறைநிலை, விண்துகள், விண்ணின் அலை, காந்தம் என்ற நான்கு தத்துவங்களின் பல்வேறுபட்ட இயக்கங்கள்தான் பேரியக்க மண்டலச் சிறப்புகள்.

இவ்வாறு இயற்கையானது எந்தப் பொருளாகவும், எந்த வடிவமாகவும், எந்தக் குணமாகவும் இடத்திற்கேற்ப மற்றும் சூழ்நிலைகளுக்கு ஏற்ப இயக்கச் சிறப்புகளாக நடைபெற்று வருகின்றது.

எனவே, இம்மனித உடலில் அடங்கிய பருவுடல், நுண்ணுடல், காந்த உடல் இந்த மூன்றும் சேர்ந்து இயக்கக்கூடிய ஒவ்வொரு இயக்கமும் அதன் விளைவுகளும் இறைநிலையின் திருவிளையாடல்களேயாகும்.

மனிதனின் இயக்கமோ விளக்க முடியாத சிறப்பு நிலைகள் பல அடங்கியது.

அதேபோன்று பிரபஞ்சத்தில் நாம் காணும் எந்தப் பொருளும் அதற்குரிய சிறப்போடு இயற்கையின் பேரறிவு என்னும் ஒளியின் மூலம் நெறி தவறாது, காலம் தவறாது விளைவுகளைக் கொடுத்துக் கொண்டே இருக்கிறது.

இந்தப் பெரும் மறைபொருளை உணர்ந்துகொண்டால் மனிதனிடம் நடைபெறுகின்ற இயக்கங்கள் அத்தனையும் இறைநிலையின் திருவிளையாடல்களே ஆகும் என விளங்கிக் கொள்ளலாம்.

(அடுத்த வாரம்)

மிக எளிய வாழ்க்கை நடத்தியவர் சாக்ரடீஸ். காலில் செருப்பு கூடப் போடமாட்டார். ஆனால் கடைகளுக்குச் சென்று அங்கு விற்பனைக்கு உள்ள பொருள்களையெல்லாம் பார்ப்பதில் அவருக்கு விருப்பம் அதிகம்.

''நீங்கள்தான் எதையுமே வாங்குவது இல்லையே! எதற்காக இதையெல்லாம் பார்க்கிறீர்கள்?'' என்று ஒரு நண்பர் கேட்டார்.

''எனக்கு வேண்டாத பொருள்கள் என்னவெல்லாம் இருக்கின்றன என்பதைத் தெரிந்துகொள்ளத்தான்'' என்றார் சாக்ரடீஸ்.

**நொறுக்ஸ்!**

# வேதாத்திரி மகரிஷி

60

# ஐந்து இரகசியம்!

ஐம்புலன்களால் எல்லை கட்டப்பட்ட அறிவை உடைய மனிதன் அந்தப் பேராதார ஆற்றலின் நுண்ணியக்கச் சிறப்புகளை அறியாததனால் எக்காரியங்களையும் அவன் எவற்றைத் 'தான்' என நினைத்துக் கொண்டிருக்கிறோனோ, அந்தப் பருவுடல் மற்றும் நுண்ணுடலால் நடை பெறுகின்றன என்று உண்மையை வேறு மாதிரியாக உணர்கின்றான்.

ஆழமாகச் சிந்திக்குமிடத்து, எப்பொருளும் நுண்ணணுவின் சிற்றுருவம்; அவ்வுருவில் நடைபெறுகின்ற இயக்கங்களோ, இறை நிலையின் ஆற்றலும், அறிவும் கூடியதால் இயங்குகின்றன. மனித மனம் பொதுவாக இந்த உண்மைகளை உணர்ந்து கொள்வதில்லை. அதனால் எந்தச் செயலையும் 'நான் தான்' செய்கிறேன் என்று இறையாற்றலை மறந்து தன்னை முன் வைத்துச் செயல்படுகிறான். இதைத்தான் தன் முனைப்பு என்று கூறுகிறோம்.

ஒரு கடல் அலையில் அதன் நீரும் அலையும் எவ்வாறு ஒன்றிவிருந்து ஒன்றைப் பிரிக்க முடியாதபடி இயங்குகின்றனவோ, அலையின் அசைவைக் கழித்துவிட்டால் நீர்தான் உட்பொருளாக உணரப் பெறுகின்றதோ, அதே போன்று தோற்றத்தில் எந்தப் பொருளாக இருந்தபோதிலும், அதன் உட்பொருள் இறை நிலையே ஆகும். அதனால் தான், இறைநிலைக்கு உண்மை என்ற வார்த்தையும் எடுத்துக் காட்ட உதவுகிறது. இந்த விளக்கங்களை ஆழமாகச்

சிந்தித்து அகக் காட்சியாகக் கொள்ளுங்கள். அப்போது, நாம் பார்க்கும் பொருட்களெல்லாம், இடங்களெல்லாம், இயக்கங்களெல்லாம் இறையாற்றல் என்ற உண்மைப் பொருளின் தோற்றங்களே என விளங்கும்.

எனவே, எப்பொருளிலும், எவ்விடத்திலும், எக்காலத்திலும், நீக்கமற நிறைந்திருக்கின்ற இறை நிலையை அகக்காட்சியாகக் கண்டவர்கள் பேரறிஞர்கள். இவர்களை மகான்கள் என்று கூறுகிறோம். மகான் என்றால் மகா+ஆன் என்ற இருசொல் இணைப்பாகும். அதாவது பெரிய மனிதன். இது சாதாரண மொழி வழக்கில் பெருமாள் என்றும் பேசப்படுகிறது. பெருமாள் =பெரும்+ஆள்.

அன்பர்களே! மனித மனம் அது அறியும் திறனில் எல்லைகளை உடையது. புலன்களுக்கு எட்டிய வரையில் அது ஒரு கணிப்பைக் கொள்கிறது. புலன்களுக்கு எட்டாமல் நடைபெறக் கூடிய நிகழ்ச்சிகள் அனைத்தும் அறிவிற்கு எட்டாமல் இழந்து விடப் படுகின்றன.

இந்த விளக்கங்களை உள் வாங்கிக் கொண்டு பல தடவை ஆராய்ந்து பதிவு செய்து கொண்டால் ஒவ்வொருவரும் இறைநிலை உணர்ந்த பேரறிஞரே ஆவார். இந்த அறிவைச் சிறப்பித்துக் கொண்டு வாழக் கூடிய ஒரே ஓர் உயிர்வகை மனிதன் தான்.

எனவே, மனிதன் இறைநிலை உணர்வோடு எதையும் நோக்க வேண்டும். அதன் விளைவறிந்த விழிப்பில் செயல்களைப் புரிய வேண்டும். உதாரணமாக, நாம் உண்ணும் உணவு ஏழு தாதுக்களாக மாறுகின்றது என்பதைப் பொதுவாக அனைவரும் அறிந்து உள்ளார்கள்.

ஆனால், இந்த வியப்புக்குரிய மாற்றம் எவ்வாறு நடைபெறுகிறது என்பதை எத்தனை பேரால் அறிய முடியும்? எந்த மனிதனுமே உணவைத் தாவாக ஏழுதாதுக்களாக மாற்றுகின்ற வித்தையினைச் செய்வதில்லையே. ஏன்?

ஒருபிடி உணவைக் கொடுத்து இதனை ரத்தமாக்கிக் கொடுங்கள் என்று சொன்னால், ஒரு விஞ்ஞானியால்கூட அதைச் செய்ய முடியாது. ஆனால் அனைத்துருவுகின்ற, அனைத்துமாகின்ற, அனைத்துமறி கின்ற பாய்மப் பொருளான இறைநிலைக்கோ, இவையெல்லாம் எளிதான செயல்களாக உள்ளன.

மனிதன் இன்பம், துன்பம், அமைதி, பேரின்பம் என்ற நான்கு உணர்வுகளுக்கு உட்பட்ட ஜீவன். அவன் அனுபவிக்க வேண்டியது அமைதியும், பேரின்பமும் தான். ஆனால் இன்பம் என்ற உணர்வை அளவோடு, முறையோடு காத்து அவன் அனுபவிக்கின்றபோதுதான், அது துன்பம் தவிர்த்த செயலாக மலருகின்றது.

அந்த இன்பமே நீடிக்கின்றபோது பேரின்பமாகவும், அறிவுக்கும் உடலுக்கும் ஒத்த அமைதியாகவும் உணரப் பெறுகின்றது. எனவே, மனிதனின் செயல்களினால் விளைவுகள் துன்பமாக இல்லாமல், விழிப்போடு, அளவுமுறை காத்துச் செயலாற்றி வாழ வேண்டும்.

- அடுத்த வாரம்